# லாடம் உரைநடை




000
:

ஆசிரியர்

**சு. அ. இராமசுவாமி**

(மை வித்தக போதினி, குறுந்தொகை வசனம்
தமிழும் தமிழரும்,
முதலிய நூல்களின் ஆசிரியர்.)


**ஒற்றுமை ஆபீஸ்**

நெ. 8, வியாசராவ் தெரு,
தியாகராயநகர்,
சென்னை-17.

விலை] 1957 [ரூ. 2-0-0

# முகவுரை

கல்லாடம் என்பது ஒரு திருப்பதி. "கல்லாடத்துக் கலந்தினி திருந்து, நல்லா ளோடு நயட்புற வெய்தியும்" என்பது திருவாசகம். இதனுற் கல்லாடம் என்பது ஒரு திருப்பதியாமென்பது தெள்ளிதிற் புலனும். கல்லாடம் என்னும் இந்நூலைப் பாடிய கல்லாடர் இத்தலத்திற் பிறந்தவராக விருக்கலாம். தலத்தின் பெயரை மக்கட்கிடுதலும் மரபு. அருணகிரி, சிதம்பரம் முதலியன காண்க. அன்றி, இடவாகு பெயராக விருப்பினும் இருக்கலாம். சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மரில் கல்லாடரும் காணப் பெறுகிருர். சிலர் அக் கல்லாடரும், இந்நூலாசிரியராகிய கல்லாடரும் வேறு வேறு புலவர்களாக இருக்கலாமென்று எண்ணுகின்றனர். இவர்கள் இங்ஙனம் கருதக் காரணம் திருக்கோவையார் சங்க மருவிய நூலாக இல்லாததே யாம். பண்டைக் காலத்துப் புலவர் பெருமக்களின் வரலாறு சென்ற வழியிலே தான், இந்நூலாசிரியராகிய கல்லாடர் வரலாறும் சென்றிருக்கின்றது.

திருவாதவூரடிகளின் திருக்கோவையார் அகப்பொருளியலுக்கு மாறுபட்டுள்ளதெனச் சிலர் செப்பக் கேட்ட இக் கல்லாடர் வெகுண்டு, திருக்கோவையாரினின்றும் நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றின் பொருள் இக்கல்லாடத்தில் காணுமா றமைத்துக் குறை கூறியார் நிறைவையடையும்படி இந்நூலை யரங்கேற்றுதல் புரிந்தனரெனவும், அக்காலை கண்ணுதற் பரமன் ஒவ்வொரு பாமுடியுந்தோறுந், திருமுடியைத் துளக்கிச் சிறப்புக்கூறினரெனவும் கூறப்பெறுகிறது. இதனைக்,

"கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச்—சொல்லாயும்
மாமதுரை ஈசர் மனமகிழ்ந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறுதரம்"

என்னும் வெண்பா விளக்குகின்றது.

இந்நூற் பாடல்கள் யாவும் சொற் சுவையிலும் பொருட் சுவையிலும் தமக்கிணையற்றன. மிக வலிய நடையி லியன்றுளதாதலின், எவருஞ் சிறிது முயன்றே பொருட் பயன் கோடல் சாலும். ஆதலின், இதனைக் “கரும்பு நிகர் கல்லாடம்” என்று கூறலாம். இதன் இத் தன்மையை யறிந்தே “கல்லா டத்தோடு மல்லா டாதே” “கல்லாடம் படித்தவனோடு சொல்லாடாதே” என்பன வாதியான வாசகங்க ளெழுந்தனவாதல் வேண்டும். இதனு டைய இத்தகைய போக்கால் இது நல் விளக்கம் பெறாது, போற்றுவா ரற்று ஒதுங்கிய நிலையில் இருந்துகொண்டிருக் கின்றது.

இதன்கண் வரும் அணிகள், கற்றூர்க்கேயன்றிக் கேட் டார்க்குங் கழிபெருங் களிப்பை யளிக்கத்தக்கன. இதன் இன் சுவையை யாவரும் இனிது துய்க்க வேண்டுமென் னும் எண்ணத்துடன், உரையைத் தழுவி இந்நூலை ஒருவாறு உரைநடையாக அமைத்துள்ளேன். இவ் வுரைநடையாற் கல்லாடத்தின் பொருட் சிறப்பை இனிது துய்க்கலாம். இறுதிப் பாடல் மூன்றனுக்கும் பத வுரை யின்மையானும், மிக முரடாக வுண்மையானும், பல அறிஞர்களைக் கேட்டவிடத்து அவர்களும் கையை விரித் தமையானும் உரைநடை அமைக்கவில்லை. நன்கு ஆராய்ச்சி செய்து, உரைநடையாக்கி மறு பதிப்பிற் சேர்க்கலாமென் னும் எண்ணத்துடன் விடப்பட்டிருக்கிறது. எல்லோரும் இந்நூலைப் படித்துக் கல்லாடப் பயனைக் காண்பார்களாக.

ஒற்றுமை ஆபீஸ்
*தியாகராயநகர், சென்னை.*

**சு. அ. இராமசுவாமி**
**(கருப்பக்கிளர், தஞ்சை சில்லா)**

உ

சிவமயம்

முருகக் கடவுள் துணை.

# கல்லாடம் உரைநடை

3297

## கடவுள் வாழ்த்து

### வெண்பா

செவ்வி திகழ்பொகுட்டுச் செந்தா மரைவதனக்
கொவ்வை யெழிற் செவ்வாய்க் குறைத்தேனே—நவ்வி
விழியானை யைப்புணரும் வேளைமத வெள்ளம்
பொழியானை யைமனமே போற்று.

## அபியுக்தர்

### விருத்தம்

வாய்ந்தபொருட் கொருபொருளாய்க் கலைவாணிக்
கருள்கொழிக்கு மன்பாய்ப் பாரின்
ஆய்ந்தமுது தமிழ்வடித்துக் கல்லாட
மெனவொருநூ லருளி யிட்டார்
தேய்ந்தமதிச் சடைப்பரமர் கருணைபெறச்
சங்கமுது செல்வர் வாழ்த்தக்
காய்ந்தபுல னடக்கியுயர் பெருஞானம்
பழுத்தருள்கல் லாட னரே.

வெண்பா

கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச்—சொல்லாயும்
மாமதுரை யீசர் மனமகிழ்ந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறுதரம்.

விருத்தம்

வடிவெடுத்து வேதமன்பிற் பாடுகினும்
மறிந்தறியா வண்ணம் வைகும்
பொடியணியுந் திருமேனிப் புனிதன்மது
ரைக்கிறைவன் புகழின் பாடல்
நெடியகவிக் கல்லாடர் பொருட்டுறையை
நிகழ்த்துதொறும் நிலவு சூடும்
முடியசைத்து நன்றுநன் றீ தெனமகிழும்
எனில்நிகராய் மொழிவ தியாதே.

— —

## உரைநடை

### யானைமுகக் கடவுள் வணக்கம்

திங்களை முடியின்கண்ணே தாங்கிய மேருமலையில் நின்றும் வீழுகின்ற அருவியானது, கருமணியைக் கொழிக்கின்ற காட்சியைப்போல; இரண்டு கன்னங்களும் வெளிப்படுத்திய மதயாற்றின் பெருக்கில் வண்டினம் புரளுதற்கிடமாகி விளங்கும் புள்ளிகளோடு பொருந்தின முகத்தினையுடையோய்!

செம்மையான கதிர்களின் கூட்டம் எழுதற்கிடனாகிய கரிய கடல் வெள்ளத்தை வெளிப்படுத்தினாற்போல, முக்கண்களினிடத்தும் நின்றும் பொங்கிப் பெருக்காகச் சிந்துகிற மத நீரினையுடையோய்!

பெரிய மலையின் முடியில் இளந்திங்கள் கிடந்தாற் போன்று, கண்ணோட்டம் மிக்க முகத்தினிடத்தில் நிறைந்த அழகுபெற்ற கொம்பினைப் பெற்றோய்!

பன்னிரு ஞாயிறுகளினிடத்தும் விளங்குகின்ற ஒளித் தீயும்; வெண்மதியை முடித்த செஞ்சடைக் கடவுள் உடலுயிர்கள் நடுங்கும்படி ஆடுதற்கிடமாகிய ஊழிக்காலத் தீயும்; தென்கீழ்த் திக்கினையுடைய தீக்கடவுள் எல்லாப் பொருள்களையும் எரிக்கிற தீயும்; உலகம் முழுவதும் வருத்திப் பரவுகின்ற சிகையினையுடை ஊழித் தீயும்; உறிக்கயிற்றில் தங்கிய, கமண்டலத்தையும், விதிப்படி தாங்கப்பெறு முக்கோலையும் துண்டிக்கப்பெற்ற துணியின் சுருக்கையுங் கைபிற்றுங்கி, இறைவனை யுள்ளத்திற் கொள்ளுவோர் விழிகள் வெளிப்படுத்துஞ் சினத்தீயும்; ஒறுத்தலையுடைய அவர்களது வாய்த்தீயும்; தந்தம் நிலையில் நின்றும் நீங்கியாண்டும் பரவாது தமதுரிமையிடத்தில் நிலைபெற்றிருக்கும்படி சிறு காற்றுலவியசைகின்ற குண்டலத்தினையுடைய அழகிய காதுகளையுடையோய்!

யானைமுகத்தினையுடைய அரக்கனானவன் தன் கிளையொடுந் தடுமாற்றத்தையடையப் பெருங் காற்றினை வெளிப்படுத்திய நீண்ட தொளையையுடைய துதிக்கையினையுடையோய்!

செவ்விய மாங்கனியை விரும்பிக், கருமிடற்றினையுடைய கடவுளை இடங்கொண்ட எல்லா உலகமாகவும் எண்ணி வலஞ்செய்த திருவடியையுடையோய்!

ஆழ்ந்த நீரையுடைய கடலினை ஆடையாகப் புனைந்த பெரிய பூமியிலுள்ளாரது எண்ணங்களையும், எண்ணுதற்கரியவாகப் பொருந்திவருந் துன்பங்களையும் அளவிட்டு முடிவு செய்தல் நின் கடமையாதலின்; நூலினாலே வரி

களையுடைய தன்னுடம்பைச் சூழக் கூட்டினையுண்டாக்கித் தான் வெளிச் செல்லுதற்கு வழியை யேற்படுத்திக் கொள்ளாது அக்கூட்டினுள்ளேயே உயிர் விடுதலால் அறிவற்றதாய கோற் புழுவைப்போலக், கடலின் அலைகள் கூடச்சிறிதாம்படி வருந்துதற்கேதுவாய துன்பத்தையுண்டாக்கும் உடலென்னுஞ் சிறை நடுவிலே புகுந்து, வாயிலிற் செல்லாது வருத்தத்தையடைகின்ற வெள்ளறிவையுடைய யாமும்; மறைகளாற் போற்றப்பெறுகின்ற நின்னுடையதிருவடித் தாமரையைப் பெரிதும்போற்றுகின்றோம். (எதன் பொருட்டோவெனின் ;) காற்றினைத் தன்னிடத் தேற்ற தொளையைக்கொண்ட வாயினையுடைய காற்ருடியும்; விரைவான நடையோடு செல்லுகின்ற பண்டியின் உருளையும் ; நீளச் செலுத்தி வலிவுடன் தள்ளப்பெற்ற நெடிய கயிற்றிற் கட்டப்பட்ட வூசலும்; சுழலுகின்ற காற்றும்; பேய்த்தேரும் ஆகிய இவை தாழ்தற்குரியவாய் நிறைந்த பிறவிக் கலக்கத்தையும் என்னுள்ளத்தில் தோன்றிய பல்லிய சொற்கோவையையும் அருள் மழையைப் பொழிகின்ற நின்கடைக்கண் பார்வையைச் செலுத்தி ஐயனே ! இப்பொழுது தெளிவாக முடித்தருள்வாயென்று நினைத்தேயாம்.

## ஆறுமுகக் கடவுள் வணக்கம்

பரந்த அலைகளையுடைய கடலை யாடையாக வுடுத்த இவ்வுலகத்திலுள்ளார், இதுதான் உலகத்தின் முடிவுக் காலமென்று சொல்லுமாறு ; பல தோள்களையுடைய சிங்கமுகாசுரனோடு வானில் நெருங்கிய உடுக்கணங்கள் உதிருமாறு செவ்விய போர்க்களத்திற் போர் செய்து, நடுவிலே கெடுதற்குக் காரணமாகிய வரத்தினால் யுத்தகளத்தில் மறைந்து ; வடவைத் தீயினது நீண்ட நாவின்

கிளைகள் விரிந்தாற்போலச் செம்பவழக் கொடிகள் படரும் அலைகளையுடைய கடலினிடத்தே புகுந்து; அகன்ற திரைகளையுடைய பரந்த அந்தக் கடலில் கிடந் தெரியும் வடவைத் தீப்போலத் தன்மாட்டுத் தளிர்விட்டுத்; திரையெறிகின்ற மலைகளைப்போலப் பல கிளைகள் விட்டுக்; கல்லிற் செறிந்த பாசிபோலக் கிளைகளிலிலை தழைத்து, வேரசைந்து பூங்கொத்துகள் அசையாமல் கீழாய் நின்ற பெரும் பகையாகிய மாமரத்தினது, ஒருடல் இரண்டு கூறும்படி விடுத்ததும், அழியாத தண்ணளியையுடைய உமையவள், முன்னே நின்று தன் பெயரைச் சொல்லிக் கற்பித்தற்றன்மையோடு வழங்கியதும் ஆயகுறைவில்லாத வெற்றினையுடைய நீண்ட சிவந்த வேல் படையையுடையோய்!

தலைகீழாக நின்ற அந்தக் கொடுந் தொழிலையுடைய மாமரத்தினது இரண்டு கூருகிய பங்கில் ஒரு கூறெழுந்து பெரிய மேன்மையினுலே கெடாத ஒரு மயில் வடிவத்தை யடைந்து, பூமியைத் தலையில் வைத்துத் தாங்கிய பல தலைகளையுடைய ஆதிசேடன், மண்ணுலகுஞ் சிறிதாம்படி விரித்த மணிப் படத்தைக் கொத்தித் தூககி விழுங்கின பல கதிர்களை வாய்கள்தோறும் வெளிப்படுத்திஞற் போல. மணி வரிசையை மண்ணிற் புகுமாறு சிதறி வருத்தலால் மேகமானது பரவப் பெற்ருேங்கிய மலையினிடத்தே ஞாயிறு விளங்கிஞற் போல, ஒழிவில்லாமல் நீண்ட சிறையை விரித்து நிற்கும் அதன் முதுகிலே உலகத்தினர் காணும்படி புகமுடனே விளங்குவோய்!

பிளவுபட்டுக் கிடந்த மற்ருெரு பங்கு எழுந்து கொடிய பகையாகி விளக்கமாகிய அழகு மாட்சிமைப் பட்ட முருக்கம்பூப்போலச், சிவந்த உச்சிக்கொண்டை விளங்கப்பெற்ற தலையையுடைய கோழியாகித், தேவர்க

ளூடல் நடுக்கத்தையடையப் பொரியைப்போல வானில் நெருங்கின உடுத்திரள்களைக் கொறித்தலால், அது விரும் பின பொருளை நாடித், தாமரையைப் பழித்த திருக்கையி னிடத்துப் பொருந்தக் கொடியாகக் கொண்டோய்!

ஒருவழியாக உள்ளத்தையொடுக்கிய நாரதமுனிவன், இரு கையாலும் நெய்யை வார்த்துச் செய்த வேள்வியால் கொடுக்கப்பெற்ற; மாறுதலையுடைத்தாய் முறுக்கோடு கூடின கொம்பமைந்த ஆட்டுக்கடாவின்மேல் வரும் மதி யினையுடையோய்!

மாறுபாட்டையுடைய இரண்டு மலைகளென்று சொல்லுமாறு முலைகளமைந்து, கூந்தற்காட்டினைத் தாங் கிய தெய்வயானையை மணந்தோய்!

சிவந்த கண்களையுடைய குறவர்கள் பெருங்காட்டி னிடத்தே வைத்து வளர்த்த பசிய வள்ளிக் கொடியானது படரப்பெற்ற அழகிய தோள்களாகிய மலையினையுடை யோய்!

இமயமலையிலுண்டாகிய பொய்கையில் மலராகிய பெருமை பொருந்திய தொட்டிலில் அறிவோடு தங்கிக், கார்த்திகைப் பெண்களினது முலைப்பாலையுண்டு; சுற்றித் திரிந்த முப்புரத்தைச் சிரிப்பாகிய நெருப்பினுல் எரித்த பெருமையையுடைய கடவுள் வணங்கி நின்று புகழ; அவர்க்கு அடிகளாகி மொழியுரைத்தோய்!

பிரமன் என்று சொல்லப்பெற்ற நான்மறையாளனை ஓம் என்னும் எழுத்தின் பொருளறியாக் காரணத்தால் நடுங்கத்தக்க சிறையில் வைத்துப், படைப்பு முதலிய தொழில்க ளொழிகையினுலே தேவர் முதலியோர் கூடித் தந்தையாகிய கடவுளுடன் வந்து வேண்டச் சிறையினை விடுத்தோய்!

மன்றுகச் செய்யப்பட்ட கோட்டங் தாங்கிய நேரி மலை விண்வழியைத் தடுக்காது மண்ணிலமுந்தும்படி மறைத்த அகத்திய முனிவன் தெளிவடையும்படி பெரி தாகிய மறைப்பொருளை விரித்துரைத்தோய்!

ஆறு திரு எழுத்துக்களையும் கூறுகிற நிலையைத் தெரிந்து, நினது திருவடிகளைப் புகழ்வோரது கண்ணி னுள்ளே விளங்குவோய்!

இரத்தினப் பிறப்பிடத்தை யறிவோராகிய மதுரை வணிகரது பெரிய குடியிலே தோன்றி, இறையனார் அகப் பொருள் என்னும் நூலுக்குப் பரணர் முதலாயினோர் கேட்கப்; பெரிய தமிழில் பரவிய உலகிலுள்ளாரறியும்படி பொருள் விரித்த அரிய தமிழ்ப் புலவனும் நீயே யாகை யால்; அறிவு நிலை நன்கு பெருத எமது சிலவாய சொற் களை நீஏற்றுக்கொண்டு, கடவுளாகிய நின்னைப் புகழாமைக் குக் காரணமாகிய கெடாத வேட்கையும், பிறவித் துன்ப மும், ஒழிக்கப்படாத காமநுகர்ச்சியும், தன்னாலுண்டாகிய துன்பமும், முறை கெட்டு நடத்தலும், தென்புலத் தலைவ னாகிய கூற்றுவன், தீப்போல் வருத்துகிற ஒறுத்தல் துன்ப மும், நரகத்திலுஞ் சுவர்க்கத்திலும் சுழலுகின்ற துன்பமும் நீண்டு செல்லாது இப்பிறப்பில் தானே முடிவு செய்து; மீளாத வீடுபேற்றை இன்றே தருவையாக என்று கூறி' வெட்சி மலர்மாலை யணியப்பெற்ற வீரக் கழல் சூழ்ந்த நினதிரண்டு திருவடிகளையும்; குழந்தை யன்பொடுந் தலையிடத்துக் கொள்ளுகிறோம்! (யாம்)



## நூல்
## (1)

[தலைவி உறுப்பு நலங் கண்டு. தமர் இற்செறிப்பரெனத் தோழி தலைமகனிடம் வரைவு கேட்டல்.]

அமுதமுங் கற்பக தருவும் முன் தாழ்தலுண்டா கையால், பின் படைக்கப்பட்ட உடலிற் கண்ணையுடைய தேவர் தலைவன துலகத்தைக் கவர்ந்துண்டற்குக் காரண மாகிய நெடிய களவினையுடைய சூரனது சுற்றம் போர்க்களத்தை விட்டு மறைதற்கிடமாக விருந்ததும் கருணை நிறைந் தொடுங்குதற்குக் காரணமாகிய கல்வி யறிவை யுடையாரது உள்ளம் அக்கல்வியால் தேக்கிய தைப் போல, நிறைந்த தேனோடு தேன் கூடானது மதி யைப்போற் கிடக்கின்றதும்; ஏழு மலையைப் பொடியாகச் செய்த ஒளியையுடைய இலைத் தொழிலமைந்த நெடிய வேற்படையையுடைய வள்ளி நாயகியின் கணவனுடைய தும்; புள்ளுடன் மகிழ்ந்த ஒலிக்கின்ற நீரையுமிழும் அருவிகளையுடையதுமாகிய திருப்பரங் குன்றஞ் சூழ்ந்த அழகிய மாடங்களையுடைய மதுரையி லெழுந்தருளிய தலையிலழகிய பிறைச் சந்திரனைத் தரித்தவனும்; பொதிய மலையினையுடையவனுகிய பாண்டியன் அன்போடு பொற் கிழியைத் தருமி யென்னும் அருச்சகனுக்குக் கொடுக்கும் படி அவன் மனக்கருத்தினைக் "கொங்கு தேர் வாழ்க்கை" என்னும் செந்தமிழ்ப் பாட்டிற் கூறி; என்னுள்ளத்திற் குடி கொண்டு வீற்றிருந்து பெரும்பயனை யளிக்கின்ற வனும்; கள்ளவிழுங் கூந்தலையுடைய உமாதேவியைச் சேர்ந்த தண்ணளியை யுடையவனுமாகிய எம்பெரு மானது செந்தாமரை மலர் போலுஞ் சேவடி நீங்காத வுள்ளத்தையுடைய மலை நாடானே!

கல்வி யறிவில்லாத கீழ் மக்களாயினோர்க்கு, அரிய கிளை களையுடைய மறைப்பொருளைச் சொன்னவரது குற்றம் பெருத்தாற் போலத், தலைவியினது முலைகளிரண்டும் பெருத்தன. பலஉயிர்களினது உடலை யழித்தற்குக்காரண மாகிய பழியையுடைய ஊனுணவினரது தவந் தேய்ந்தாற் போல; உடுக்கை யென்று சொல்லற்குரிய இடையானது மிகத்தேய்ந்தது. கடவுளைப் புகழாதாருடைய உள்ளந் தீவினையாகிய விருள் செறிந்திருத்தல் போன்ற கூந்தலும் கொன்றை மரத்தின் நெற்றுக்களை முல்லை நிலத்திற்கு விரட்டி நிலைபெற்ற இருளைக் காட்டின. வண்டுகள் படிந்து தேனுண்ட கழுநீர் மலர் போல இரண்டு கண் மலர்களும் கறுத்துச் சிவந்தன. இவ்விடத்துக் கூறிய இவை யொழிய இவளது மாறுபாட்டைக்கண்டுஇவளது சுற்றத்தினராகிய தமர், இல்லிற் செறித்தலாகிய சொல் லோடு தமியராயிருந்து உள்ளங் கொதித்துக் கண் சிவந்து கோபித்துப் பேசினர். இதுவுமன்றி ஊரிலுள்ளாரும் சில சொற்களைச் சொல்லலாயினர்.

## (2)

[சிறைப்புறத்தானாகிய தலைவன் கேட்கத் தோழி தாயறிவுகூறல்.]

திங்களின் பிளவு போன்ற அழகிய நெற்றியினை யுடைய கொடி போல்வாய்! அறம் முதலியவற்றினாலே நிறைதலையுடைய கல்வியாற் பெற்ற அறிவினையுடைய பெரியோர், பூ, மணி, யானை, பொன், திங்கள், கார் என எடுத்துப் பாடிய செம்மையான பாட்டென்று சொல்லும் படி, பூவும் மணியும் யானையும் பொன்னுமாகிய விவற்றை யெடுத்துத், திங்களையும் புயலையும் பருதியையும் அக்கவி போலத் தாங்கப் பெற்ற மலையினின்றும் தோன்றி; நன்றாகப் பரந்து வருகின்ற காட்சிக்கு உரியதாகலின்;

நீண்ட தூரம் பூமியினிடத்தில் இன்பமுண்டாக்குகின்ற, பெரியநீரோடு கூடிய வையை நதி வளைந்த நீர்மையை யுடையமதுரையானது உடலாகத், தானுயிராகப்பொருந்து கின்ற இறைவன்; கொன்றை மலரை மாற்றி ஐந்து வாயையுடைய பாம்பாகிய காப்பையும் நீத்து, விரித்த சடையினையும் மறைத்து, விடைக்கொடியையும்விட்டுப் பாண்டியனாகி வேப்ப மாலையைச் சூடி, அழகிய பொற் கலன்களைப் பூண்டு மணிகள் பதித்துச் செய்யப்பட்ட முடியினைக் கவித்துக், கயற்கொடியைக் கையிலேயுயர்த்தி எல்லா வுலகங்களையும் புரத்தற்குக் காரணமாகிய மிகுந்த அருளினையுடைய இறைவனது சீருடைய வருள் போல; மணத்துடன் மலர்ந்த தாழையையுடைய நெய்தனிலத்து நொச்சிப்பூ வுதிருகின்ற மிகுந்த இருளையுடைய நடுயாமத் தில்; கெடாத வெற்றியினையும் பொன்னாற் செய்த பூணி னையுமுடைய, தலைவனது மேகத்தைச் சுமந்து கிடந்த கொடிஞ்சியினையுடைய பெரிய தேரினது அடையாளங் காணப்பட்டதென நீங்காத கற்பினையுடைய அன்னை; தன் கண்ணையொத்த என்னைப்பார்த்துக் கள்வரைக்காண் கின்றவர்களது உள்ளம் மாறுபட்டாற்போலச், செம்மை யான மனம் திரிந்து உள்ளந் துடித்து, இப்பேச்சை வெளி யிற் பேசாது மனம் புழுங்கினாள். (ஆதலின் களவொழுக் கத்தினை யறிந்தனள் போலும்.)

## (3)

[தோழி தலைவியின் வழியொழுகி நீ யாற்றவேண்டுமென்று வற்புறுத்தல்.]

கிளையினை யுடைய பவழக்கொடியை ஒப்பாய்! நினக் குத் துன்பத்தினை யுண்டாக்கிய சுற்றத்தினர்க்குக் கொடுத் தற்பொருட்டால்; பகையோடு பொருந்திய தொன்று தொட்டு வரும் வழக்கை யொன்றாகச் செய்தலும் பிரித்த

லும் போர்செய்தற் கேதுவாகிய பகைமையைக் காட்டலும், உட்பகையை உண்டாக்கலும் பிறருணர்த்துஞ்சொல்லின் பயன்தெரியாது கூட்டிக்கொள்ளுதலும், ஒருகாரியத்திற்கு இரண்டு பகையை நீங்காதுண்டாக்குதலும் ஆகிய இவற்றைச் செய்யாத அமைச்சனுடன், சேராத அரசனது நாடு கரிந்தாற்போன்ற காட்டைக் கடந்து நடந்துபோனார்க்கு, இதழ்நிறைந்த தேனை அழகிய தாமரை துளித்தாற்போலக் கண்ணிலிருந்து சொரிகின்ற நீருடன் கூடி வருந்தினால்; உலகத்தில் இலக்கணமாக நிறுத்தும் பொருட்கூறு ஒரு பஞ்சத்தி லிறத்தலால் பாண்டியனுங் கடைச்சங்கப் புலவர்களும் பொருளிலக்கணமின்றி மயங்குதலையடைந்த காலத்தில், கடலமுதத்தை யெடுத்துக் கரையில் வைத்தாற்போல எல்லா நூல்கட்கும் பழமையாகிய பெரிய மறைகளை யருளிச்செய்த திருவாக்கினாலே விரிவினையுடைய பொருட்சுவைத் தமிழை "அன்பினைந் திணையெனத் தொடங்கி" அறுபது சூத்திரமாகச் செய்து பாண்டியனுக்கும் புலவர்களுக்கும் அழகிய தமிழைத் தெளியக்கொடுத் தருளின கடவுள்; தீப்போல் விளங்கும் கண்களையுடைய புலியின் தோலாடையை யுடையவன். அவனது அழகிய பெரிய ஊராகிய மதுரை மாநகரினைப் புகழாதார் சுற்றம் போலத், தாமரையானது நிறைந்த நீரையுடைய மடுவில் ஒருதாளில் நின்று தவஞ்செய்து; அன்புடன் பெற்ற திருமகளைப் போன்றாளுக்கு நேர்ந்த வேறுபாடென்னவென்று, ஒரே படியாக ஐயுறுவர் நொதுமலரெல்லாம். (ஆகையால்நீ ஆற்றியிருப்பாயாக.) (நொதுமலர் - விருப்பு வெறுப்பற்றவர்.)

## (4)

[தினை முதிர்வு சொல்லி வரைவு கடாதல்.]

அண்டங்கள் எல்லாவற்றையும் படைத்துக் காத்த கன்னியாகிய உமைக்கு முனிவுண்டாகையாலே; திருநுத

லில் தோன்றித் தியாகச் சுடுங்கண்ணினுல் ஆயிரக் கணக் காகிய பெரிய படையமைத்த வழகிய கையுடன், வெற்றி யைப்பெறும் வீரனுகிய வீரபத்திரனைப் படைத்து அவ னுலே, உள்ளத்தின்கட் டோன்றும், அருளும் தெய்வ மென்னும் நினைவும், நீங்குதற்குக் காரணமான அறி வின்மையோடு பொருந்திய மனத்தையுடைய தக்கன் நடத்திய மகத்தி னவிர்ப்பாகத்தை யுண்ணப்புகுந்த நான் முகன் முதலிய தேவர் கூட்டங்களின் போர்செய்கின்ற கடல்போன்ற படையினை; ஊமன் கண்ட அருமையான கனவைப்போல வெளிப்படாதாக்கிய கூடற்பெருமானது; அருவியையுடைய பொதியமலைச் சாரலின் பக்கத்து மானி னங்காள்! எமது பெரிய குற்றத்தை இப்பொழுது சொல் லச் சிறிது பொழுதுநின்று கேட்பீராக! மிகுந்த மதம் ஊற்றுக வெழுகின்ற இரண்டு கபோலத்தினையுடைய கொலை செய்யும் மலைபோன்ற யானையின் மத்தகத்தி லமிழ்ந்து உடலிலே யுருவியோட; மதிக்கும் பிறையொத்த வில்லை வளைத்து மயில்போல்வாரது கண்போன்றசுடுகணை யைச்செலுத்துகின்ற எம்முடைய குன்றவாணர்களதுமன மறிய, இப்புனத்திற் குடியாகச் சிறந்த வேங்கையார், ஒழுங் காகத்தம் மலரிதழ் விரித்து நிழலையுங் கொடுத்து அவரீன்ற நிரம்பாச் சொல்லையுடைய சிறுவர்களுக்கும் பொன்னணி புனைதற்குக் காலமும், தினைகொய்யும் நாளென்பது குறித் துக்கருதப்பட்டதனுல், வரிதங்கிய முதுகினுடைய அணி லின் வால்போல வளைந்த கரிய தினையின் கதிரினைக்கொய்ய வும், நன்றி செய்தாரிடத்துப் பிழைசெய்தவர்க்கு உய்வில்லை யென்கின்ற உண்மை கெடாத நிலையை நின்று காட்டிப், புனத்தி லறுத்ததாளினும் மயிலுங் கிளியுங் குருவியும் வீழ்ந்து தங்குவதைப் பார்த்தும் வலிய மனத்துடன் செல் லத் துணிந்தோம்.

## (5)

[தோழி தலைவியின் இளமைத் தன்மையைக் கூறி மறுத்தல்.]

சிவந்த வேலினையுடையாய்! தலைவன் தலைவியென்னும் இருவரதுடலும் ஒன்ருய்ச் சேர்ந்து உறக்கம் முதலியனவுங் கொள்ளாமல், அளவாகப் பொருந்திய இன்பநிலை உண்டாக்குங் காலமும் ; தடைசெய்யுங் கரையைக் கடந்த காமக் கடலுள், புல்லினது நுனியில் தங்கிய பனியென்று சொல்லும்படி நிலைத்த லில்லாமல் ; பசலை யுண்டாதற்குக் காரணமாகிய ஆசைப் பெருக்கம் நிலைபெருமல் ; வளைந்த காயினைவிட்ட புளியையு முண்ணுமல் ; சிவந்த வாயும் மாறுபட்டு வெளுத்த வாயாகாமல் ; இல்லத்தின்கண்ணுண்டாகிய புகை பட்டதனுல் உண்டாகிய கரிய மண்ணைத் தோண்டிப் பவழம் போன்ற வாயினுல் சுவையும் பாராது; பொற்குடத்திநுச்சியிற் கருமணியைப் பொருத்திஞற்போலக் குங்குமமணிந்த முலையும் தன்னிடத்துள்ள கண்கள் கருது; மலரும்படி விரிந்த தாமரைமலரில் தங்கும் கயலைப்போல வரிபரந்து களிப்பினையுடைய கண்களுங் குழியாமல் ; பிள்ளைப் பேற்றுக்குக் குறிக்கப்படும் பத்துத் திங்களும் செல்லாமல் ; இரணியனுனவன் நாராயணு என்னும் சொல்லைத் தன் புதல்வன் கூறற்கவென்று சினத்தலால்; தூணுற் பெறப்பட்ட பெருமை பொருந்திய நரசிங்கமாகிய குழந்தைக்கு;அரக்கர்கூட்டத்துடனேபோர்செய்து விளையாடத் தீயையுமிழும் ஆழிப்படையைக் கொடுத்தருளிய நிருமலன் ; மதுரை மாநகரில் மாறியாடும்படி தூக்கிய விரிந்த தாமரை மலரை யொத்த குவிந்த திருவடியையுடையோன் ; அந்தப் பெருமானது பேரருளினுலே விளைகின்ற அந்தச் சீரினைப் பெருதார் போலவும்; விளக்கமாகிய அமுதம் கலங்கியதைப் போலவும்; வாய் குவித்துக்

சொல்லிய இளஞ்சொல்லும் விளங்காது. திருத்தமாகிய மயிலிறகின் அடியை வரிசையாக வைத்தாற் போன்ற பற்களுந் தோன்ருது (நகை தோன்ருது) தெய்வமுண்டென்பதை யொப்புக்கொள்ளாதாரது அறிவின்மை பொருந்திய மனமென்று சொல்லும்படி விரிக்கப்பட்ட கூந்தலும் அழகிய முடியாகச் சேராது. பார்வையினுலேயே சினையை விளைக்காநின்ற இரட்டை மீன்களைப்போலப், பார்வையின் தொழில்களையும் கூர்மையான கண்கள் கொள்ளமாட்டா. ஓரரசன் மறுபுலத்தில் செய்யவேண்டிய பகையைக் காலம் பார்த்தடக்கினுற் போலக் கொலைத்தொழிலை வெளிப்படுத்திக் கிளம்பும் முலைகள் தோன்றவில்லை. மொழியின் குறிப்பையும் அறியாதவளாக விருக்கிருள். ஆதலால்; அழகிய பெண்ணின் தன்மை இவ்விதமிருக்கிறபடியால் இவள்பொருட்டுக் குறைபிரத்தலையும் வருதலையும் நீ விடுவையாக.

## (6)

[மகள் நிறை கண்டு செவிலி வியந்துரைத்தது.]

பகைவருயிரை யுண்டதனுற் பொருந்திய முடைநாற்றத்தோடு கூடிய நிணத்தைப் பொருது, தலையையுமுடலையுமசைத்துச் சாணைவாயில் தன்வாயைத்துடைத்து, நெய்யில் மூழ்கி அந்நாற்றம் அகன்றிருக்கும் நெடிய வேலையுடைய விடலை; அந்தணர் அருக்கியங் கொடுக்கும் நீரினுல் அருளாகிய கருக்கொண்டிருந்து மாறுதலில்லாத மந்திரமாகிய கதிரை நீண்டகாலம் பொருந்த ஈனும் ஞாயிற்றினது உடல்வழிபோய், நினைவாக நாட்டப்பெற்ற நடுகல்லின் கண்ணே நின்ற வீரரது தீயானது சினந்தாற்போன்ற

செருக்களத்துண்டாகிய வெற்றியை யெழுதிய வாசகத்தைப் பார்த்து மகிழ்ந்ததும் இவ்விடமே. இரட்டை விளக்கு எரிகின்றாற்போல விளங்கும் நிலைபெற்ற இரண்டு கண்களையும், பெரிய வாயினையும், நிலத்திலடிக்கும் வாலினையு முடைய சினந்தங்கிய புலியைக்கொல்லும்பொருட்டு, அதன் வாயினிடத்துச் சேர்த்திட்ட பெருங்கடிப்பு என்னும் படையும் இதுவே; செடியைப்போன்ற தலையினையும் கரிய வுடலினையும் இடியை யொத்த குரலினையும் உடைய வேடர் மறைந்து நின்று அந்த கொலையைப் பார்த்து மகிழ்ந்த இடமும் இந்த இடமே; மேன்மைதங்கிய புண்ணிய தீர்த்தங்கட்குச் செல்லாநின்ற அரிய மறையினையுடைய தவத்தினர் நன்மையாகக்கொண்ட ஆசிகூறியதும் இவ்விடமே கறுத்தலையுடைய கீழ்வாய்ப்புறத்தோடு கூடிய பாம்பினது எரிநெருப்புப்போன்ற நஞ்சினை, மலையில்மறைந்துள்ள மருந்துமாற்றிய அந்தச் செய்கையைப்போலச்; சிறிய இடையினையும் பெரிய முலையினையும்,பொன்னுலியன்றவளையினையு முடைய என்பெண்ணானவள், தன்னிடத்துண்டாகிய கற்பினை வழியிடத்திற் கவரும்படி மதியாமல் நெருங்கின கொடியகொலைத்தொழிலையுடைய வேடுவர், புண்ணடைதற்குக் காரணமாகிய போர்க்களத்தில் கைவளர்ந்த தலைப்படையினரது உடல் தூளாம்படி காட்டின இடமும் இவ்விடமே; குரவமலரினைத்தரித்த குழலை விரித்திருந்து பாதிரி மலரையணிந்த இடமும் இக் கற்பாறையிடமே: ஒட்டு விட்டுக் காய்ந்த பெரிய அடியினையுடைய நெடிய ஆச்சாமரத்தினது கிளையினிடத்தில், வளைந்த வாயினையுடைய கரிய பருந்தானது; உதிருகின்ற சிறையினையுடைய கழுகினுணவாகிய, ஊனினைத் தட்டிப் பறித்துண்ணக் கண்டு, நின்று மகிழ்ந்த இடமும் இவ்விடமே; மாணிக்க மலையையும் மரகத மலையையும் மகிழ்ச்சியுடன் ஓரிடத்திற் கண்ட காட்சி போலவும்; அழகிய சிகையினையுடைய தீயையும்

இருட் கூட்டத்தையும் மகிழ்ச்சியுட னேரிடத்திற் கண்ட காட்சி போலவும்; இளமையினையுடைய ஞாயிற்றினையும், அதனிடை மேகத்தினையும் மகிழ்ச்சியுட னேரிடத்திற் கண்ட காட்சிபோலவும்; சிவந்த இதழையுடைய தாமரையையும் கரிய இதழையுடைய நீலோற்பலத்தையும் மகிழ்ச்சியுட னேரிடத்திற் கண்ட காட்சி போலவும்; எவ்வுயிர்க்கண்ணும் நிறைந்த செம்மையைக்கொண்ட திருமேனியில், பல்லாயிரங் கோடி யண்டங்களையும் வரிசை முறையாகப் படைத்துக்காத்த உமை இடங்கொண்டு வீற்றிருந்த நிலைபெற்ற அருளினையுடைய கடவுள்; மலை வடிவத்தைக்கொண்டாற்போன்ற மெய்யினையும்வாளினையுமுடைய அரக்கர் வெள்ளத்தையும், சூரனையும், கிரவுஞ்ச மலையையும், நெடிய கடலாகிய கிடங்கையும் ஒன்ருக வுயிரையுண்ட அழகிய வேற்படையையுடைய முருகன்; முதன்மையாகக்கொண்டு வாழும் திருப்பரங்குன்றம் பொருந்தி யுயர்ந்த மதுரைமா நகருக்கிறைவன்; அவன் திருவடியினைத் தலையில் தரித்தற்குக் காரணமாகிய கொள்கையை யுடையாரைப்போல, நீண்ட பாலைநிலத்தை நீங்கவேண்டித், தம் காலால் சுடும் தீயை நீக்கிய பாலையைத் தாண்டிய காற்குறியையுடைய விடம் இவ்விடமாதலால் அவர் சென்றே நெறியிதுவே.

## (7)

### [உடன் போக் குணர்ந்த நற்ருய் வருந்தல்.]

தோன்றி வெளிப்படாத சிறிய முலையினையுடைய கொடி போன்ற என் பெண்ணனவள்; இமையானது மணிகள் விளங்கும் பெருங் கண்ணைக் காத்தது போல

விருந்து, விழித்த விடத்து விழித்தும் துயின்ற விடத்துத் துயின்றும் தன்னை நீங்காது நின்று புரந்த என்னையும் விட்டு நீங்கினும் நீங்குக. உடலானது பலமணிகளையுடைய அணிகலன்களுக்கு அழகளித்தாற் போலத் தானு நீங்கா தழகளித்த லில்லாமல், பக்கஞ் சூழ்ந்தோங்கிய மகளிர் கூட்டத்தையும் விட்டு நீங்கினும் நீங்குக; பிணிமுக மென்னும் யானையினையும் மயிலினையும் ஆறு திருமுகத் தினையும், போர் முகத்தி லெடுத்த ஒப்பற்ற வேலினையு முடைய முருகக் கடவுளுக்கு; வானளவு மோங்கிய மலை யிடத்து முன்றிலின் கண் அக்குமணியணிந்த பெண்ணும், தெய்வ வெறி பிடித்ததாக ஆடும் அவனும், வேலனும், கட்டுவிச்சியும் சிறந்த மதியினையுடைய முது பெண்டிரும், குறிஞ்சிநிலப் பறையாகிய தொண்டகப் பறையை யடிக்க, வெறியாட்டுப் பறை முழங்க ஒருங்கு கூடிக் குறையாத பூசையை முடித்த பின்னர் நின்றேற்றுக் கொண்ட செவிலித் தாயையும் விட்டு விட்டு நீங்கினும் நீங்குக; கரிய தலையினையுடைய நாகணவாய்ப் புள்ளும் சிவந்த வாயினையுடைய பசுங்கிளியும், அழகிய தூவியினையுடைய மயிலும், வெண்மையாகிய அன்னமும், மானும் ஆகிய இவைகளுடனுண்டாகிய இன்பத்தினையும் விட்டு விட்டு நீங்கினும் நீங்குக; செவந்த மலரினையுடைய இலவமரத்தின் பிளந்த காயினுள்ளிருந்து வெளிப்படும் பஞ்சுக் கூட்டம், புகையுடைந் தெழுந்தாற்போல வானிற் சுழல, இலைகரிந்த கூவை யென்னும் மரத்தின் பக்கத்தில் சிறகுகள் கரிந்த பருந்தும் ஆந்தையும் தத்தம்குஞ்சுகளோடுதவழப், பிளந்த கவட்டினையுடைய ஓமை மரத்தின் உயர்ந்த கிளைகளிலிருக் கிற வளைந்த கண்களையுடைய கூகைகளும் மனமயங்கி வாய் குழறு நிற்க; ஆசை போலத் தணியாத தீயைப் போன்ற பசியைத் தணிக்கும்படி, காளிக்கு முன்னே காவ லாகக்காட்டி வைத்துப்போகின்ற ஆழ்ந்தகண்களையுடைய

கரியபேயானது பிள்ளைகள் கண்ணை மூடும்படி, வேகு முட வின் சின்னங்கள் வெளியிடத்தில் தெறிப்ப; நெடியதாளினை யும்சிறிய இலையினையு முடைய வாகை மரத்தின் நெற்றுக்க ளொலிக்க ; இடுகாட்டில் சூறைக் காற்றுத் திக்குகளினின் றெழாமல் தீயை முகந்து கொண்டு ஏறி, விட்டு விட்டுச் சுழலும் பெரிய அழல் பொருந்திய காட்டிலும் தன்னைக் கருதும் என்னுளத்தினும் ஒருபாலிருக்கும் பசுங்கொடி போல்வாள், ஆடற்கேற்ற பாட்டைப் பாடப் பூமி நெளிய ஆடிய பெருமான் ; பூமியிடத்துப் பிறக்கும் உருவினை யுடையாரது விரியாத அறிவினை ஐம்புல விடயங்கள் வெளிப்படாது மறைத்த சேர்க்கையைப் போலத், தடா கங்களிற் குளிர்ச்சி கொண்டு உறைகின்ற தெளிந்த நீரை ; வள்ளைக் கொடியும், செந்தாமரையும், கள் வெளிப்படும் அல்லி மலரும், பசிய இலையும் வெளியே தெரியாது மறைக்கு மிடமாகிய மதுரையம்பதிப் பெருமானுடைய, சிவந்த திருவடியை விட்டு வாழ்கின்ற அறிவுக் கண்ணில் லார் தம்மினும், முற்படாத ஒப்பற்ற நிலையில் இருவரு யிரும் ஒருயிரென்னும்படி உடலிரண்டாகப் பெற்றதனுல் வந்த நல்ல பாதுகாப்பினை யுடைய தோழியையும், போரிற் செல்லும் விருப்பினர் தமதுடம்பு பெற்றதனுலுண்டாகிய இன்பங்களைப் பார்க்காத தன்மையைப் போலப் பக்கம் பாராது, எங்களோடு கூடப் பின்னே விட்டு விட்டு ஒரு அயலானது அன்பை மேற்கொண்டு, செல்லுதற் கரிய தீயைப் போன்ற பாலை நிலத்தில் செல்ல உள்ளம் பொருந் தியது எவ்விதம் ? (இனி, யான் எவ்வாறு இவள் பிரிவை யாற்றுவேன் ?)

## (8)

[தலைமகள் செலவு நினைந்துரைத்தல்.]

உயிர் புகுதற்கிடமாகிய உடலிடந்தோறும் உடலிடந் தோறும்: காலைப், பாடகஞ் சூழ்ந்து கிடந்தாற் போலச் சூழ்ந்து நின்ற பழவினை, சூல்முதிர்ந்த மேகம் முழங்கா நின்ற ஏழு மலையினும் புகுதற்குக் காரணமாகிய கட்டினையு டைய சூரபதுமனின் உடலைக்கொல்லும் இச்சைகொண்டு தொடர்ந்துள்ளே புகுந்து, பசுமையான கடலினிடத்துக் கண்டு, மாமரத்தோடுங் கொன்ற மணிகட்டிய நீண்ட அழகிய வேலினையும், சேவலின் அழகிய வடிவமெழுதப் பெற்ற கொடியினையு முடையோன் காப்பாகக்கொண்டு எழுந்தருளியிருந்த திருப்பரங்குன்றஞ் சூழ்ந்த மதுரையம் பதியில் வாழும் இறைவன்; தொடர்ந் துயிர்களைப்பற்றும் நஞ்சு பொருந்திய மிடற்றினையுடையோன்; புண்ணியந் தழைத்ததனால் முன்னேயொரு நாளில், பெருமையை உடைய விரலினை விருப்பத்தோடு நிமிர்த்துச் சேர்த்துக், குழையாநின்ற உடலினையும் விரிந்த தலையினையு முடைய இடக்கை முழங்காநிற்பப்; பெரிய வாயினையும் ஒரு முகத் தினையு முடைய பதக மென்னும் வாத்தியத்தை ஒரு விரலால் தெறித்ததனாலும், ஐவிரலைக் குவித்ததனாலும் ஒலியைப் பெருகப் பண்ணப், பெரிய உடலின் மேல் தலை பெற்ற முழவ மென்னும் வாச்சியம், நான்முகமும் நடு முகமும் தட்டி ஒலியைப் பண்ணுநிற்க; ஓரிடத்தைத் திறந்து குமிழினையுள்ளே கட்டியவுடலினையுடைய சல்லரி என்னும் வாச்சியம் அங்கையினாலும் நுனி விரலினாலும் தாக்கி முழக்காநிற்ப; யானைக் கன்றினடி போலக் கயிறு பொருந்திய துடி யென்னும் வாச்சியம் இருவிரற் செரு நிலையுயர்த்தி இரட்டாநிற்ப: இரண்டு தலையுங் குவிந்த

நெட்டுடலினையுடைய மத்தளமென்னும் வாச்சியம் ஒரு முகத்தினைத் தாழ்த்தி மற்றொரு முகத்திலிரண்டு கோலினால் ஒலியைப் பண்ணத்; தாமரை மலர் வடிவமாக எழுதிய இருபத்தைந்து வரையில் இரண்டிரண்டு விரலாக அணைத்துச் செவ்வையாக நிறுத்தி, மூன்று முக முள்ள கயலுடன் மயிர்க்கயிறு கட்டிய கல்லவடத்திரளென்னும் வாச்சியம் விரற்றலையினால் முழங்க; மரக்கால் போன்ற ஓர் வாய்க் கோதை என்னும் ஓர்கட்பறை, முகத்தினுந் தட்ட மூக்கினும் அடிக்கக், கருதாநின்ற பதஞ்சலி வியாக்கிரபாதர் என்னும் இரு முனிவர்க்காகத் திரு நடனஞ் செய்த பெருமான்; அவனது திருவடியினை நினையாமையால் வந்த கருவினையுடைய மாக்களது நெஞ்சிருளினுங் கடந்து நீடித்த வலிய இரவில் தோழீ!; எம்மை எதிர்தலின்றி எதிர்ப்பட்டிருந்து நீர் அரிதாக வந்தீர் என்று பெரிதாக ஒரு இனிய வார்த்தையை வெற்பனால் பெற்றேமாயின்; மறையின் வழியே ஒழுகாத அரசன் வாழுகின்ற நாட்டைப் பழி பொருந்தியதனால் வந்த பாவம் சேர மறைத்தாற் போல, எல்லாப் பொருளையு மறைத்த இருளையுடைய நடு யாமத்தில் யாம் தாமதிக்காது போகவும் உரிமையை உடையேம்.

## (9)

### [தலைவி அறத்தொடு நிற்றல்.]

மீன் முதலிய பலவுயிரினையும் தனித் தனியாகப் படைத்துத் தன்னிடத்திற் பரப்பிக் காட்டுதலால் பிரமனாகியும்; தன்னிடத்திலுண்டான உயிரனைத்தையும் ஒழிந்த உயிர் எல்லாவற்றையும் காத்தலால் அழகைக் கொண்ட கரிய மேகம் போலும் விட்டுணுவாகியும், தான் வரம்பாகக்

கட்டிய கரையழிய வழித்து நீரைத் தலையில் தரித்தலின் சிவபிரானுகியும், சோலையும் மணிகளும் சங்கங்களும் பெறலால் அதிகமான கண்களையுடைய தேவர்க்கரசனுகியும்; முத்தியினையும் நான்கு வேதத்தினையு முடைய முனிவர் மூழ்கும்படி மறையாநின்ற நீரைக் கொடுத்தலால் வேதியனுகியும்; மீன்களுங் கொடிகளும் விரிந்த நிலமைந்தும்; தேன் போலினிக்குந் தமிழும் திருமகள் பொருந்திய மதுரையும் பொருந்துதலால் பாண்டிய வரசனுகியும்; நவரத்தினங்களாகிய மணிகளைத் திரைகளாகிய கைகளாலெடுத்து நல்லதன்மை விளங்கக் காட்டுதலால் மேலாகிய இலக்கணத்தைச் சொல்லுதற்கு அறிவு திரியாதவணிகனுகியும்; விரும்பப்படும் உழவுத் தொழிலும் வித்தும் நாற்றும் தழையப் பண்ணுதலின் வேளாண்மைத் தலைவனுகியும்; விரிந்த திரையினையுடைய வையையாகிய திரு நதி சூழ்ந்த மதுரையம் பதியில் தங்கிய குவளை மலர்போன்ற கண்டத்தினையுடையவனது இரண்டு திருவடிகளையும் வணங்காதார் பொருந்திய தொழிலே போலக்; கரையேறு நின்ற திரையினையுடைய கடல்; தாழையினிடத்தைச் சேர்ந்த செய்கையமைந்த விளையாட்டுப் பாவையுடனே யென்னையெடுக்க அக்கடலில் நின்றும் என்னையெடுத்தும்; உங்கள் மணல் வீட்டுக்கு விருந் தென்று புழுதியாலமைந்த சிறு சோற்றைப் புதிதாகச் சேரவுண்டும்; தாளினையுடைய கோரைப் பாவையை எனக்குப் பண்ணிக் கொடுத்தும்; வளைந்த உடலினையுடைய தாழை மடலை முறித்துக் கொடுத்தும்; கவர்ப்பட்ட பவழப் பாவைக்கு மாலை சூட்ட அழகிய நீலோற்பல மலரைக் கொண்டுவந்து கொடுத்தும் நின்றவனுகிய ஒரு காளையுண்டென்றால், இங்ஙனம் வெறியாட்டுச் செய்வது நங்குடிக்குப் புகழேயல்ல. (ஆதலின் வெறியாட் டெடுத்தலைத் தடுப்பாயாக.)

# (10)

[தேர் வரவுகண்டு மகிழ்ந்து கூறல்.]

திங்களும் ஞாயிறு விண்ணும் மண்ணும் நீரும் தீயும் வளியும் மதிக்கும் ஆன்மாவும் என்று சொல்லும்படி, எங்கும் நிறைந்த முக்கண்ணினையுடைய பெருமான்; மதிக் குலத்தவனாகிய மலையத்துவச பாண்டியன் பெற்ற பாவை போல்வாளாகிய தடாதகையை, அழகிய பெரிய திருமண மாகக்கொண்ட அந்த நாளில்; அடிசிலாகிய பெரிய மலையை, நன்றாகத் தின்று தொலைத்தற்கரிய வுடலினையும் சிறிய நகையினையும் குறிய காலினையுமுடைய பூதமாகிய குண்டோதரன்; நீர் வேட்கை பொறாது வருந்திய நீர் விருப்பத்தையடக்க, மறிந்து வீசும் அலைகளையுடைய பெரு நதியாகிய வையை வரவழைத்துத் தண்ணளி பண்ணியருளியவரும்; அழகிய மதுரைமாநகரிலே எழுந் தருளியவருமாகிய நல்ல குணத்தினையுடைய பெரிய கட வுள்; அறிவு முதிரப்பெறாத உள்ளத் தாமரையையும் அறிவுபெறப்பண்ணும் செவந்த வடியினைப்பெற்ற உள்ளத் தாமரையையுடைய, நமது ஊரனது பொன்னாற் செய்த கொத்தினையுடைய மாலையைக் கட்டி விளங்கும் மணிகள் கட்டிய தேரானது நமது வீதிபிடத்து வந்தது. வரலால் நம்மேலுண்டாகிய குற்றம் தீர இரண்டு பக்கமும் எழுந்து வடித்த வேலைப்போன்ற விழியினையும் சிறிய இடையினை யும் பெரிய முலையினையுமுடைய பெண்காள்! அத்தேரை வணங்குவீர்களாக. தலைவனையுந் தலைவணக்கஞ் செய்வீர் களாக. அத்தேரைச் சூழ்ந்து கொள்ளுவீர்களாக. அது வேயுமன்றி அத்தேரைத் தொடருவீர்களாக. உருளையி லெழுந்த புழுதியை உட்கொள்வீர்களாக. நறுமணம் பொருந்திய மலர் மாலையை அன்பொடு முடிப்பீராக. அது

வன்றி முண்டக மலரை, முகில்போன்ற முலையிடத்தில் தரிப்பீர்களாக. அதுவேயுமன்றி அவனை நீவிரெதிர்கொள் வீர்களாக. எதிர்கொண்டதன்றிப் பணிவீர்களாக. பணிவ துடன் அவனைப் புகழ்வீர்களாக; புகழ்வதுடன் அவ னிடத்துச் செல்வீர்களாக. மலையினுமுயர்ந்த அழகிய தோளிற் செறிந்த கருப்புர வாசத்தைக் கொண்டுவரும் காற்றினும் பொருந்துவீராக. முன்னுள் பேரழகானது, இவனிடத்திலிருக்கவேண்டுமென்று பெரிதும் விரும்பிச் செய்த அரிய தவத்தைக் கண்ணால் உள்ளகத்திடத்துக் காண்பீர்களாக. அதுவன்றி அவனை நினைப்பீர்களாக. அவ னெதிரே புகழ்ந்து பூவையுஞ் சுண்ணத்தையும் வீசுவீராக. அவனையாழிற் பாடுவீராக. இங்குக் கூறிய இவையேயல்லா மல் அவனைக் கலப்போமென்றெ றுழுவீர்களாக. அவன் கண்ணளியையுங் காண்பீர்களாக.

## (11)

### [கல்வி நலங் கூறல்.]

தனக்குரிய நிலைமையினின்றும் மாறுபடாத நிலைமை யானும், பலவுலகமும் மேற்கொண்ட ஒப்பற்ற கூறுபாட் டானும், அறிவும் பொறுமையும் உண்டாகும் நிலைமை யானும், பிரம விட்டுணு ருத்திரனென்னும் முததேவர்களும் காவலாயிருத்தலானும, பருத்த அடியினையுடைய மகா மேருவாகியும்; இவ்வளவு பொருளுளவென்று ஆராய்தற் கருமையான விரிவானும், அமுததையுந் திருவையுங் கொடுத்தலானும், பல பொருண் மார்க்கமும் தனனிடத திற் பயிலுதலானும், முள்ளினையுடைய கொம்பினால் பகையை வெற்றி கொள்ளுகின்ற சுறவம் அதிரும் சங் கத்தை வெல்லுதற்கிடமாகிய கடலாகியும்; நிறைந்த அவ

ரவருடைய உள்ளத்தில் நிகழ்ந்தவைகளையும் நிகழ்கின் றவைகளையும் கருதக் கொடுத்தலானும் வானுலகத்தின் கண் உள்ள சந்தானம், தேவதாரம், கற்பகம், மந்தாரம், பாரிசாதம் என்னும் ஐந்தருவாகியும், இரகசியப் பொருளை வெளிப்படுத்தலானும் கலைமகள் குடியாகவிருத்தலானும், உள்ளத் தாமரையில் உறைதலானும் பிரமனாகியும், உயிர் கள் விரும்பி வேண்டிய பொருள்களைக் கொடுத்தலானும், அவரவர் அறிவை பேன்மையாகப் பாதுகாத்தலானும் பூமி முழுவதையுமளந்த திருமாலாகியும்; ஊழிக் காலத்திலே அசையாதிருத்தலானும், மந்திரம், வியாகரணம், நிகண்டு சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் ஆறங்கத் தையுந் தன்னிடத்துண்டாக்கி எல்லோருமறிய வுதவும் பெருமையானும்; உமாதேவியை இடப்பாகத்தில் வைத்த சிவபிரானாகியும்; அருளாகிய வழியைக் கொடுத்தலால் இருவிழியாகியும், கற்பார் கற்றதனால் குறையாது நிறைந்த உள்ளத்தைவிட்டுப் பிரியாமலுண்டாதலால் அருளுக் குறைவிடமாகியும், அறிஞர் கூடிய மன்றத்தில் முதன்மை யாகி நல்வினை தீவினைகளைக் கெடுக்கும் புண்ணியம் பொருந் திய கல்வியினை உள்ளத்தில் விரும்பும் மாக்கள், பிறைச் சந்திரனைப்போலும் நெற்றியினையுடையாய்! திருநடனஞ் செய்யுங் காற்சிலம்பொலியை யிரு செவியிலுங் கேட்டலை யுடைய மேற்றிசைக் கோவாகிய சேரமான், "மதிமலிபுரிசை" என்று தொடங்கும் பாட்டினையுடைய திருமுக மிதனைப் பெற்றுக் காண்பானாகவென்று கூறி; அன்பே வடிவமாக வுடையவனும் இனிய இசை பொருந்திய வனுமாகிய பாணன்பெற, நிதிமிக்களிப்பானாக வென்று பொருந்த விடுத்தருளிய மிகுந்த தவத்தினர் வணங்கும் மதுரைக் கிறைவனது, இரண்டு திருவடிகளையும் பெற்றவர்களைப் போலப் பெரிய அறிவு மிகப் பெறுவர்.

# (12)

[முன் நிகழ்வுகளைச் சொல்லி ஊடல் தீர்த்தல்.]

குரவ மலர் மலர்ந்த கூட்டமாகிய இருளைப்போலுங் கூந்தலையுடையாய்! நாமிருவரும் ஒரு காலத்தில் எரிகின்ற பாலை நிலத்திற்போய், விரிந்த தலையினையும் தொங்குகின்ற தனங்களையும் வெளுத்த வாயினையும் உடைய பாலை நிலப் பெண்களுக்குக் கிடைக்காத புதுமையான விருந்தென்று சொல்லும்படி பொருந்திச், சுருட்டி வைத்த தோலை விரிப்பச் சிறுநகை புரிந்தும், அவர் கொடுக்கும் தினைமாவினைத் தின்றும், நீண்ட நிலையினையுடைய கிணற்றில் தெளிந்த நீரைச் சுரைக்காயாலமைத்த குடத்தினு லெடுத்துண்டும், கடலானது அடிக்கடி செய்த ஒலியைக் கேட்டும், நடக்கின்ற மலையைப் போன்ற யானையின் தந்தத்தினிடத்துத் தலையினை வைத்தும் பெற்ற உயர்ந்த அந்த இன்பத்திற்கு வேறு உவமையில்லை. உண்டெனின், சந்திர வமிசத்தினின்றுந் தவரு து வந்த பாண்டியனுகி மூன்ருகப் பொருந்திய முலையினையும் சிறியநெற்றியினையும் உடைய அழகிய மீனுட்சியை நான்மறையாளன் மணவினை செய்யத் திருமணஞ் செய்து உலகத்தையாளும் விதியினையுடைய நல்ல நாளில், மதுரைமாநகர் நடுவில் இருப்பிடஞ் செய்து அன்பராயினுரை வருத்தும் பிறவியைக் கெடுக்கும் தன்னருட் குறியை நிறுத்திப் பூசனை செய்த தேவநாயகன்; மதுரை வாழ் இறைவன்; மணம் வெளிப்படும் இருதாளாகிய தாமரையால், உள்ளத் தாமரையை மலர்த்திப் பொருந்தினர் அடையும் இன்பமே உவமையென்று சொல்லுதலல்லாமல், வேருென்றினையும் உவமை கூறுதல் பொருந்தாது.

## (13)

[திங்களொடு புலந்து கூறல்.]

கொலைத்தன்மையினையும் கூர்மையினையும் உடைய மருப்பென்று இரண்டு பிறை முளைத்தாற் போன்ற தந்தத்தினையும், புள்ளியமைந்த முகத்தினை யுமுடைய யானை ஒரு தரம் வந்தெதிர்க்க, அதனுடைய துளையுள்ள கையை வெட்டியும், தேன் பொருந்திய இதழினையுடைய குவளை மலரையொத்து நின்று, எல்லாரையும் வருத்துகின்ற கண் மலர்ந்தாற்போன்ற நெடிய சுனையிடத்தில் ஆழப் புகுந்து எடுத்தளித்தும், பொருந்திய பிறவியின் போக்குவரவுபோல, இரண்டுவிதமாகத் திரியும் நீண்ட கயிற்*றூ*சல் கயிறற்றத னால் வருந்தியபொழுதில் முன்போலச் செய்து நல் வார்த்தை கூறியும், உயிர்தந்த விருப்பத்தினையுடைய பெரு மையிற் சிறந்தோனானவன், தனியே வந்து எமது கண்ணைப் போலப் பொருந்தி எமது கண்ணுக்கெதிரே இடையாமத் தில்; உயர்ச்சியினையுடையோய்! பாதியாகப் பொருந்திய பெண்ணினை வடிவாகவுடையவர்க்கு விடமாகிய அமுத முண்டாக்கும் கடலாகிய மடைப்பள்ளியினிடத்தில் தோன்றியும், எட்டுத் திருவடிவத்துள் ஒரு திருவடிவமாகி யும், மூன்று கண்களில் அருட் கண்ணாக முறைபெறப் பொருந்தியும், இது பகையென்னாது அடிமுடியைக் கண் டும், நல்வினையையுண்டாக்குந் திருநீற்றைப் போல விளங் கும் ஒளியை வெளிப்படுத்தியும், நின்ற நீ, பிறையான காலத்து நின்னைத் தொழுது பெறும் நன்மையால் உனக் குச் செய்யும் நன்மை யொன்றுள்ளது. அஃதென்ன வெனின்; தண்மை பொருந்திய ஒவ்வொரு கலையாக ஒடுங்கி நின்று ஆயிரம் கதிராகிய கையினையுடைய ஞாயிற்று மண் டலத்தை யடைதலால்; வளருகின்ற கவியினைப் பாடுஞ் சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மர் முன், சமயவாதி

கருத்தின் வழி கூறுது, உலக நடை கூறிப் பொருள் இதுவே என்று கூறிய திருவள்ளுவருக்குச், சிறப்புப்பாயிர மாக முதற் கவியைப் பாடிய முக்கட் பெருமானது மதுரை மாநகரில், அங்கயற்கண்ணம்மையுடனே தோன்றி நிறைந்த வன். அவனை நீண்டகாலம் ஆராய்ந்தறிந்து இருவகைப் பற்றுமில்லாமல் அடங்கின பெரியோர்களைப்போல நீயும் ஒடுங்கி, இஃதிறைவன் கூடலாதலின் இங்ஙனம் கூறிய நிலைமைகளை யறிந்து நன்கு அமைவாயாக.

## (14)

[தலைவன் வரை வெடுத்துரைத்துத் தலைவியைத் தோழி மகிழ்வித்தல்.]

எதற்கும் அசையாத பெருத்த அடியி யுடைய பொன் மலையாகிய, மகமேருவென்னும் ஒரு காலாற் சுமக் கப்பட்ட ஆகாயமாகிய பந்தரினிடத்து, நான்கு திசையுங் கவிழ்ந்த மேகமென்னுந் துணியைப் பரப்பி, அழகிய இந்திர தனுசை வளைத்து வாயிலாக்கி, வண்டாகிய நீல மணியை வரிசையாகச் சேர்த்த கொன்றை மலராகிய பொன்மாலையை வரிசை வரிசையாகத் தூக்கி நெடிய காயாகிய கவரியைத் தூக்கிக், காற்றால் அலகிட்டு, மேகத் தால் நீர் தெளித்து, நான்கு திக்கிலுள்ளாரும் வணங்குத லுற்ற செல்வம் பொலிய மரகத நிறம்போலும் நிறத்தினை யுந் தண்டினையுமுடைய காந்தளாகிய பெண் மலராகிய விளக்கையேந்த; பகை நரம்பில்லாமல் உறவு பொருந்திய நரம்பும், இணையா நரம்பும், நட்பாம் நரம்பும், கிளையா நரம் பும், வியப்பினையுடைய ஏழிசையுமாகப் பொருந்தும் முல்லையாழிசைக்குச் சுருதியாக வண்டுகள் முழங்கிப்

பாணர் கூட்டத்தைப்போல் முல்லைப் பாட்டெடுப்ப; மேக மாகிய வாத்தியம் ஒலிக்கப் பசிய தழையைப்போன்ற பீலி யினை விரித்துக் கூட்டமாக மயில் ஆடுதலைச் செய்யவும்; தான் களவ மாலையையணிந்து; இடைப்பெண்கள் இழுத் துக் கடைதலால் சிதறிய தயிரைப்போலக் கிடந்தனவாகிய காளான்கள் பரவித், தன்னுடலை மறைப்பப் பிறகு பிடவம் பூவைப் பரப்பிக் காயாம் பூவைச் சிதறி, முல்லை நிலமாகிய திருமகள் இந்திரகோபமே வாயாக மலர்ந்து, நல்ல கலி யாணமுண்டாகும்படி நாளமைத்துக் கூப்பிட, முன் கையில் வரிகள் பொருந்திய வளையல்களை இடுந்தோறும் இடுந்தோறும் கழலும்படியாகப் பிரிந்த நமது ஒப்பற்ற தலைவர், ஒலியினையுடைய காட்டாற்றின் கடிய விசையைத் துரத்திய புட்போல, நிலந் தீண்டாத போக்கினையுடைய குதிரைகளைப் பூட்டப்பட்ட தேருக்கு முன்னாக; அவமதித் திகழ்வாரஞ்சப், பணிவார் தந்த வளவியவினங்களை மடக்கி நம்முன் தோன்றினராதலின், மடப்பத்தினையுடைய மகளே! நீ முன்னொருகாலத்திலே வருத்துகின்ற கொலைத் தொழிலுக்குப் பொருந்திய கரியமேகம் போன்ற நிறம் பெற்றவனும் ஒப்பற்ற வில்லையுடையவனும் ஆகிய கண் ணப்பனென்னும் வேடன்; அரிய மறையினை யாராய்ந்த சிவகோசரியார் சாற்றிய சிவந்த மலரை விருப்பத்தோடு செருப்பினையுடைய காலால்தள்ளி, வாயென்னும்குடத்தில் மிகுதியாகவெடுத்துவந்தநீரினால், குடத்துநீரினால் அஞ்சன மாட்டுவதைப்போல நீராட்டிப், பின்னல் பொருந்தும்படி யாகப் பொருத்திய தனது தலைமயிரினிடத்துக் கொணர்ந்த கொத்தாகிய பூவினை விண்ணிடத்துச் செல்லும்படி அழ கிய திருமுடியிற் சாத்தி; வெள்ளிய வாயினாலே மென்று தின்று பார்த்த நிணமுடைய கருந் தசையைத், திருமுன்பு வைப்பதற்கு முன்னரே அதனை அமுதாகவுண்டு மகிழ்ந்து அவ்வேடன் எச்சிலுக்கு மேலும் விருப்பத்தைச் செய்

கின்ற பெருமான், அவனுடைய மதுரையை நின்று வணங்கினவரது குலத்தினரைப்போலப்; பூங்கொத்தாற் கட்டப்பெற்ற மலர் மாலையையும் முத்த மாலையையும் புனைவாயாக. செறிந்த இருளைக் கெடுக்கும் ஒளியினையுடைய மாணிக்கத் திருவென்னும் பணியும், குளிர்ச்சி பொருந்திய பிறையென்னும் பணியும் தலையிடத் தணிவாயாக. கையில் அணிய அணியக் கழலுமளவினையுடைய நிரையான வளைக் கூட்டமும் தோள்வளையும் அவைகளோடு ஒன்றாக அணிவாயாக. நட்புக்கொண்டு உள் பகையினையுடையார் குடியைப்போல உறவு பெருமகிழ்ச்சி செய்யாது. இகழ்தற் கேதுவாகிய நகையினையுடைய உள்ளத்தையும் கொலை செய்வார் மனத்தையும் பொருந்திய அறியாமையாகிய இருளென்னும்படி பொருந்தியதும் ஐந்து விதமாக முடிக்கப்படுவது மாய கூந்தலினையும் அழகுபெறும்படி செய்வாயாக! விருந்தினரையு முடன் கொண்டுண்ணும் பெரிய தவத்தினரைப்போல, நீங்காத செல்வத்தினையுடைய நலத்தையும் இன்பத்தினால் விளக்கமாகும்படி முறைமையோடும் எய்துவாயாக.

## (15)

[அழுங்கு தாய்க்குரைத்தல்.]

கரிய கொடியினையுடைய அடம்பும் தாழையும் சூழ்ந்துள்ள பனைக்குடியினையுடைய பரதவர் கலத்தோடு மடியச், சுரிந்தமுகத்தினையும் சிவந்த வாயினையும் கருவினையுமுடைய சங்கங்கள் தெறித்துவிழக், கழுவினது நுனி போன்ற கூரிய வாயினையும் பெரிய கண்ணினையு முடைய பனை கிடந்தாற்போன்ற உடல்முதலியவைகள் துணிபடக்;

கரியவுடலினையும் கண்ணையுமுடைய யமனானவன், கோபித்தெழுந்த அருமையான உயிர்களைக் கவருகின்ற கொள்கையைப்போல நீண்ட வுடலினையும் பெரிய வாயினையுமுடைய சுறுமீனைக் கொன்றும்; நீண்ட கடலைக் கலக்கும் ஒரு மீனை, மலைகள் வரிசையாகக் கிடந்தாற்போன்ற அலைகளையுடைய கடலிற் புகுந்து, நெடிய சடையிற் கிடந்த சிறிய பிறைக் கொழுந்தும், கரிய மேகமும் வெண்மையானதென்று சொல்லும்படி அழகிய கழுத்தின் கண்ணுண்டாகிய விருளும் திங்களைப்போன்ற நெற்றியிடத் துண்டாக்கப்பட்ட தீயாக விளங்கும் கண்ணினையும் மறைத்து, ஒரு சிறுகுடியிற் பிறந்த வலையனாகி, இப்பொன்னாற் செய்த மணிகளைத் தலையின் கண்ணுடைய வலையை வளைந்த கையினிடத்திலெடுத்து மீனைப் பிடித்தவனும், அறிவும் அருளும் உடையவனும், நமது தலைவனுமாகிய மதுரைமாநகரோனது கூடன் மாநகரை வணங்காதார் கூட்டம்போல மயங்கித், தன் குணம்போல இருவரையும் குடிபோகச் செய்த ஆயைப்போல் இவளுள்ளமுந் தவறுபட்டதாயிற்று.

கல்லாகி வளரும் மலையைப்போன்ற தோளினையும் நல்ல உள்ளத்தினையும் உடைய தலைவனும், நூல்களைக் கற்றுணராமையால் தவறுகளைச் செய்கின்றவர்களுடைய உள்ளம்போன்ற கூந்தலையுடைய தலைவியும், இம்மனையின் கண் தோற்றப் பொலிவோடு நன்கு புகுந்து அழகிய மணத்தைச் செய்ய வருமிடத்து, நாளுங் கோளுங் குறித்துச் சொன்ன மறையினை யோதிய வாயையுடைய பார்ப்பன மகனும் பழுதில்லாதவனாக, சோதிட நூலைக் கொடுக்கும் கலைமகள் தோற்றத்தைப்போலச் சொரிந்த வெள்ளலகினையுடையவரும் குற்றமற்ற வாய்மையினை யுடையவரும் உடலினைத் தொடும் தூதலக்கணத்தினால் வரும் வழியைக் கருதிய முதுமையறிந்த பெண்டிரும் தீங்கற்றவர்களாக.

பெருங் கூட்டத்தினிடத்து நின்று அவர் பேசுவதை யாராய்ந்தறிந்து, மணஞ் செய்யவரும் வழி நற்சொல்லாகக் கேட்ட நல்ல புத்தியினை யுடையவரும் பெரியராகுக.

உண்மையினையுடைய அவ்விருவரும் ஆராய்ந்த மலரைத் தெரிந்தெடுத்துப் பூசித்துச் சிறந்த தெய்வ பலி யைச்செய்து தெய்வத்தை வாழ்த்தி நல்ல திருவினையுடைய ராயினர்.

## (16)

[வெறி விலக்கல்.]

எனது பக்கத்தி லிருக்கின்றவர்களும், எனக்கேற் பட்ட ஏதத்தினை யறிந்தவர்களும், பலருக்கும் ஏற்பட்ட தனை முன்னரறிந்தவர்களும், நெடிய கண்ணையுடையவரும் ஆகிய நீங்கள்; யானொரு காரியஞ் சொல்லுகின்றேன். இதனை நன்றாகக்கேட்பீர்களாக. பிறையினிடத்துண்டாகிய வமுதம் இடப்பக்கத்திலிருக்கும்பசுங்கொடிபோல்வாளது அழகிய நுதலில் தோன்றிய குறிய வியர்வை யொழுக்கைப் போல வுண்டாகப்; பொய் பேசுவாரது உள்ளம் போல நஞ்சத்தை நெஞ்சஞ் சிந்தக்; கங்கையின் துறைகொண்ட ஆயிர முகங்களும் அண்டத்தினது அழகிய சுவரில் பொருந்திய அழுக்கை யிறைத்துக் கழுவுவதென்று சொல் லும்படி சுற்றக்; கொக்கினிறகு அந்தப் பெரிய கங்கையி னிடத்தில் எறியுந் திரையாக அந்தக் கங்கையினிடத்திற் சேரக்; கையிடத்திற் கொண்ட, சிவந்த தீ மாணிக்கத்தைக் கொண்டு வளைத்த கோட்டையாக ஒளியைப் பரப்பத்; தன்னாற் செய்யப்பட்ட அழகிய பொன்னாகிய அண்டத் தைத் திரித்தாற்போலச் சிவந்த சடைகள் எட்டுத்திக்கு மளந்து கொண்டனவாகப் பரந்து சுழல; எல்லா வுலகத் தும் விளங்குகின்ற மூன்று கண்களும் மேருவின் முடியைக்

சூழ்ந்த ஞாயிறுகளாக; மதுரை மாநகரிலே ஆடிய அமுதம் போன்றவராகிய சொக்கநாதப் பெருமானை உள்ளத்திலே கொண்டு களித்த தொண்டர்களைப் போல; வெறியாடு மிக்களத்தில் மதுவினை யுண்ணப், போன பிறவியில் வினை யினையுடையார், மணம் வீசும்படி உண்ணுத லமையும். வேலைக் கையிடத்துக்கொண்டு வெறியாடு மவனும் வெறிக்களம் போதல் பொருந்தும். குறி சொல்பவளாகிய கட்டுவித்தியானவள்; முறத்திலே பொருந்திய நெல்லை யெடுத்து இவள் கொண்ட நோய் முருகனால் வந்ததென்று குறியுரைத்த படியினாலே; இறுகக் கட்டிய வெறியாட்டுப் பறைகள் ஒலித்தலுஞ் சரி. வெண் சிறு கடுகினைத் தீ யொடுங்கூட்டி நெய்யிடத்துப் புகை செய்தலும் பொருந் தும். இவைகளல்லாமல், பல தொழிற்கு யான் இவ் வண்ண நின்று மாறு கூறுதலில்லையாதலால் இவை நிற்க யாங்களெப்போதும் ஆடும் மலைச்சாரலாற்றில் ஒரு நாள மிழ்ந்த, அதுகாலை தோன்றி உட்புகுந்து கட்டியணைத் தெடுத்ததனாலும்; யாங்கள் காக்கும் அழகிய வனத்திற் புகுந்ததும்; ஒரு திங்களை இரண்டு பிளவாகச் செய்து இரண்டு கபோலத்தினுஞ் செருகினாற்போன்ற ஏந்துகின்ற கோட்டினையுடையதுமாகிய யானை, எம்முயிரைத் தொலைக் கப் புகுந்த இறுதிநாளில், ஆங்குத் தோன்றிக் கையின் கண்ணிருந்த நெடிய வேலால் அதனைக் கொல்லுதல் புரிந்ததனாலும், யாம் பெறுமுயிரிரண்டையும் பொருந்திக் காத்தளித்த மகமேரு போன்ற நிலைபெற்ற தோளி யுடை யான், தந்தமையா னுண்டாகிய துயரிருப்பத் தாய் தந்தை யர் கூறும் பெயரோடு பேய்க்கோட் பட்டாளென்று வேறு பெயரிட்டு, ஆட்டுக்கடாவினுயிரை யுண்ணும்படி நெருங்கி வந்திருந்த தெய்வங்கற்ற அறிவை, இவள் பிழைக்கும்படி கூறினால் ஒரு நெஞ்சில் இடம் போதாது.

# (17)

[உலகியல்பு உரைத்தல்.]

குன்றத்தின் கண்; கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே தோன்றிய பழமை மிக்கதாகிய குடியினையுடையவனை நோய் முதலியவற்றான் வருந்தாமல் யானெடுத்து வளர்த்தும், கையினிடத்திலே துயிலச் செய்தும், மானின் குட்டியோடு விளையாடுதலைச் செய்வித்தும், பொன்னாலாகிய கழங்கினை யாடச் செய்தும், பாவை சூட்டச் செய்தும், நாகண வாய்ப் புள்ளின் சொல் கேட்கச் செய்தும் உடைமையாகச் செய்த அறிவின்மையை யுடையோள் யானென்று, எம்முன்னே சொல்லிய இம்மொழிக்குப் பெருமை பார்த்தால் அதற்குச் சிறுமை உண்டு.

நெருங்கிய அலைகளையுடைய பாற்கடல் வயிறுநொந்து பெற்ற செய்ய திருமகள் திருமாலுக்குத் தலைவியாக, மக வால் வரும் இன்பங்கள் திருப்பாற்கடலாகிய திருமகளின் தாயினிடத்துச் சென்றவனல்ல. அன்றியும் விடிதற்குக் காரணமான வெள்ளி முளைத்தாற் போலத் தோன்றிய முத்தமும் விரும்பியோர்க் குரிமைப் பொருளாகவே அத னால் வரும் இன்பமும் அதன் தாயாகிய கடலினிடத்துச் சென்றனவல்ல. அலைகளையுடைய கடலைக் குடித்தற்குக் காரணமாகிய கையினையுடைய அகத்தியர்க்கும், திங்களின் பரம்பரையிலே வந்த பாண்டியனுக்கும் நெஞ்சத்தில் அமுத ஊற்றெழுந்து களிப்பினை யுண்டாக்குந் தமிழாகிய கடலை உரிமை யாகக் கொடுத்த தாய் ஆகிய பொதிய மலைபெற்று நெடிய முதுகு வருந்தி வளர்த்ததும், கல்லைப்புடைத் தெழுகின்றது மாகிய சந்தன மரமென்னுங் குழந்தையானது, அணியும்

பெருமை பொருந்தியோர் உறையும் ஊரிலே புகுந்தால் திரும்பி அம்மலையின் பக்கம் சென்றதில்லை.

கண்ட பொருளினைச் சொல்லிய பள்ளிக் கணக்காயரின் உள்ளமாகிய தாய் பெற்ற, புறத்தில் நிறைந்த கலைமகளைக் கொண்டு வாழ்வாரிடத்துத் தனக்கு அருகாகக் கண்டும், அவர் மனமாகிய தாய் கைக்கொள்ளக் கண்டேம் இல்லை.

பெருஞ் சேற்றினையுடைய கழனியாகிய தாய், கரும்பாகிய மகவைப் பெறுங்காலத்துக், கொள்ளுவோர்க் கல்லாமல் அவ்வயலாகிய தாய் அதனைத் தன்பாற் சேர்த்துக் கொள்ளாது.

தென்றற் காற்றானது அழகிய வாவியிடத்திற் சஞ்சரித்துக், கட்டவிழ்ந்த தாமரையில் அடியினை மறைத்த தேனை, விளரிப் பண்ணைப்பாடும் வண்டோடுண்டு கமுகஞ் சோலையில் வந்து வீற்றிருந்து மணத்தையுடைய மலர்ச் சோலையில் சிறிது துயின்று, மயக்கம் நிறைந்த ஆசையால் இயக்கங்கொண்டு பொருந்திய திருமாலின் அகன்ற மார்பில் கூட்டப்படாத செஞ்சாந்து தாங்கியதைப்போலப், பெரிய மேகங் கொடுத்த செவ்வந்தி என்னும் பெயரைக் கொண்ட காலத்தில், மெல்லென்று வீதியில் இயங்குதற் கிடமாகிய பழமை பொருந்திய மதுரைமா நகரில் வந்தருளிய மூன்று திருக்கண்களை யுடையவன்.

காமனைக் கண்ணுற் சுட்டும், நான்முகன் தலையை நகத்தாற் கொய்தும், அச்சத்தினையுண்டாக்கும் காலனை அலரின் தன்மையைக் கொண்ட அடிகளால் அடர்த்தும், அவரவர் செருக்கைத் தணித்தவன். விட்டொளி வீசும்

மாணிக்க மலையைப் போல்வான். அவனது ஒரு பக்கத்தில் அடங்கப் பொருந்திய பசுங்கொடி போல்வாளை வளர்த்த பெருமை பொருந்திய இமயமலையாகிய தாய் உள்ளத்தில் துன்பங்கொண்டு அவளைத் தொடர்ந்ததில்லை.

மேற் சொல்லியது இருக்கட்டும்; பத்திரகாளியின் திரு முன்னே நட்ட சூலத்தினுச்சியில் நின்றும் உண்டாக்கிய தீக்கொழுந்து தொடர்ந்துபோய், வானினுச்சியிற் பட்ட ஞாயிற்றின் மெய்யில் தாக்குதலால் உண்டாகும் வெப்பத் தைத் தணிக்கக், குற்றமில்லாத புகழ்பொருந்திய பச்சைக் குதிரையாகிய காற்றினை அழகிய பிடரிமயிர் சிலிர்த்து நிற்ப, இரு கால்கள் வயிற்றிலிருந்து வாயினிடத்துத் தோன்றினாற்போல முகத்துக் கருகாகச் செல்ல முடுக்கி; மேல் கடலில் குளிக்கும் தழலினதுண்மையை நாவினை யுடைய வாயாலும் சொல்லப்படாத பாலையிடத்தில்; தம் மிற்பெறும் இன்பத்தைக் கற்புநிலை தவறாது பெற்றுப் பொருந்தி முற்றியது காரணமாகத் தலைவனுடன் போன வளால், அழகிய ஊரைவிட்டு வருந்தி உண்பதுமில்லாமல் திக்கெங்கு மொலிக்க வாய்விட்டரற்றித், துன்பத்தை யடைந்தது பேதைமை காரணமாக வந்த வறிவே.

## (18)

### [மகிழ்ந்துரைத்தல்.]

வரையின் உச்சியினு முயர்ந்த நெடிய தோளையுடைய தலைவன், வினையதற் கெல்லாம் மறுமொழி கொடாமை யினாலே வாடி நீங்காமல், நின்றும் ஊடுதலையடைந்து ஆற்றுவிக்க விரும்பியும் தாமரை மலர் போன்ற கண்ணால் என்னிடத்தில் அளவளாவும் பொழுது அக்குறியை

மனத்திற் பொருந்த அறிந்தும்; இந்தத் தழை பூமி அந்தரம் சுவர்க்கமென்னும் மூன்றுலகத்தும் பெறுதற் கரியதென்று நினைத்துத் தலைமையாகிய உண்மை கருதிக் கூறியும் வளமையுறக் கொடுத்த பசிய தழையானது; முன்னங்களவுக்காலத்தில் இகழ்ந்தாரது மனங்கெடும்படி, பெரிய திண்ணிய தட்டினை மிகக் கட்டிய மணமுரசம் ஆர வாரிக்க; மணவழகைக் கொண்ட பேரணியானது பெரிய அழகை மறைத்ததென்று, முலைக்கண்ணுகிய வண்டு பொருந்தித் தேன் நுகர்ந்து களியாமல் அவ்வண்டு, விளங்குகின்ற முலையாகிய இரண்டு பொற்றாமரையரும்பிப், பூத்த நெஞ்சாகிய வாவியிற் பொருந்தக் குறையாது பெருகும் நிறமாகிய வெள்ளத்துள் விண்ணிலெழுந்த மதியைப் பிறையாக்கிய முகமாகிய முழுமதியிடத்துண்டாகிய விழியாகிய கரிய கயல்கள் மறிய; உச்சிக்குடுமியினையுடைய பார்ப்பார், வேகத்தையுடைய ஓமத் தீயை வளர்த்துச் சிவந்த இடங்கடோறும் வெள்ளிய பொரியைச் சிந்த; மனமகிழ்ந்து கூடுதற்குக் காரணமாகிய தண்ணளிமிக்க ஓமத்தீயைத் தாயருள்ளம் மகிழ மும்முறை சுற்றி, அம்மியினிடத்து வெள்ளைப் பூவைப் பரப்ப, இலவம் பூவை நிறத்தால் வருத்திய சிவந்த காலைப் பிடித்து, மகிழ்ச்சி பொருந்திய உள்ளத்தோடும் மெதுவாக வைத்துத், தோல்வியை யடையாத இருவருங் காத்ததனுல் வந்த கற்பினைப் பொருந்தக்காணும் சான்ருயினுர்போலத், தலைவியிடப்பாகந் தனக்கு வலமாக நிறுத்திச் சுற்றத்தார் சூழும்படி அருந்ததியைக் காட்டி, விளக்கினை யழகாக வெடுத்துக் குலத்தோர் வாழ்த்தும் வாழ்த்தொலி பெருகத் தாலியினைத் தரிக்குங் காலம்வரையினும், குங்கும மரத்தினது கொம்பில் வாடுதலையுடைய பூவைப்போலும் வளைவினையுடைய செய்ய காலையும் பாட்டினையுமுடைய வண்டினது அரிந்தாற்போலும் பிடரியில் நிறமும் ஒளியும் பொருந்திய

மரகத மலையானது கல்லென்று சொல்லும்படி கிடப்பக் கூறப்பட்ட திருவுடலையுடைய திருமாலுக்கு ஒருகரம் விரும்பிச், சோதியாக வளராநின்ற வலப்பாகத்தைக் கொடுத்த நித்தன். பதஞ்சலி முதலோர் மனமுங் கண்ணுங் கனியும்படி விரும்ப வெள்ளியம்பலத்தில் நடிக்கும் புதுமையையுடைய தலைவன்; பழைய வேதங்கட்கு முதன்மையானவன்; ஒழுக்கத்திலே நிலைபெற்றவன்; இத்தன்மையையுடையவனது சிவந்த கால்களைக் கண்டவர்களைப் போல; விளக்கத்தாலும் புதுமையாலும் வேறுபெடுத்துக் கூறற்கருமையாய் அறிவுடையோர் காணும் குறியாயிருந்தன. (தலைவன் தந்த தழை மணம்புரி காலம்வரை குறியாயிருந்தனவென்று கூட்டுக)

## (19)

[தலைவியின் கற்புநிறையை அறிதற்பொருட்டுப் பிறை தொழுகென்றல்.]

தாமரை இடத்து வாழுந் திருமகளைப் போல்வாளே! பிறைத் திங்களானது வெளிப்படும் மலை, விழும்மலை இரண்டும் பக்கமணிகளாகப் பெருங் காற்றுகிய மூச்சினை விட்டு, மழையாகிய மதத்தினை ஒழுக்கி, உடுக்களாகிய புள்ளி நிறைந்த ஆகாயமாகிய யானைமுகத்தில் தூய்மை பெறத் தோன்றிய வளைந்த கோடாயினும், அது சொல்லத் தொலையாத பல மீன்கள் நிலைபெற்ற ஆகாயமாகிய கடலில், உலகத்தார் இருட்கடலேறி வெளிச்சக் கரையடைய நிற்குந் தோணியாயினுந், தலைவரோடு கூடுதற்குக் காரணமாகிய காமக்கடலை நீங்கக் கரை செலுத்துந் தெப்பமாயினும், ஐந்து கணைகளையுடைய காமன் தேன் பொருந்திய

மாலையினை யணிந்த கூந்தலையுடையார் பிறந்தநாள் விழவில் உள்ளம் மகிழும்படி செய்து வளைத்த கரும்பு வில்லைப் போலக் காணப்பட்டதாயினும், திருமால் முதலாகிய தேவரெல்லாங்கூடி இழுத்துக் கடைந்த பாற்கடலில் அமுதத்துடனே பிறந்த உரிமையினானும்; நின் திருநுதலின் அழகைக்; கண்ணாடி, நிழலைத் தன்னிடத்திற் காட்டினாற்போல வான் தன்னிடத்துக் காட்டிய பெருமையானும், எல்லையின்றிப் புனையும் பெருஞ் சிறப்புடைய அணிகலனுள் தலைமை பெறவிருந்த நிலைத்த புகழானும், பூமியனைத்தும் நிறைந்த பல வுயிர்கட்கு ஆராய்ந்து அமுதத்தைக் கொடுத்தலாலும்; திருப்பாற் கடலில் உறங்கும் திருமால் கிடந்தாற்போலச், சுதையமுத்திய மாடத்திடத்து அகன்ற இடத்தைப்பற்றி நெடிய கரிய மேகங்கள் கிடந்து மிகுந்த நீரைச் சொரியும் கூடல் மாநகரில் வீற்றிருந்த நடனத்தை யுடைய கடவுள்; ஆயிரமாகக் கூடிய முகமெடுத்து மண்ணினிடத்தைத் தோண்டித், திக்கு நிலைகளை மயக்கி மிகுந்த வெளியோடு ஒளியினையுடைய பொன் கொத்தை விரித்தாற்போன்ற, கொத்தாக மலர்ந்த கொன்றைமாலையும் தாளியு மறுகும் வெள்ளிய இதழையுடைய எருக்கமாலையும் கரந்தை மாலையும் வன்னி மாலையும் பொருந்திய செஞ்சடையில், ஒரு பக்க மடங்குங் கங்கையிலாடுதற்குக் காரணமாகிய மிக்க தவத்தானும்; அந்நெடிய சடையில் மாலையென விருந்து உலகந் தூற்றுதற்குக் காரணமாகிய குற்றமொழிந்த உயர்வானும் அழகிய ஆகாயத்தை இடமாகப் பெற்ற இப்பிறையை விரும்பி வணங்குவாயாக.

## (20)

[ஆற்ருமை கூறல்.]

மலையினது உச்சியினு முயர்ந்த தோளினிடத்தும், தீயை வெளிப்படுத்தும் வேலினிடத்தும், குறையாத காதலால் சிவந்த திருமகளையும் வீரலக்குமியையும் கொண்ட மதியல்லாமல்; எல்லா வுயிர்கண் மாட்டுஞ் செல்லும் அன்பும் உன்னை விட்டுப் பிரியேனென்ற ஆணையும், நட்புடைமையும்; எவ்விடத்தும் அறங்கடவாத நடுவு நிலைமையும், எதினுந் தடைப்படாத அறிவும் உடையை நீ யாதலால்; இடையில் பாதியை வெளியே காட்டும் ஆடையை உடுத்தும், விளைந்தொடுங்கும் வயலில் உதிர்ந்த நெல்லாலுண்டாகிய உணவினாலும், தம்மில் விருப்பத்தை யடைந்தவர்கட்கு இன்பமாமென்றறிந்தும் முன்பு தேடின பொருள்களையல்லாமல், இளமையும் இன்பமும் செல்வமும் காட்சியும் பிற்படக்; காலையிலெழுந்து தன் ஞெளியைக் காட்டி, மாலையில் மறையும் ஞாயிற்றைப் போல, முன்புண்டாகிப் பின்பு மறையும் பொருளைத் தேடத்; தண்ணிய மதியினையும் கடிய ஞாயிற்றையும் வெவ்விய தீயையும் கண்ணுகப் பெற்றுப்; பூமியின் பரப்பு எவரானு மளக்கப்படாத திருவடியாக ஒப்பற்ற நெடிய ஆகாயம் திருவடிவாகப்; பெருமையினையுடைய திசைப் பரப்பு பெரிய தோளாகக், குற்றமற்ற அழகிய மறையின் சுரங்களுனகும் சொல்ல நிகழும் வார்த்தையாகப், பகலு மிரவு மொடுங்காது விடுமுயிர்ப்பு உள்ளே நிறைந்து போக்கு வரவு செய்யும் இருவித மூச்சுக் காற்ருகவும்; விரோதிகளைக் கொல்லும் படையினையுடைய பாண்டியன் கொடிய மாறுபாட்டைப்பற்றி இட்ட கொடிதாகிய வெவ்விய சிறையில் அகப்பட்ட

மேகக் கூட்டங்கள் விலங்குடனே மிகுந்த புனலைச் சொரிவனபோல; ஏழு முழ முயர்ந்த யானைக் கூட்டமானது, கழுத்திலிட்ட கயிற்றோடு பாசக்கயிறு மறும்படி உடல் நிமிர்ந்து, தாமிருக்குமிடமுந் தறியும் சேறுபட்டுச் சேர்ந்தோரை வருத்த, மும்மதமாகிய மிகுந்த நீரை வெளிப்படுத்தி, மயல் மிகுந்து கோபத்தால் பிளிறும் பெருங் கூடலாகிய நகரில் பொருந்துங் கடவுளை, நன்றாகத் துதியாதபடியால் வந்த குறைபாட்டை யுடையார் போலவும், கல்லாத கீழ் மக்கள் மனத்தைப்போலவும், களவு அலரைச் சொரிய, முல்லைக்கொடி யசைய, காயாப் பூத் தன்னிடங் கறுப்ப, வண்டுகள் நீங்காத விருப்பங்கொண்டு எங்கும் பரந்து பாடத், தோன்றியானது காலத்தைக் கருதிக் கை விரித்தாற்போல் மலரக், கொன்றையானது கண்ணில் துன்பமாகிய பசலையாகப் பரக்கும் ஒளியை அழகிய திருமலரால் எடுத்துக் காட்டச், செங்காந்தள்கள் கையின் கண்ணணிந்த வளைகள் நில்லாவென்று சொல்லுவ போல வளைந்த வளவிய அலர்களைச் சிந்தக்; கருவிளை மலர்கள் அருகே நின்று கண்ணுனது துளியைச் சிந்துதற்குக் காரணமாகிய கெடாத துன்பத்தைக் கூறுபட ஆராய்ந்து திக்கொடு மயங்கி நீரினைச் சிந்தப், பெறுதற்கரிய வுயிரை மிகுந்த தீயோடு கூடிய வாடை வருட, ஆசையுண்டாக்குங் காலந் தோன்றியவிடத்துப் பொருந்திய, உடலழகை யுடையவட்கு அமைத்த விதிதரும் முறைமையல்லாமல் சொல்லுதற்கமைந்த காரியங்களைப் புனைந்து சொல்ல யானறியேன்.

## (21)

[தன்னுட் கையாறெய்திடு கிளவி.]

நீர் நிலையினிடத்து இடையறுதுண்டு நின்று, இடங் கறுத்துயர்ந்து திக்கு நிலைகளிலெல்லாஞ் சென்ற மேக

மாகிய பசிய இலையையும், இடையிடையிலே புரளும் நாண் மீனுகிய மீனையும், சிவந்த மேகமாகிய பழைய நுரை யையும், வெள்ளை மேகமாகிய புதிய நுரையையும், எல்லா விடங்களினுஞ் சிதறிப் பொங்கி யெழுகின்ற அழகினையும், ஓரிடத்திற் சென்றமையாது, பல தலைவைத்து எங்கும் பரக்குமுகமாக வைத்த கங்கையாகிய காலையும், தன்னிடத்திற் பெற்றுக் குளிர்ச்சி மிகுந்த ஆகாசமாகிய வாவிக்குள் முயலாகிய வண்டு உண்ணும்படி, அமுதமாகிய தேனைச் சிந்தித் தெய்வமாதர்களின் மலர்போலும் முகத் தைப் பழித்து, வட்டங்குறையாது வெள்ளியதாக விரிந்த மதியாகிய வெண்டாமரையே! மயங்கி வருத்தத்தை யடைந்த ஒருத்தியாகிய நான், நின்பால் கேட்கும் தண்ணிய வார்த்தை யொன்றுள்ளது அஃதென்னெனப சியாகில்; குறியல்லாவிடத்திற் செல்லாது வருநாளை யுண் டாக்கி யிருந்ததனுல் குற்றம் பொருந்திய வேளையில் உண்மையாகப் பிரிந்த பொய்ச் சூளினையுடையார் தம் முடைய வுள்ளமும்; மீனுணவை நினைத்துக்கொண்டு காலம் பார்த்திருந்த வெள்ளிய நாரையைப்போலச் சோறு நறையை வெளிப்படுத்திய தாழை மலரும்; பல தலைகளை யுடைய அரக்கர் படை வகுப்புச் செய்த பெரிய வரிசை யைப் போலப் பக்கத்தில் திரண்டெழுந்து, கரிய காய் நெருங்கி விளையுங் கள்ளைச் சுமந்த தலைவிரிந்த பனையும்; அன்னத்தின் கூட்டமும் மிகுந்த சாட்சியாகத் திரை யிடத்து மீன்கள் குதித்துத் தடுக்கச், சங்குகள் மதி மயங்கிச் சூலொடு பொருந்திய வயிறு நொந்து கிடந்து ஒலிக்கும் புன்னை மரச் சோலையில், உயிர் பெறும்படி இன்னவிதமாக வுள்ளதென்று சொல்லப்படாத இன்பமும் தந்து, நெடிய பெரிய இமயமலை பெற்ற ஒப்பற்ற உமா தேவி காண, நான்முகனுனவன் விதிப்படி தாளமடிக்க, அந்த நான்முகனை உந்தியிற் பூத்தோனுகிய திருமால்

கயிற்றினாற் கட்டி இடக்கையினால் வளைந்த இடைக்கை என்னும் கருவியை இசைப்ப, முப்புர மொன்றில் அரசு செய்யும் வாணன், எழுகடலில் நின்றும் பெருகிய பேரொலி யடங்கும்படி, ஐந்து முகமும் வெவ்வே றொலி யாக விசைக்கும் குடமுழவாகிய கருவியினை, மகமேரு மலை கிளைவிட்டாற்போன்ற ஆயிரங் கைகளாலும் முழக்க, ஏழு முனிவர்களும் தாழுமன்பினையுடைய பதஞ்சலி முனிவர், அன்பினையுடையாராய் உள்ளமும் எலும்பும் ஒன்றாய்க் கரைந்துருகும்படி ; பறவையின் கால்போலுங் காலினையுடைய தும்புருவும் மணத்தினையுடைய கந்திரு வரும், நாசிப்பாட்டும், பேய் கத்தினாற்போற் பாடப் படுவதாகிய காகுளிப்பாட்டும், வெள்ளோசையும், கீழிசை யும், ஒரு புற மொட்டலும், பெரு மூச்செறிந்தாற்போல் எறிந்து நின்றிரட்டலும், ஓசை யிழைத்தலும் கழிபோக்கு மென்று சொல்லப்பட்ட குற்றமும் சோம்பும் விட்டு, நான்மறையின் பயனாகிய ஏழிசையினையும் ; வண்டினது முழக்கமும் கஞ்சக் கருவியினொலியும், வலம்புரிச் சங்கின் முழக்கமும் ; மீனெறி பறவையும் வானம்பாடியும், மூங்கி லின் இலை விழுகின்ற தொழிலும், அருவியினொலியும் குட முழவின் முழக்கமும், பூனையின் புணர்ச்சியினெழுமொலி யும்போலும், உத்தமமான இசையும் பாடும் பாட்டுந் தொழிற்கிரியையும் பொருந்திய விதியுடனே பின்னுமுண் டென்று கருதும்படி, படுத்தல், சமம், எடுத்தல் ஆகிய இவை மூன்றினில் அடக்கிச் சர்க்கரை மலையினிடத்திலே தேன் மாரி பெய்தாற்போலத் துள்ளப்படுதலும் தூங்கப்படுதலும் தெள்ளிதாக மெலிக்கப்படுதலும் பொருந்திய இசைப் பாட்டை நான்கு விரலணியாக அமைக்கப்பட்ட குரல் வீங்காது, நான்மறையுந் தொனிக்கும் வாய் பிளவாது, உள்ளக் கருத்தினை வெளியிற்காட்டி யறிவிக்கும் கண்ணிமையாடாது, சிதறிய தீப்போலும் மணியாற்

சூழப்பெற்ற முடியினை யணிந்த தலை யசையாது வயிறு குழிவை யடைந்து அழுதாற்போல முகத்தைக் காட்டாது அன்புடனே பாடப்; பூதகணங்கள் துள்ளப், பேய்களாட இன்பம் நிறைந்து எல்லாவிடத்துமுள்ள உயிர்களும் ஆட, நாடகத்திற்குரிய விதியோடு கூடித் திருநடனஞ் செய்த பெருமான்; மதுரைமாநகரிலே பாண்டியனுகிச் சடை முதலியவற்றை மறைத்து, ஒளி தங்கிய முடியைச் சூடிய தலைவன்; இவனது சிறந்த மணிபோலுந் திருவடியைத் தலைக்கொள்ளாதவர்களைப் போலச் சான்று பிறரில்லையென்று இப்போது பிரிந்தனர். யானவற்றைக் காணும்படிக்கு அவை இப்போதும் காண விருந்தனவாதலால் அவர் பிரிவும், இவ்விடத்து வருவதும கண்டு, அதனைச் சொல்லுதியாயின் நின் கால்களை நின் கருத்துப்படி போற்றி வணங்குவோம்.

## (22)

[தலைவியின் தோற்ற மாறுபாடு கண்டு அவளை வேறுபடுத்திக் கூறல்.]

வில்லுடனே பகைத்து மாறுபட்ட புதுமையாகிய அழகிய நுதலினையுடையாய்! என்னுடைய கண்ணும் உயிருமாகி உள்ளத்தில் நிகழும் இன்பத்தையும் உடையவளொருத்தி, அளவு படுத்தப்படாத காமம் கைகடந்த வழி உள்ள நிகழ்ந்து, மலையாகிய யானைக்கு மதம் பொருந்திய குழியும் ஆகி, நெடிய மலையாகிய புருடன் விழித்த கண்ணுமாகி, அம்மலையாகிய திருவினது நெற்றியின் கண் ஒரு காலமும் அழியாது வைத்த வெண்மையாகிய நல்ல அழ

கிய பொட்டுமாகித்; தூரத்தினின்றும் வந்த காலிளைப்பாறி அமுதத்தொடு கிடக்கும் பக்கம் நிறைந்த திங்களின் ஒரு பாகத்திற் கிடந்த மதியுமாகித்; தன்னைப் பொருந்திய வண்டுகள் விட்டு நீங்க மலையருவிபோலச் சிந்தும்படி தேனைச் சிந்தும் வட்டமாகிய தேன் கூடுமாகி; வரையர மகளிர்கள் தம் இளமை நீங்காது கூட்டத்துடன் காவல் காக்கும் அமுதத்தையுண்ணும்படி யுண்டாக்கி அவ்விடத் துப் பதித்த கிண்ணமுமாகி; இடையிற் காற்றும் புகாது நெருங்கிய முலையினையுடைய குறத்தியர் தம் சிறிய முகத் தின் அழகைப் பார்க்குங் கண்ணுடியுமாகி, இம்மலையி னிடத்துச் சிறந்து விளங்கும் ஒரு சுனையில் நீராடச் சென் றனள். உன்னைத் தூரத்தில் கண்ட காட்சிக் குறியோ, அல்லது என்னுள்ளத்தில் நிலை நில்லாத புத்தியினுலோ, குறிஞ்சி நிலத்திற் பிறந்தவர்க்கு விதிக்கும் அழகு வேறு படாது என்று சொல்லப்படும் விதியினுலோ; நீ தானே அவளாக. என் கண் குறித்ததனுல் வந்த தடுமாற்றத்தை நிலையாகத் தந்த அறிவு கிடக்க; சிறிய வியர்வை பெறுதற் குக் காரணமாய் நினது வருத்தம் சிறிது தீர்ந்து, இங்கு ஒரு கணப்பொழுது நிலைபெறப் பொருந்துவையாயின்; இங்ஙனம் நின்ற நிலையினின்று நீங்க நினைக்கும் அக்கணத் தில், இவ்விடத்துத் தூண்டா விளக்கினைப்போல அவள் வருவாள்.

அவள் வந்தவிடத்து இரண்டு பேரும் உண்மை பெறும்படி உறவாடி, இப்பொழுது இரண்டு திருவினை ஒரு பாற்கடல் பெற்றுற்போல, வளைக்கப்பட்ட நெடிதாகிய கரிய புனத்தில், அழகு பெறும்படி முத்தமணிகளமுத்திய ஊசலாடியும்; மிகுந்த தேனுடனே தேன் கூடாகிய இலக்கு விழும்படி மயிராலமைந்த காலினையுடைய கவ ணிடத்து மாணிக்கத்தை வைத்து எறிந்ததனுலும், வெண்

டுகில்போல அசைந்து பொன்னைக் கொழித்து வீழும் அருவியிற் றோய்ந்ததனுலும், குகையினையுடைய மலைக் கெதிர் கூவுதலானும் பெரிய சுனையினிடத்து மலர்ந்த நீல மலரைக் கொய்ததனுலும், கொடுமரத்தைப்பற்றி நெடிய பரணில் விளங்கியதனுலும், கதிரையுடைய தினையினிடத் தில் ஓலமிடுங் கிளிக் கூட்டத்தை ஓட்டுதலானும், ஒரு நாள் அழகிய நகையால், வெள்ளியும் இரும்பும் பொன்னும் என்று சொல்லும்படி பேர்பெற்ற முப்புரமும் எரிந்தழி யும்படி விளையாடுதலைச் செய்த பெருமானுகிய தலைவன்; தன்னை விரும்பாத உள்ளமானது காணுது சென்று என் னுள்ளத்தில் அங்கயற்கண்ணம்மையோடும் பொருந்திப் புகுந்து; கொலையும் களவுமாகிய பழுமரங்களைப் பிடுங்கித் தள்ளிப், பிறவிச் சுவரை யிடித்துக், கொல்லாமை முதலிய மரங்களை நட்டுப் பிறவாமையாகிய சுவரை வைத்துப் புதி தாகக் கட்டி, அருளாகிய பொற்றகடு கொண்டுவேய்ந்த உள்ளமாகிய மண்டபத்தில், உள்ளேயிருந்து நான் நல்ல தன்மையுடன் காண வெளிப்பட்டுப், பலவாகிய மலர்ச் சோலையில் மலர்ந்த நறிய மலர்கள் தேவருலகத்தின்கண், மிகுந்த வாசத்தை யுண்டாக்குதற்கிடமாகிய மதுரையாகிய பதியிடம் சிவகதியாக வெழுந்தருளியிருந்தவன். அவனது இரண்டு திருவடிகளையுமடைந்தவர் பெற்ற செல்வம் நன் மையை விளைத்தாற்போலப் பொருந்திய விளையாட்டின் பத்தோடுண்டாகும் நன்மையெல்லாம் சொல்லுதற்கு முடியாது.

## (23)

### [காமமிக்க கழிபடர் கிளவி.]

தேவர்கட்குத் தலைவன் மண்ணிற்கிடந்து, அழகிய உடலில் நிறைந்த திரளாகிய ஆயிரங் கண்ணும் மூடாது விழித்த தோற்றம்போலத்; தாமரைக் கூட்டம் இடை வெளி இல்லாமல் மலர்ந்து மணஞ்சூழ்ந்து கிடக்கப்பெற்ற நீண்ட கரிய உப்பங்கழியே !

கரிய உப்பங்கழி கொடுக்கும் வெள்ளிய விரால்மீனை நுகரச் சமயம் பார்த்திருக்கும், மடப்பத்தினையுடைய பெட்டை நாரையே !

பெட்டைக் குருகு மெய்வருத்தத்துடனின்ற, வெள்ளிய முட்டையொடு காவலாக, இரைபெருதடை கிடத்தற்கிடமாகிய தாழைச் சோலையே !

வெம்மையொடு பொருந்தியும், தண்மையொடு பொருந்தியும், உலகத்திருளை விரட்டும் ஞாயிறும், திங்களும் பகலிரவென்னுங் காலத்தில் கோடாது முறை முறையாக உதிக்கும்படி மணி வரிசையாகச் செய்தாற் போன்ற மண்டபமாகியும், பொறுமை மாட்சிமைப்பட்டுப் பெறும் தாயாகிய பூமிதேவி ஒருபோதும் நீங்காது உடுக்கும் பசிய துணியாகியும்; காமனைவன் தனது படைக்கு வகுத்த பெரிய வரிசை மகிழும்படி, ஒருவரானும் முழக்கப்படாது தானே முழங்கும் பெரிய முரசமாகியும்; நெடியோனைய திருமால் துயிலாது யோக நித்திரை செய்யப் பாயற்குப் பொருந்திய பள்ளியறையாகியும்; காவல் நிலையாக வருணன் ஆராய்ந்து வைத்தாற்போன்ற முத்துமணிகள் கிடத்தற்கிடமாகிய இருள்மிகுந்த அறையாகியும்; புலால் நாற்றத்தையுடைத்தாய உடலினையுடைய பரதவர் தங்

குடியைப் பாதுகாக்கும்படி மீன் முதலிய பயிர்களை நாள்தோறும் விளையப்பண்ணும் பெரிய வயலாகியும்; மரக்கலமாகிய பெரிய தேர் எப்பொழுதுமோட ஒருவரானு மளக்கப்படாதபடி பரந்த தெரு வீதியாகியும்; சுறவமாகிய அரசன் நெடிய பெரிய படையைக்கொண்டு போர் செய்யும்படி முழக்கத்துடனே பூமியை வளைத்த போர்க் களமாகியும்; மகர மீனுகிய தெய்வம் நெடுங்காலம் பொருந்தும்படி, மணியாகிய விளக்கு நிறைதற்கிடமாகிய கோயிலாகியும்; நீராகிய நெய்யை வார்த்துச் சகரரா லமைக்கப்பெற்ற வடவாமுகாக்கினியாகிய தீ வளரும் வட்டக் குண்டமாகியும்; ஆயிரம் என்னும் எண்ணிக்கை யால் விளங்கும் பெரிய வாயினையும், கூட்டமான அழகிய சூட்டினையுமுடைய பாம்பாகிய தண்டின்மேற், சூரிய னுகிய தீபம் நின்றெரிதற்கிடமாகிய தகளியாகியும்; நிறைந்த அன்புடன் பாண்டியன் வேண்ட மாறியாடிய நீறணி பெருமானுக்கு அமுதமாகிய போனகத்தை (நஞ்சை) விரைவாகக் கொடுக்கும், (வடவையாகிய) அடுந்தீ மாருத மடைப்பள்ளியாகியும்; இன்னும் பலவிதமாக நிலைபெறுங் கடலே!

இப்பொழுது என் முகம் பார்த்து இவளொருத்தி குளிர்ந்த துறையையுடைய தலைவனுக்காகத் தீயிலுற்ற மெழுகுபோல உள்ளம் வாடியும், அருவி யொழுகினுற் போலக் கண்ணீர் கொண்டும், பாம்பின் வாய்ப்பட்ட தேரை பலவு நினைந்தாற்போல எல்லாம் நினைந்தும், நிலை யாத சூள்போல, நிலையாத நெஞ்சும் ஏன் பெற்றன ளென்று பொருந்திய வாய்மை சிறிதாயினுந் தருகிலீர். அல்லாவிடின் நீங்கள் ஒன்றுபட்டு ஒருதரம் இவள் துன் பப்படுவது என்னென்று கேளாதிருக்கும் நட்பாந்தன்

மையை மனத்தால் நினைக்கினும் நாவாற் சொல்லினும் கொடிதென்பதை யறியாதிருக்கின் றீர்களாதலின், நுங்கள் நட்பின்பம் என்மாட்டுப் பெருந்துணையாம். (துணையாம் என்பது இகழ்ச்சிக் குறிப்பு. துணையில்லை யென்பது முடிபு.)

## (24)

[இடம் மிகச் சமீபமென்று கூறி வற்புறுத்தல்.]

மலையில் மழை பெய்யும்படி; கிரவுஞ்சமென்னும் பறவையின் பெயரையுடைய சிறிய மலையினது உடலம் பிளக்க எறிந்த நெடிய வேலினையுடைய கடவுட்கு, மயிலையும் கொடியையுமுடைய முற்றத்தில் மிகுந்த கிளைகள் திரண்டு, நாற்றிசையினும் தேக்கிலையை விரித்து, வெட்சிப் பூவோடு சிவந்த தினையரிசியைப் பரப்பி, இருவி லுண்டாகிய தேனோடு கலந்த வெள்ளிய தினைமாவை வைத்துச் சங்கு மணியை யணிந்த வயது முதிர்ந்த பெண்டிர் மலை நெல்லில் தெய்வ முண்டாகச்செய்து, முக்காலத்து நிகழ்ச்சிகளையும் வெளிப்படச் சொல்ல; வேலைக் கையிற் கொண்டு வெறியாடுவோன் சுற்றிவந்து சிறிய ஆட்டு மறியினை யறுக்கப்; படைக்கலத்தின் நுனி போல நுனியைக்கொண்ட நெறித்த இலையினையுடைய ஈந்தின் விளைந்த மிகுந்த நறவெல்லாம் கருத்துடனுண்டு; நெடிய இலையினையுடைய வாழையினது, சிறிய காயை யொத்த முளியால் தறிக்கப்பட்ட திரட்சி கொண்ட வாயினையுடைய திரிகையைப் போன்ற வட்ட வாயினை யுடைய குறிஞ்சிப் பறையைக், கோலால் அதனிடத் தடித்தலால் வானளவுஞ் செல்லும் மிகுந்த ஓசை கெடாது

முழங்குதற்குக் காரணமாகிய மலைநாடர்; தாங்கள் மிக முயன்று அரிய தவம்பண்ணிப் பெற்றெடுக்கப்பட்ட செவ்விய திருமகளைப்போலும் மடப்பத்தினையுடைய மகளே! உள்ளத்தின்கண் பெருகிய துன்பத்தைவிட்டு நீங்குக. கொடிபோலும் இடையினையும் பெரிய முலையினையுமுடையவளே! எம்மூர்க்கும் நும்மூர்க் குன்றத்திற்கும் தூரமெவ்வளவெனின், பெரிய தவத்தினையுடையார் கூட்டத்திற்கும் வீடுபேற்றிற்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி. அதுவுமல்லாமல்; பொதியமலைக்கும், எல்லாரும் களிக்கும்படி வீசுகின்ற தென்றற் காற்றிற்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி. அதுவுமல்லாமல்; ஒலிக்கின்ற கடலினைக் குடித்த அகத்திய முனிவர்க்கும் தமிழிற்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி. அதுவல்லாமல்; மேருவிற்கும், நான்முகன் முதலாக நவிலப்பெற்ற மூவர்க்கும் கோயிலுக்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி; அதுவல்லாமல் பதினுன் குலகங்களையும் பெற்றுக் காத்த உமையவட்கும், பெரிய அறத்திற்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி. அதுவுமல்லாமல்; தேவர் தலைவனுக்கும் காவலையுடைய கற்பக தருவிற்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி. அதுவுமல்லாமல்; தன் தொழிலில் தவருத நான்முகனுக்கும் எழுதப்பெருத மறைக்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி. அதுவுமல்லாமல்; செங்கோலையுடைய அரசனுக்கும், அவன் செங்கோலின்கீழ்த் தங்கிய குடிகட்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி. அதுவுமல்லாமல்; தவத்தினர் சூழ்ந்த இமய மலைக்கும், நிறைந்த சூலினையுடைய மேகத்திற்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமென்றறி. அதுவுமல்லாமல்; கண்ணன் கையும் அவன் கையிலிருந்த வெண்ணெயும்

போலப், பசிய இலை மறைத்த நெடிய ஒழுங்கினையுடைய ஏரியின் கண் மலர்ந்து, இதழ்விரித்த செம்மை பொருந்திய வள்ளம்போன்ற வாயினையுடைய தாமரையுள், சங்குகள் கிடந்து துயிலும் மதுரைமாநகரில் நிறைந்துறையும் முக்கண்ணினையும், பெரிய திறலினையுமுடைய கடவுட்கும் அவர் தம் அடியவர்க்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரமாம். இங்கு சொல்லப்பட்ட இவைகளின் தூரமல்லாமல் வேறு தூரமில்லை.

## (25)

[ குறையிரந்த தலைவனைப் பார்த்துத் தோழி நின்குறை நீயே சென்றுரை யென்றல்.]

கரிய கையினையும் வெள்ளிய கொம்பினையும் சிறிய கண்ணிணையுமுடைய பெரிய யானையானது, தான் வேறு பிடியைச் சேர்ந்ததனாலே தீராத புலவியைத் தன் சுற்றமொடு தீர்க்கும்படி, பொருந்திய காதலினாலே பள்ளியோதுவிப்பாரிடத்து, உள்ளத்திலிடைவிடாது நின்று கொடுத்தற்குக் காரணமாகிய சிறப்புமிகுந்த அரிய நூல் சிதைவடைந்தாற்போலக் குறிஞ்சி நிலத்துண்டாகிய தேனடையை அழித்து மெத்தென்ற நடையினையுடைய பிடிக்கு மிகுந்த தேனைக் கையைப் பிடித்துக் கொடுத்து அடிக்கடி வணங்குதற்கு இடமாக விளங்கும் மலைப் பக்கத்தையுடைய நாடனே! ஞாயிறும் திங்களும் பெரிய உருளைகளாகவும் பூமியின் இடம் தேராகவும் செய்து, வாயு குதையாக; தீ தோன்றும் முனையாக, திருமால் அம்

பாக; முடிகளையுடைய இமயமலை பெற்ற உமாதேவி வில்லைப் பிடிக்கும்படி; அடுக்கு நிலையாகவுள்ள உலகத்தைத் தாங்கிய வலியையும் பெருமையையுமுடைய மகமேருவைக், கொடிய பகையைக் கெடுக்கும் நெடிய வில்லாகச் செய்து, ஆயிரமென்னும் எண்ணிக்கையையும் தீப்போன்ற விடத்தையும் உடைய பாந்தளை (ஆதிசேடன் நாணாக வேற்றி, ஒரு காலை முன்னே வைத்து இரு காலை வளைக்கும்படி வளைக்கப்பட்ட வில்வட்டம் கிடைத்ததைக் கண்டு சிறுநகை செய்ததனால் வந்த ஒப்பற்ற பெரிய தீயில், பெரியோர் இருப்பிடத்தில் கீழ் மக்கள் சூழ்ந்து தூய்மையைக் கெடுத்தாற்போல; மிகவும் நன்மை பொருந்திய தெய்வலோக முழுவதும் திட்டுச் செய்து வெகுண்டு அடிக்கடி கெடுத்தலைச் செய்வதும், ஒருவராலும் தாண்டப்படாத வலிமையினால் ஓரிடத்திராது எழுதல் பெற்றதுமான முப்புரங்களையும்; ஏழாகவுயர்ந்த வான இடமெல்லாம் தூள்பட எரித்தலைச் செய்து; நான்முகன் முதலான தேவர்களும், தேவர் தலைவனும் ஒருமுறை யுள்ளம் வருந்தி மலர்களைத் தூவி வேண்டிக் கொள்ளத்; திருமாலானவன் முன் நிலையில் நில்லாது மயங்கும்படி நடித்தலைச் செய்த தருக்கத்தினாலே, அறிவுநிலை கெட்டு வழிபாட்டைவிட்ட பகையினையுடைய அரக்கர் வெள்ளத்துள்; அருச்சனையை விடாது ஒரு வழிப்படும் மூவர்க்குள் வாணாசுரனொழித்த இருவர்க்குக் காவல் காத்தற்றொழிலைச் செய்து, மற்றொருவனாகிய வாணனுக்குத் தான் மெய்யிற் காட்டிய கோப்பு முதலியவற்றையுடைய நடத்தின் செய்தியைத் தெரிந்து, குடமுழவத்தைக் கொட்டப் பெறுதற்குக் காரணமாகிய தண்ணளியை நல்கி, ஒருநாள் அருச்சனைபுரிய விரும்பாதவர்க்கும் பெறுதற்கரிய பெரும் பதங்கிடைக்குமென்பது காட்டவேண்டிப், புன்னகைத் தீயாலிறத்தற்குக் காரணமான கனலினையுடைத்தாய விழியினையுடைய

அரக்கர்க்குக் கெடாத சுவர்க்கம் பெறவைத்த அழகிய கடவுள்; கழுத்தினிடத்திலே விடக் கறையை உடையோன், மாமியாகிய மேனை நீராடக் கடலினையழைத்தவன். அழகு பொருந்திய மதுரைக்குத் தலைவன். அவன் மேல் வைத்த உள்ளக் களிப்பினையுடைய அடியார்க்கு அவன் திருவடிகள் வெளிப்பட்டுத் தோன்றினாற்போல ஒப்பற்ற நீதானே; கொடாத லோபிகளுடைய பொருள் தேய்ந்தாற் போலத் தேய்ந்ததென்னும் நுண்ணிய இடையானது, சுமந்து பொறுமல் நினைத்தற்குக் காரணமாகிய தேமலையுடைய பெரிய முலையினையுடையாளைப் பொருந்துதலைப் பெற்று; அவளுக்கு நின்னுள்ளத்திற் பொருந்திய பொய்யும் மெய்யுமாகிய எல்லாம் விரித்துச் சொல்லி உடன் படுவதனையுங் காண்பாயாக.

## (26)

### [தலைவன் இரவுக்குறி வேண்டல்.]

சிறிய நெற்றியினையும் பெரிய விழியினையுமுடையாய்! வண்மையை யுடையோர் வரையாது கொடுத்தல்போலக், கூட்டமாகிய மழையானது சூல்கொண்டு எட்டுத்திக்கின் கண்ணும் பொழியா நின்றது. இரவானது வெள்ளிய பல்லினையும், கரிய கூந்தலையும், சிவந்த தளிர்போன்ற சிறிய அடிகளையுமுடைய பெண்களுள்ளம் போலப் பரவியிருண்டது.

தெய்வ முண்டென்று நினைக்காத பொய்ம் மனத்தார்க்குச் சொன்ன, நல்லொழுக்கந் தெரியாது தடுமாறியதைப் போலப் புல்லால் வழிதெரியாது தடுமாறியது. காலனுனைவன் கணக்கின்படியே காலம் முடியவிட வந்த தூதுவர்,

அவ்வவ் வுயிர்கள்தோறும் வந்து வளைந்தாற்போலத், தேடித் திரியும் சிங்கங்கள் உயிரினைச் சுமந்து புகரினை யுடைய யானைகள் சஞ்சரியாதபடி சுற்றி நின்றன.

வெள்ளிய உடலையும், பெரிய வாயையும், தழல் போலும் விழியினையுமுடைய சிங்கத் தோலையும், யானைத் தோலையும் விரித்துப் போர்த்துக், கூரிய நகத்தினையுடைய புலியின் புள்ளி பரந்த தோலையும் பிறகு காட்டிக் கிடந்து தாவும் மானின் தோலையும் உடுத்துக், கரிய பாம்பினைக் கங்கணமாகக் கட்டி, ஆதி நான்முகனின் எலும்பினைக் கழுத்திலணிந்து பன்றிக் கொம்பினைத் திருமார்பிற் சாத்திக்; கன்னியர் நதித் துறையில் நீராடுதலால், பூமியின் கண்ணுண்டாகிய உயிர்கள் இயங்குதலின்மை கருதித், தொய்யிலெழுதும் முறைமையினையுடைய இறுமாந்த அழகிய முலையிலணிந்த சுண்ணமுங் குங்குமக் குழம்பும்; கார்காலத்து மேகம் வானிற் சுழலுதலினால் முழங்கா நின்ற குரலினையுடைய யானைத் திரள், துறையில் நீராடுதலால் பரவிய மதமும் பொய்கையினிடத்தும், அகழினிடத்தும் வயலினிடத்தும் சென்று, முழக்கத்தினையுடைய முதலைக்கும், சிவந்த வாலையுடைய கெண்டைக்கும், உடலில் உள்ள புலால் நாற்றத்தை மாற்றுவதும், வெள்ளைப் படத்தை விரித்தாற்போன்ற திரையை உடையதும் ஆகிய வைகை நதி சுற்றும் புகழ்த்தன்மை பொருந்திய மதுரை நகரத்து வெள்ளி யம்பலத்தில் கள்ளவிழும் மாலை பொருந்திய குழலினையுடைய உமையவளோடுங்கூடி இன்பத்தினையுடைய நடனத்தைப் புரியும் தேவ நாயகன்; அருவியாகிய கழுத்திடுங் கயிறும், சுனையாகிய மதக்குழியும், பெருகிய தேன் கூடாகிய செவியும், கருவண்டின் ஒழுங்காகிய சங்கிலியும், நீங்காத பெரிய மலையாகிய யானையின்கண், பொருந்த வளங்கொடுக்கும் உங்கள் பழைய

குடியினையுடைய சீறூர்க்குப் பொருந்திய விருந்ினனாகி யான் வருகின்றேன். (என்னை ஏற்றுக் கொள்ளுங்கள் ளென்பது எச்சம்.)

# (27)

## [நகரணிமை கூறல்.]

உலகத்தார் மதிக்கும்படி பரவிய நீரினையுண்ட மேகமாகிய பசிய இலையினையும், காலம் நீடிக்க ஆயிரம் முகங்களையும் வைத்தும் பெருகப்பாயும் கங்கையாகிய நீரினையுமுடைய ஆகாசமாகிய தடாகத்திற்குள், நடுவே ஒரு செந்தாமரை மலர்ந்தாற்போல, மூவடி மண்கேட் டோரடி மண் பெறும் வழக்கிற்காக, ஒரு காலாற் பூமியை யளந்த பெருமைபெற ஒரு திருவடியை விண்ணிடத்தில் நீட்டிய திருமால், சிவந்த கரிய கை யொன்றினால் அந்நாளிற் ஒன்றல்லாமல் இரண்டு கோவர்த்தன கிரியைத் தாங்கினாற் போலக்; கொப்பூழினின்றும் எழுந்த மயிரொழுங்கின்மேல் தங்கிய அழகிய முலையினையுடையாளும்; மலையை யொத்தகன்ற மார்பினையும் ஒப்பற்ற வெற்றியினையுமுடைய நீயும்; குகைபோலும் பெரிய வாயினையுடைய அரக்கர் உடல் கிடந்தாற்போன்ற நிறையாகிய சிறு மலைக்கிடக்கையினையுடைய மலையைக் கடந்து அப்பாற் சென்றால்; எரிகின்ற தீப்போன்ற மயிரினையும், எரிகின்ற நெருப்புப் பொறிபோன்ற கண்ணினையும், மாறுபட்ட பற்களையும், இருண்ட உடலினையும் உடைய எமனும் மருளும்படி, உதைத்த அளவு காணப்பெறாத திருவடியினையுடைய ஒப்பற்ற தனிப் பெருமான்; எண்

ணத் தொடங்கினுல் அளவுபடாத அண்டமாகிய பெரிய திரளை முறையாகப் படைத்தளித்த பிறைபோலும் நுதலினையுடைய உமையாளோடும், ஒருவராலு மளவு படுத்தப் பெருத கற்ப காலம் தண்ணளிவைத்து நிலை பெற்ற; அளவிறந்த பசிய இலைத் திரளைக் காணியாகக் கொண்ட நீர்நாயானது, இந்திர வில்லின் நிறத்தை யுடைத் தாய நீண்ட வுடலினையுடைய பெரிய வாளைமீன்களினது வாயில் புக; வேட்டுவர், அளியிடைபோலும் இடை யினையும், குரவையிடும் வாயினையுமுடைய உழத்தியர்களை யும், தொழிலைவிட்டு உழவினையுடைய வயலில் நெருங்கப், பண்ணினைப் பாடுகின்ற உழவரானவர், எருதானது தன் பிடரியிற் சுமந்த வளைந்த புதிய கலப்பைகளைச் சேற்றி லழுந்தும்படி நிறுத்தி, அரியைப் போராக உயரச் செய்யும் கடிய சிறப்பினையுடைய செங்கரையிலேறப் பசிய குவளை மலரை யுண்ணும் சிவந்த கண்ணினையுடைய இளைய வெருமையோடு முதிய வெருமை யஞ்சிக் கழையாகிய கரும்பினைக் கலக்க; அமுதம்போலும் வாய்மொழியினை யுடையாரது விடம்போலும் விழியானவை குழையைக் கிழிக்கப் பாய்ந்தாற்போல, நெடியதாகிப் பசிய இலைகளைக் கிழிக்கும்படி மிகுந்த கயல்கள் பாயும் குளிர்ச்சியினை யுடைய வயல்கள் சூழ்ந்ததும் நோக்கினுர் கண் விரும்புதற் கேதுவாயதுமாகிய பெரு வளத்தினையுடைய கூடலாகிய மதுரையம்பதி காணப்படும்.

## (28)

[அறியாள்போன்று நினைவு கேட்டல்.]

பகைவர்களை யழித்தலும், நட்பினரைத் தாங்கலும், ஞாயிற்றின் தன்மையைப் போலும் திங்களின் தன்மை

யைப்போலுமெனப், புகழை நிலைபெறுத்திய நெடிய தகட்டினையும் சிறிய இரத்தக் கறையினையுமுடைய வேலினையுடையாய்! ஆலவாயென்னும் மதுரையினிடத்தில், அமுதமுண்ணும் வாழ்க்கையினையுடைய தேவர் தலைவன்; ஐராவதம் முதலிய யானைகளெட்டும் பிடரியிற் சுமந்து ஓங்கும்படி; நான்முகன் படைக்கவும், மாலவன் காக்கவும், பெருதகோ ரழகிய உருவினைப் பெரிதாக நிறுத்தி இறக்கிய செம்பொன்னும் மணியும் அழுத்திய முடியினையுடைய கோயிலுள் எழுந்தருளித், தண்ணளியினையுடைய உமையுடன் நிறைந்த முதன்மையாகிய கொழுவிய சோதியானவன்;

அடிக்கடி மின்னலுமிடியுமாகிய கூட்டத்தினைக் கருவியாகவுடைய வானம் பொழிதற்கிடமாகிய கூடஞ் சூழ்ந்த நெடிய முடியினையுடைய பொதிய மலையிடத்துக், கண் நுழையாவாறு நெருங்கிப் பொருந்தியதாய காட்சியினையுடையதாயும், மணமுள்ள பூவினையுடைய சந்தனமர வரிசையைப் புனத்திடையில்வெட்டி, மற்ற மரத்தினை வேலியாக வளைத்ததினுல் வளராநின்ற தினையினை, நெடிய காலினையும் சிறிய விடத்தினையுமுடைய பரணிடத்திருந்து காத்தும்; தேவர் தலைவன் சிரசை யரிந்ததனுல் வந்த புண்ணினுக்குப் பொருது பெரிய முழைபோன்ற வாயினைப் பிளந்து அமுதாற்போல, நிறைந்த சூலினையுடைய மேகமானது தன் புறத்திற் குடியாகவிருந்து தேவர்களும் அஞ்சும்படி முழங்கும் மலையினிடத்துள்ள சினையைக் குடைந்தாடியும்; தேனையும், வண்டையும், மாணிக்கத்தையும், வயிரத்தையும், பொன்னையும் வரிசை வரிசையாகக் கொழித்துத், துகிலானது தாழ்ந்தாற்போல வீழ்ந்ததையும் அருவியாடியும்; குற்றமற்ற மாணிக்கத்தைக் காலினை

யுடைய கவணில் வைத்து நிறைமதி கிடந்தாற்போலக் கிடக்கும் தேனடையுடையும்படி எறிந்தும்; கூவிய சொல்லானது எதிரே கேட்கும்படி நெடிய மலைமுன்னுற் கூவியும்; காலானது செல்வதற்குத் திகைப்பை யடைந்த நெருங்கிய சோலையிற் புகுந்தும், மதிப்பினையுடைய மலர்களை இடையானது தனக்குப் பாரமாதல் கருதிப் பறைக்கவும், பசுஞ்சோலை நிரைத்த அம்மலர்களைக் கிண்கிணிகள் அரற்றும்படிக் கொய்தும்; அடிக்குந்தோறும் அடிக்குந் தோறும் மனத்தையுங் கண்ணையுமுடன்கொண்டு செல்வதும், சிவந்த பொன்னுற் செய்தாற்போன்றதும், வரியினையுடையதும் ஆகிய பந்தாடுதலைச் செய்தும், இத்தன்மையவாகிய பல முறைமைகளையுடைய இடங்கடோறும் அளவு செய்யப்படாத இந்தக் கன்னியர் கூட்டத்துள், உன்னுடைய உள்ளத்திலுண்டாம் வேட்கைக் குரிமையுடையாள் இத்தன்மையினளென்று எனக்கியம்புவாயாக.

## (29)

[உடன்போக்கிற் சென்றுளை வருந்தாதொழிதியெனச் சுடரோடிரத்தல்.]

பரவிய இடத்தையுடைய உலகத்தின்கண்ணுளவாகும் இருளைத் துரத்தும் விளக்குமாகி, நிலைபெற்ற உயிர்த் தொகைகட்கு மதிக்கத்தக்க கண்ணுமாகி, மறையோர் சிந்துகின்ற நீருக்குக் கருவுமாகி; உலகத்துயிர்களெல்லாம் குறிப்பிடும் சாட்சியுமாகி; சோற்றினையுண்ட கடன் தீரும்படி, போற்றப்பெறுகின்ற உயிரைப் போர்க்களத்தில் கொடுக்கும் அவாவினையுடைய வீரர்கட்கு, வீர சொர்க்கமடைதற்குச் செல்லும் வழியுமாகி, உயிர்களிடத்து எவ்

வித ஏதுவுமின்றிச் செல்லும் தண்ணளியுமாகி மற்றைப் பொருளுமாகி அழகிய உலகத்தினைக் காக்கும் பரிதியாகிய வானவனே!

திக்கினையறிதலுடையார் செலுத்தும் நெடுந் தூரஞ் செல்லும் பொருள்கள் நிறைந்த மரக்கலத்தினைப், பெருங் காற்றுக் கலக்குதலாற் செயன் மறந்து திகைத்தாற் போலப்; பெற்ற என்னுள்ளமும் கேட்டார்க்கு வெளிப் பட்ட மொழியைக் கற்ற வளைந்த வாயினையுடைய கிள்ளை யும், நாகணவாய்ப்புள்ளும், மானும், வரிகளையுடைய பந்தும், கோங்கினது பொன்போன்ற அழகிய மலரை யணிந்த பாவையும் ஒருங்கு வருந்தும்படி; தான் பெற்ற பேரறிவினை வெளிப்படுத்தித், தீப்போலத் தெறுதலைச் செய்யும் கொடிய பாலையிற் சென்றனளாக.

ஆலவாயென்னும் பதியில், நதிபோலொழுகும் மதத் தினையும், அஞ்சாத்தன்மையினையும், புள்ளியினையும், கொலைத்தன்மை இன்மையினையுமுடைய கல் யானையை உயிர்களையுடைய யானைகளைப்போலக் கரும்பினைத் தின் னச் செய்த கரிய நிறம் பொருந்திய கழுத்தினையுடையான், அவன் பொருந்திய எட்டு வடிவங்களுள் எல்லாரும் மகிழ் தற்கிடமாகிய ஒரு வடிவமுமாகிப்; புலியின் நகத்தால் கலக்கத்தினையடையும் உயர்ந்த தந்தத்தினையுடைய யானை யினது தோலைப் போர்த்து, ஒளியினை மறைத்ததனுல் பூமி யின்கண்ணுண்டாகிய தடுமாற்றங்கள் தடைபட்டாற் போன்ற விண்ணுகிய வடிவத்திற் பொருந்துதலால் அவ் வடிவிற் போர்த்த துகிலாகிய மேகத்தினுல் மூடப்பட்டு, ஒரு நாள் மறியுந் திரையையுடைய கடலின் நடுவிடம் குழம்ப விளங்குகின்ற மலையினுல் கலக்கியதைப்போல, நீராகிய வடிவத்தினுல் மண்ணுகிய வடிவம் உருகும்படி

கனலச்பண்ணுகிற தீயுடலேயுடைய நீ; அலைகள் தள்ளி மறித்தலேயுடைய வயலினிடத்துப் பனியினுல் வருத்தத்தை யடையாது, முள்ளேத் தண்டிலேயுடைய தாமரையானது வண்டு தங்கும்படி மலர்ந்த தன்மை போலக் கண்ணும் மனமும் களிப்பினையடைய மலர்த்துவாயாக.

## (30)

[வெறியாடுதற்கு வேலனேயழைப்பக் கண்ட தலைவி துன்பத்தினை யடைதல்.]

அறத்தினைப் புரியாது தாங்கள் மாத்திரம் உண்பவர்கட்குண்டாகும் நெடும்பழி நிலைபெறுதல்போல, நீங்காது நிலைபெற்ற நோய்; வலிய உறையில் நின்றும் அகற்றப்பட்டு அசைதலுடைய வேலினையுடையான் (வெறியாட்டாளன்) வெறியாடுதலைச் செய்து; நெல்லினைப் பிடித்து, வேலிது, கழுத்தினையுடைய மயிலிது, கோழிக்கொடியிது என்று சொல்லும் கட்டுவிச்சியினுல் தெய்வத்தினுல் ஆயதென்று அறிதலால், நடுங்குதற்குக் காரணமாகிய துன்பத்தினுல் வந்த மெலிவினையுடைய தாயரும், இங்ஙனம் சொல்லுகின்றவை என்னுகும்? நான்கு மருப்பினையுடைய அயிராவதத்தின் பிடரியில் விளங்கும் தேவர் தலைவன், வண்டுகள் பொருந்துதற்கிடமாகிய மதுவினையுடைய மாலையினை ஏந்த; முள்ளேத் தாளின்கண்ணுடைய செந்தாமரையிலிருக்கும் நான்முகன் விதிப்படி நெய்யினையூற்றி மண வேள்வித் தீயினை வளர்க்கப்; பூமியை அளந்துண்ட திருநெடுமாலோன் இரு கையையுஞ் சேர்த்துப் பெறுதற்குரிய நீரை வார்ப்ப, அண்டமெங்கும் விளங்கும்படி ஓருருளை பொருந்திய தேரையுடைய பரிதிவானவனும்,

உடலில் முயற்கறையினையுடைய திங்களும், பெரிய விளக்கை யெடுக்க ; வித்தியாதரர் எண்மரும் எட்டுத் தானங்களிலும் அளவாகத் தொழில் கொள்ளும்படி போர்த்த தோலினையு மழகினையுமுடைய யாழில் மிகுந்த புகழை வாசிக்க ; முனிவரர்கள் சிவந்த கையைத் தலையிற் குவிக்க, உருப்பசி முதலானோர் முன்னாலே வாழ்த்துதலைச் செய்ய, மூன்று முலைகளையுடைய தடாதகையை மணந்து உலகினையாண்ட மதுரைக்கிறைவனுடைய இரண்டு திரு வடிகளையும் ; இருத்துதற்கிடமாகிய வெற்றியையுடைய உள்ளத்தினர், கருதி நோக்கப் பிறவியும் குற்றமும் நீங்கி ஞற்போலப் பசலையும் அது முதிர்ந்ததனால் வந்த துன்ப மும் நீங்குமாயின், கடற்றுறையையுடைய தலைவற்கு யாம் என்னுவேம் ?

## (31)

[மீள நினைந்த தலைமகன் நெஞ்சொடு நோதல்.]

பொருளைத் தேடுதலையுடைய அவாவினால் என்னை அலைதலைச் செய்யும் கடிய கானகத்தில் தள்ளித் துன்பத் தினை எண்ணாது பண்ணி, இப்பொழுது நான்கு திக்கிலும் வெளிப்படும் கரும்புறு மூங்கிலும் (தே·ளும்) மலையும் (முலையும்) பூவிதழும் (வாயும்) திரையையுடைய கடலில் திரியும் சிறிய மீனும் (கண்) ஆகிய துன்பத்தைத் தரும் உறுப்புகளால் வரும் ஆசையைக்கொண்டு, என் பொரு ளீட்டும் வழியை எண்ணாது தடைபண்ணும் என் நெஞ்சமே ! நீ வாழ்வையாக.

கைலை மலைக்குத் தெற்குத் திக்கிலுள்ள காட்டினிடத் தில், தனிப்பட்ட தேவர்களுள்ளத்தை உடைத்தற்குக்

காரணமாகிய தாமரையம்பை ஏவினாற்போலச் சில தாமரை யம்பை யேவுதற்கேதுவாய குணத்தினையுடைய தலைவனாகிய காமனை, அழகிய நெற்றியில் தோன்றிய கண்ணாகிய தாமரையைக்கொண்டு எரித்தருளிய ஒப்பற்ற முதல்வன். அவனது அழகினையும் பெருமையினையுமுடைய மதுரை போலும் அழகினையும் செல்வத்தினையுமுடைய பொற்றொடியின், என்னுயிராகிய பொன்னையடைத்த முலையாகிய செப்பினளவாகப் பொருந்திய இன்பத்தை நினைத்தோ ? அல்லது பின்பயனைக் கொடுக்கும் பொருளைக் கருதியோ இவற்றுள் தடைப்பட்டது எதனால் ? வட்டமாகக் கிளம்புகிற முலையால்வரும் இன்பத்தை விரும்பியெனின், திரும்பிச் செல்வாயாக. அதுவல்லாமல் மிகுந்த பொருளால் வரும் இன்பத்தை நாடியெனின், அதற்கு வேறு தடையில்லையாதலால் நீ பெரிதாகக் கருதியதனைச் சொல்லுவாயாக.

## (32)

[வேழம் வினாதல்.]

நிலப்பரப்பில் மிகுந்த நிலவை வெளிப்படுத்தி ஞாயிற்றினுடலை யல்லாமல் மற்றவை யுடலையும் மறைக்கின்ற மிகுந்த இருளானது, ஞாயிற்றின் வலிக்கு ஆற்றாது அவனிடத் தொதுங்கிய தோற்றத்தைப்போலத் ; தேவர்கட்கு அருமையான வுயிரைக் கொடுத்ததனாலுண்டாகிய கரிய கழுத்தையுடையவன். கண்ணை உடைய நெற்றியை உடையவன்.

பாண்டியன் நாற்படையால் போர் செய்யப்பெற்று முன் காவலில் இடப்பெற்ற சோழன்பாட, முன்னொரு

காலத்தில் பொருந்திய நள்ளிரவில் ; அந்தப் பாண்டியனைப் போலத் தோன்றிச் சிறந்த தண்ணளியுடன் கடிய சிறையி னின்றும் விடுதலை செய்த முதல்வன். அவனது மதுரை யாகிய பழைய ஊர் போன்ற சிறப்புத் தங்கிய வெள்ளிய பற்களையும், சிவந்த வாயினையும், கரிய கூந்தலினையு முடைய பெண்காள் !

மழைபோலச் சொரிகின்ற மதத்தினையும், தழைத்த செவியினையும், துளையையுடைய கையினையும், குழி போன்ற கண்ணினையும், பெரிய காலினையும், கூரிய தந்தத் தினையுமுடைய ஒரு யானையானது ; கிளைகளும் தழையும் மிகுந்த ஒரு பழுத்த மரம்போல, வண்டுக் கூட்டமும், பறவைக் கூட்டமும், என்கணையும், மேகமும், பிடியும் பின்தொடர, மாணிக்கங்கள் கிடந்த நும்முடைய பசிய புனத்திடத்து வந்ததுண்டோ ? சொல்வீர்களாக.

## (33)

### [உலகின்மேல் வைத்துரைத்தல்.]

எல்லாம் மயங்கும்படி இருளுந்தாரகையுமாகிய இரண் டினையும் மயக்கிக், குழலெனவும் மலரெனவுஞ் சுமந்து, நோக்கினோர் உயிர் விடும்படி வில்லினை வளைத்துக் கணை யினைத் தொடுத்துப், புருவமெனவும் கண்ணெனவும் பழக் கப்படச் செய்து, முலையென்று சொல்லும்படி மலையினைத் தாங்கிச், சொல்லென்று சொல்லும்படி அமுதினைக் கடைந்து வைத்து ; அல்குல் உண்டென்னும்படி உண் மையைக் காட்டி, இடையில்லையென்று சொல்லும்படி பொய்யினைக் காட்டிப் பார்த்தவருள்ளங் தடுமாறப் பண்ணி ; அடியென்று சொல்லும்படி தாமரையை மலரச்

செய்து; உடலென்று சொல்லும்படி மாந்தளிரைப் போர்த்துப்; பார்த்தவர்கள் மனக்கலக்கத்தை யடையச் செய்து; பெருமையாக வளர்ந்து பொருந்திய நெறித்த சடையினையுடைய தாருகா வனத்து முனிவர்கள், கண் சிவப்ப உள்ளத்தில் கோபித்து ஓம குண்டஞ்செய்து, சருக்கத்தினைக் காட்டும் அரிய வேதமந்திரத்தைச் சொல்லி யிட்ட, ஓமத்தீயிலுண்டாக்குதலரிய பெரிய வாயோடு பொருந்திய புலியினை உரித்தணிந்து, தாழை முள்ளினைச் செறிந்தாற்போன்ற கூரிய பல்லினையுடைய பாம்பைச் செய்ய கரத்திலணிந்து, கரிய வுடலினையும் நெருப்பை வெளிப்படுத்திய கண்ணினையுமுடைய முயலகனைச் செந் தாமரையைப் பழித்த திருவடிகளின் கீழே தள்ளி, எல்லா ருக்குந் தண்ணளி பாலிக்கும் திருநடஞ் செய்த தேவர்கள் தலைவன்.

மூன்று புரமும் ஒரே நாளையில் தீப்பற்ற, மகாமேரு மலையைப் பிடுங்கி வில்லென வளைத்தவன்று, நீண்ட வான் வீழாது தடைபடும்படி காலாகக் கொடுத்தாற்போலப், பாக்கு மரங்களுயர்ந்து நெருங்கி நின்ற பொழில்கள் சூழ்ந் தற்கிடமாகிய மதுரையைப் போன்ற, அழகினையுடைய பெண்களின் கண்ணாகிய தெய்வத்தினது தோற்றத்தி லகப் பட்டோர் தன் நிலையில் நிற்றற்கு மாட்டாதவராவர்.

உள்ளம் பெறுதற்கு வேறு சூழ்ச்சி யில்லாவிடத்து வெள்ளிய திருநீற்றையணிந்து, எருக்கம் பூவைத் தரித்து, எலும்பினைப் பூண்டு, பனையின் கருக்குகளாலாகிய குதிரை யைச் செலுத்திக், காதலிக்கப்பட்டாரது ஓவியத்தைக் கையிற் பிடித்துக் காதலிக்கப்பட்டாரைப் பெறவேண்டு மென்னும் வருத்தமுடைய உள்ளத்தை மீட்பர்.

## (34)

### [அல்ல குறிப்பட்டு மீண்டமையை அறிவித்தல்.]

மிகுந்த ஒலியினையும், பெரிய வாயினையும், குழிந்த கண்ணினையும், வரிசையாக இல்லாத பல்லினையும், வற்றிய நரம்பினையும், தெற்றுதலையுடைய கரிய காலினையும், பனைத் தலை விரித்தாற்போன்ற விரிந்த மயிரினையும், பெரிய தலையினையும், விண்ணின்றும் புறம்புடைத்து விளங்காநின்ற உடலினையுமுடைய பேய்கள் பாட்டுப் பாடிச் சூழ்ந்து நின்றாட ; சுழன்ற கண்ணினையும், சிறிய நகையினையும், குடம்போன்ற வயிற்றினையும், இரண்டு சங்கக் குழையினையும், குறுகிய காலினையுமுடைய பூதங்களாடத் ; தேவர்களெல்லாரும் ஆனந்தமாகக் கண்ணீர் சொரிய, முனிவர்களெல்லாம் வாய் குழறக், கல்ல வடத்திரளென்னும் வாச்சியமும், அழகிய வாயினையுடைய மத்தளமென்னும் வாச்சியமும், கல்லலசென்னும் வாச்சியமும், ஒருகட் பறையாகிய மொந்தையென்னும் வாச்சியமும், துத்திரியென்னும் வாச்சியமும் முழங்க ;

அணிகலனாகப் புனைந்துள்ள பாம்பு சுழலக் கொன்றை மலர் தாதினை உதிர்ப்பப், பிறை அமுதினை இறைக்க இவை தங்கிய சடையானது நிமிரும்படி வெள்ளியம்பலத்தில் மாறியாடிய பெருமானெழுந்தருளியுள்ள மதுரைமாநகர்ப் பொலிவுபோன்ற பொலிவினையுடையாய் ! நாம் சூழ்ந்து விளையாடுதற்கிடமாகிய பொழிலினிடத்தில், இடுமணலாகிய மணற்குன்றின் வெண்மை நிறந் தெரியாது மறைக்கும் சிறகினையும், விரிந்த சூட்டினையும், செங்காலினையுமுடைய அன்னச் சேவலும் அதன் கூட்டமும், சிறிய குஞ்சினை

யணைக்கும் பெடையொடு பயந்து ஞாயிறு தோன்றும் விடியற்காலமளவும்;

அரும்பாகிய வெண் முத்தரும்பி, மகரந்தப் பொடியாகிய பசிய பொன் மலர்ந்து, பூங்கொத்தாகிய ஒப்பமிட்ட செம்பவளக் கொத்தெல்லாங் காட்டும், இரும்பு பிளவு பட்டாற்போன்ற கரிய கிளையினையுடைய புன்னையினது கொம்பிடத்தில், வாயினுற் செய்த மலராற் சேக்கையாகக் கொண்ட கூட்டினிடத்துத் துயில்கொள்ளா தாரவாரித்தற்கு, அவ்விடத்துண்டாகிய தொல்லை என்னும் அதனை யாமறிகின்றிலேம்.

## (35)

### [நலம்புனைந்துரைத்தல்.]

கற்றவறிவினுலல்லாமல் அருளினு லுண்டாகிய அறிவினை நிறைத்தடங்கும்படி, பல பல ஆசிரியனிடத்துச் சென்று கேட்கின்றவர்கள்போல, உண்டதேனன்றிப், பல மலர் தருந் தேனையுண்டமையும்படி, மூன்று வகையாகப் பொருந்திய கொழுவிய மலர்களைக் கோதிப், பாடா நிற்கும் குணத்தினையுடைய சுரும்பினங்காள்!

கருமையாகிய வுடலினையும், பிறைபோன்ற பல்லினையுமுடைய அரக்கனைக் கொன்றதினுல்; வச்சிராயுதம் பொருந்திய பெரிய கையினையுடைய தேவர் தலைவன் சுமந்த பழைய வடிவினைக் காட்டுதற்குக் காரணமாகிய தீராத பெரும் பழியினை; இமயமலை யீன்ற உமாதேவியுடன் கூடித் தீர்த்தருள் செய்யா நின்ற பெருமான் வாழும் பெரிய நகரமாகிய மதுரையைப்போலும்; சிற்றிடையினையும் பொன்னுற் செய்த வளையலையுமுடைய பெண்ணினது

கொலை செய்வாரது உள்ளம் போன்ற உள்ளமும் குறைய இருண்டு, புழுகினைப் பொருந்திய காலத்துக்கேற்ற மலர்களையணிந்து, விருந்தினரையுங் கூட்டியுண்ணுங் குணத்தினையுடையார் சுற்றம்போல் நீண்டு பொருந்தி, நெய் பூசப்பட்டதனால் குளிர்ச்சி பெற்ற கரிய குழலில் மிகுந்த வாசம்போல மணம் வீசும் பூக்களுண்டாயின் எமக்குச் சொல்வீர்களாக.

## (36)

[ நாணிழந்து வருந்தல்.]

மையினைக் குழைத்தாற்போன்ற கரிய சேற்றினையுடைய அழகிய வயலில், பறக்கமுடியாத பெரிய கிழட்டு நாரை, வஞ்சகமாகத் தூங்கியிருந்து வாய்த்த வழியைத் தப்பவிடாமல், கூரிய வாயினால் ஆரல் மீனையுண்ணுதற்கிடமாகிய மருத நிலஞ் சூழ்ந்த பெரிய நகரமாகிய மதுரையிடத்தில் ;

கையில் மானைத் தரித்த பெருமான் ; இரணியவன் மன் செல்வத்தினைப் பழித்து உயர்ந்த இன்பம் பெறுதற்குக் காரணமாகிய திருவடியை உள்ளத்துட் கொள்ளாத கூடாவொழுக்கத்தினர்போல் ; என் உயிரோடு கூடி வளர வந்த பெரிய நாணாகிய தூணினைத், தலைவன்மேல் யான் வைத்த காதலாகிய காற்று அலைக்கழிக்கும்போது, அந்த நாணினும் வலியுடைய கற்பாகிய பெருங் காற்றுச் சுற்றி, என் கட்புலங் காணாது காட்டை யென்னுங் காலத்தில் கெடும்படி புறத்துத் தள்ளுதலால், என்னைப்போல நாணழியும் நிலையில் நின்றவர் படைத்ததனால் வரும் பிறவியிடத்துய்ய, ஐயோ! குடியிற் பிறத்த லொழிக. என்னைப்

பெற்றவர் பெரு நாளோடுகூடிய கற்பினையுடையராயின், கற்பிறத்தலையுடைய குடியிற் பிறந்த முறைமையை உடையராக.

## (37)

### [தோழியியற் பழித்தல்.]

பெருங்கடலை முகந்து வயிறு நிறைந்த நெடிய மேகம், வானிற் சஞ்சரித்து முழக்கஞ் செய்து பெய்யாதிருக்கக், கருவோடு கூடி வாடும் பயிரைப்போல; அருந்ததியின் கற்பினையுடைய எமது பெருமை பொருந்திய மடந்தையானவள், கற்பாலும் நாணாலும் மெலிவினை யடைய; உண்மை தவறாத ஊரன் இன்பத்தளவுடனே மயங்கி, உயர்ந்த மரத்தில் தோன்றிய கல்லுருவியைப்போல, வேறுபடாது ஒன்றுபட்டு வேறுமனம் வைக்கும் மாண்பினையுடைய அணிகலன்களைப் பூண்ட விலைமகளிர்களிடத்தில் அருளினைப் புரிதலால்; கரிய முகிலின் நிறம்போல அழகிய நிறத்தினையும், தீப்போலக் கண்ணினையும், பிறைவளைந்தாற்போல வளைந்த கொம்பினையும் உடைத்தாய பன்றியின் குட்டிகள் பன்னிரண்டனையும்; செங்கோல் போலச் செவ்விய முறைமையாகிய முளையினை வித்தி அருளாகிய நீரை நிறைத்துக் கொலையுங் களவுமாகிய மிகுந்த களையைப் பறித்துத், திக்கெங்கும் செல்லும் ஆணையாகிய வேலியையிட்டு, அறமாகிய பெரும் பயிரினை உலகமாகிய வயலில் விளையப் பண்ணும் நாற் படையினையுடைய வன்னியராக்கிய பெருமான்.

முள்ளினையுடைய பெரிய வாயினையும் சிவந்த கண்ணினையும் உடைய வரால்கூட்டங்கள், வளைந்த வாயினையுடைய தூண்டிலில் இட்ட பெரிய கயிற்றினை அறுத்துக், குவளை

யினது பசிய இலையினையும் தாமரையையுங் கலக்கி, நெடிய வாய்க்கால்களிற் குதித்து, நீர் பாயவுண்டாக்கிய நுண்ணிய தொழிலினையுடைய மதகின் வழியை நீர் பாயாது அடைக்கும், மிகுந்த சிறப்பினையுடைய மருதநிலஞ் சூழ்ந்த மதுரைக்குத் தலைவனானவனது, இரண்டு திருவடிகளிலும் பற்று விட்டதனால் வந்த கீழ்மைக்குணஞ் செய்யும் பொய்யினர்க்குப், பெருமை யில்லாதது போலப் பெருமையும் இல்லாதவனாயினான்.

## (38)

### [பொழுதுகண்டு மயங்கல்.]

மாறுபட்ட கோலினையுடையவனாகிய அரசன் போர்க்களத்தில் வீழ்ந்ததுபோல, நெருங்கிய ஒளிகளையுடைய சூரியன் மாறுபட்டு மறையும் மலையைச் சேர்ந்து முறையே புகவும்; பதினெண்பாடைச் சொற்களும் ஊரினிடத்து அடங்கியன போலப், பல பறவைக் கூட்டம் பொய்கையினிடத்துத் துயிலுதலாகிய முயற்சியைக் கொள்ளவும்;

வேளின் கணையினாலே மெலிபவர்களாகிய மெல்லியலாரது வேடத்தைப் பார்த்து, இருளாகிய ஏந்திழை தான் செய்த இளநகைபோல முல்லையும் மல்லிகையும் மணத்தை வெளிப்படுத்தி மலரவும்;

தலைவனைப் பிரிந்த தையலாரது உள்ளத்தில் வேட்கையாகிய தீ விளையவும், மணாளரைக் கூடிய மாதரது மனத்தில் இனிமை நீர் எழவும்;

அன்றிற் பறவைகள் பனைமரத்திற் கட்டிய கூட்டிற் புகுந்து, அலகினையுடைய தத்தம் பெடைகளைத் தழுவி யுறங்கவும்;

பார்ப்பனர்க்குரிய அருமறை, அவர்கள் ஓதுமிடத்தி லிருந்து எழாதடங்கவும், கனிந்த பழங்களையும் கிழங்கு களையும் முனிவர் கூட்டங்கள் அகாலமென்று மறுக்கவும்;

சந்தனக் குழம்பும் மலர் மாலைகளும் தோளினும் முடி யினும் மணம் வீசவும், விரிந்த வலையினையுடைய நெய்த நில மாக்கள், நெய்தற் பறையைக் கையில் தாங்கித், துத்த மென்னும் ஒலியையும், கைக்கிளை யென்னும் ஒலியையும் நூலளவைபெற எழுப்பவும்;

நீரில் வாழும் தெய்வ மகளிரது சிவந்த வாய்போலக் காட்டிப், பசிய தாளினையும் சிவந்த நிறத்தையுங்கொண் டிருக்கின்ற செவ்வல்லி யரும்புகள் மலரவும்;

தோள்களும், இசைகளும், சொல்லப்படுகின்ற கலை களும், அருளாகிய அழகுள்ள எழுத்துக்களும் பொருளை யுடைய சிறப்புள்ளமறைகளும், யாவரும் விரும்பிய குணங் களும், அருமையாகிய அழகிய வடிவமும், இவை முதலாகிய எட்டுச் சொற்களும் பகுப்பான முறையே, முதலில் எட்டாகவும், ஏழாகவும், சொல்லின் ஆருகவும், ஐந்தாக வும், நான்காகவும், அணிமை தரு மூன்ருகவும், கெடாத இரண்டாகவும், சொல்லுதற்கரியஒன்ருகவும், அரிய உயிர்ப் பரப்புகள் உடலோடு வாழ்ந்திருப்ப, அருள் வருமாறு நிலை பெறச் செய்த மிகுந்த தண்ணளியுள்ள, கூடலென்னும் பெரிய நகரத்தில் நிறைந்திருக்கின்ற முக்கண்களையுடைய முதல்வனைத் தொழாதவரைக் கூடிய பெருவினைகள் மூடிக் கொண்டாற் போலவும்;

துறவினுலும் இல்லறத்தினுலும் பயனைப் பெறலில் லாத மனிதர்களது, வெளிப்படாத அறிவும் விளக்கமில் லாத மனமும் போலவும்; செவ்வானமாகிய அக்கினியோடு

புகுந்த நல்ல மாலைக்காலமே! என்னுயிரை நீ சூழ்ந்த காட்சியைப்போல நால்வகைச் சேனைகளையுமுடைய வாசனையும், அவன் பாசறையிலுள்ளோரையும் சூழ்ந்து கொண்டனையோ? உன் மனக்கூறு பாட்டைச் சொல்லு வாயாக.

## (39)

[தலைவன் தலைவியை அவள் ஆடிடத்துய்த்தல்.]

நீ, தோழிகளுடன் முற்பட்டு விளையாடக் கடவாய். குமுதமலரும், வள்ளைக்கொடியும், நீலோற்பல மலரும் குமுத மலரும், ஒரு தாமரை மலரில் அடங்கி வளர்தலைச் செய்த, தாமரை மலரின்கண் அழகு நிறைந்த திருமகள் போல்வாய்! நீ, விளையாடுதலைச் செய்வாயாக.

பலவகைக் குறியைப் பெற்ற இவ்வுலகத்தின் கண் ஆன்மகோடிகளை ஈன்றருளிய, பஞ்சினும் மென்மையான திருவடிகளையுடைய பாவை போலும் உமை, ஒரு பாக மாகிக், கருங்குருவிக்குத் தனது கண்ணருளைக் கொடுத்துப் பாதுகாத்த, வெள்ளிய திருநீறுள்ள செவ்வானம் போன்ற திருவுடலை யுடையவனுகிய, முனிவர் தமதிருக்கையி லோதும் தொடையொடுங் கூடிய மறையொலியும், சோலை யின்மீது கிடந்த சூலையுடைய மேகங்களினொலியும், கால் விலங்கை யறுத்தற்குக் காரணமான யானைகள் வெளிப் படுத்துகின்ற வொலியும், அழகுபொருந்திய மேன்மொட் டினையுடைய நீண்ட தேரின தொலியும் கூடி ஒலித்தலால், அவ்வொலிகள் நின்ற நிலையினின்றும் பெருகித், திசை யானைகளைச் செவிடு படுத்துகின்ற புண்ணியம் மிகுந்த கூடன்மா நகரத்துள், பெருமையோ டெழுந்தருளியுள்ள சோமசுந்தரப் பெருமானது திருவடிகளை மனத்தின்கண்

தாங்கிய அருளாளர் போல; நின்னையடையுந் தவத்தைச் செய்து நிறைவேற்றிய யானும், பெரிய தேனடையைக் கிழித்துச், சிவந்த மாணிக்கங்களைப் பல விடங்களினுஞ் சிதறிப், பலாவினது கிளைகளில் படர்ந்த மிளகுக் கொடிகளை வளைத்துக், கல்லென்னு மொலியுடன் இழிந்து புனங்களிற் பரவுகின்ற மிகுந்த வொலியுள்ள அருவி நீரினையுடைய அழகிய மலைச்சாரலின் புறத்திற் சென்று நின்னிடத்தில் வருவேனாக.

## (40)

[ விரதியரோடுரைத்தல். ]

சந்திரர் சூரியரது ஒளியை வீசுகின்ற தூய்மையான அருளே கவசமாக அணியத்தக்க திருநீற்றினால், நல்வினை தீவினைகளை ஒட்டிய திருவுடல் மூழ்கப்பெற்று, உடலின் நடுவிற்கட்டிய சுரைக்காயாகிய கமண்டலத்தைப் பரிசுத்தமுள்ள திருநீற்றுப் பையோடு தோளில் மாட்டி, முடங்கிய விழுதுபோன்ற சடையை முடியாக முடித்து, ஞான ஆவரணியம் முதலிய எட்டுக் குற்றங்களையும் முதலறக் கெடுத்து, இவ்வழியி லெதிர்ப்பட்ட செய்தற்கரிய தவச் செல்வத்தையுடையீர்!

வெப்பந் தணியாத கொடிய இப்பாலை நிலமானது தரா நின்ற தீயானது, மேலெழுந்துபோய்; பொன்னிறமான வுடலையுடைய தேவர்கள், தஞ்சுற்றத்துடனே அவ் வெப்பத்தால் மயங்குதலையடைந்து, மேகங்களைப் பல அலைகளையுடைய ஆகாய கங்கையுடன் தம்முலகின் கீழிருத்தி, நன்றாகத் தளிர்த்த கற்பகச் சோலையுள் நுழைந்து, கண்களிமையாமல் அமிர்தத்தைப் பகுத்துண்டு தமது

வலிய உயிரைத், தாங்கும்படியுள்ள பாலை வழியில் நீ வந்தாயென்று நீவிர் சொல்லும் சொல்லொழிக.

புதுமையான பாதிரி மலர்களையணிந்த காளைப் பருவத்தை யுடையவனோடு, எவ்வகை உபாயத்தினாலும் தள்ளப்படாத ஊழ்வினை காரணமாகச் செல்லுந் தலைவியானவள், செல்லுகின்றாளென்றும்; தாயினது கால்களை வணங்கினாளென்றும், தன்னையத்தினுள்ளாரை யுசாவினளென்றும், தோழியைத் தழுவினளென்றும், மற்றையோர்க்கும் உபசாரஞ் சொல்லினள் என்றும், கிளி முதலிய பறவைகளை நினைத்து, உள்ளம் இரங்கி மயங்கின ளென்றும்; தீப்போன்ற விழியினையும், பெரிய வாயினையுமுடைய புலியினது பால் துளிக்கும் முலையின்கண், பசிய கண்களையுடைய மான்கன்று பாலுண்ணும்படி யரசியல் செய்தருளிய அருள் நிறைந்த எம்பெருமான். இருண் மலிந்த கண்டத்தினையுடையோன்; அவனது ஆகாயம் நிறைபத் தோன்றிய அழகுள்ள நட்சத்திரக் கூட்டங்களைப்போல, புன்னைச் சோலைகளில் பூக்கள் நிறைந்த மதுரையில், நும் அழகிய திருவடி வருத்தப்பட்டாயினும் போய்ச் சேர்ந்து, என்னன்னைமார்க்கு இக்குறிகளைச் சொல்லுதல் வேண்டும்.

## (41)

[ அவயவங் கூறல். ]

உயிரினும் அருமையாகிய அந்தந்த உறுப்புகளைக் கொண்டு, மகாமேருவானது நடுங்கினாலும் நடுங்குறாத எனதுயிரைப், புள்ளி தங்கிய முகத்தினையும், துளையுள்ள கையினையுமுடைய யானையினது, துயிலில் உண்டாகுங் கனவிலே சிங்கத்தைக் கண்ட மிகுந்த துன்பம் போலத் துன்பப்படுத்திய இளங்கொடி போன்ற தலைவிக்கு;

ஓடியாடுதல் புரிந்த குறுகிய கால்களையுடைய பூதங்கள், விண்ணிடத்தைக் கிழித்து அவ்விடத்திலுள்ள பிறையை வாயில் வைக்கவும், பைசாசக் கூட்டங்கள் துள்ளவும், பேய்களுந் திரிந்தாடவும், மத்தியந்தனனென்னும் முனிவரன், வரம் பெறுமாறு சொல்லியனுப்புதலும் தில்லையைக் கண்ட புலிக்கால் முனிவனும், அநசூயை என்னும் பார்ப்பனி தனது கையிலிருந்து தரையில் விட்டதால், பதஞ்சலி முனிவனாகிய ஆயிரம்பட வரிசையுள்ள தவத்தால் அரியவொருவனும், கண்களாற் பெற்று உள்ளமாகிய வீட்டில் நிறைப்பவும், வீட்டுத் திருவையளித்தற்குரிய கூத்தைச் செய்த உலகிற்குயிராக நின்ற பிரானானவனும்;

கடலிடத்து மாமரமாகத் தோன்றிய சூரபதுமனையழித்த தீத் தவழாநின்ற நெடிய வேலாயுதத்தினையுடையவன். தேருருள்போலுங் கடப்பங் கொத்துக் களாலாகிய பெரிய மலர் மாலையையுடையவன். அவன் தேவர் தலைவன் மகளாகிய தெய்வயானை நாச்சியாரை விரும்பிப், பரிபாகம் நிறைப்பித்துக் களிப்புடன் எழுந்தருளியுள்ள ஒப்பற்ற திருப்பரங்குன்றமும்;

பொன்னாலாகிய ஆடையும், மணிப்பரல்களையுடைய சிலம்பும் வரிசையான தலைச்சூடிகையுள்ள தீப்போலும் ஒளியை வெளிப்படுத்துகின்ற கௌத்துவாபரணமும், வண்டுகளிசை பாடுகின்ற பச்சிலையாகிய துழாய் மாலையும், மரகத மணி நிறத்தை வருந்தப்பண்ணின உடலினிடத்துத் தலை மயங்கும்படி நிறைமதி யிருத்தற்கிடமான ஆழமாகிய கடலை, மந்தரமத்தாற் கலங்கச்செய்து அமுதத்தைக் கையிலேந்தித் தேவர்கட்குக் கொடுத்த கடவுளின் ஒரு பாகத்திலுள்ள திருமால் வீற்றிருக்கும் கோயிலும்;

மரக்கால் என்னும் தனது விளையாடலைப் புரிந்து அரக்கரை வீழ்த்தின, பிறைத்தலை போலும் பிளவுபட்ட தலையுள்ள வலிய சூலமேந்திய துர்க்கையானவள், வடக்கின்கண் விரும்பிய ஊன்மணங்கொண்ட கோயிலும்;

கங்கணமும் தோள் வளையலும் பொருந்தி ஒளி பெருக்கா நிற்ப, யாவரது பகைமையையும், யாதொன்றனது பகைமையையும் ஒழியும்படி, தனது சிறப்பாற் காத்து வளருகின்ற நன்மைகளைத் தந்தருளுகின்ற ஊழிக்காலமும், ஓர் கணப்போதாக வளருகின்ற வடுகக் கடவுளது ஆலயமும்;

வண்டுகளா லுண்ணப்படாத பொன்னரி மாலையினையுடைய தேவர்களும், மக்களொடு நெருங்கி யுலாவுகின்ற வீதியினிடங்களும், நிறைந்த மதுவைத் துளிக்கின்ற பூவொடு நெருங்கி, அச்சத்தைத் தருகின்ற தெய்வப் பெண்கள் உடலை நடுங்குதல் செய்கின்ற ஊழிக் காற்றுத் தடைபடுகின்ற சோலைப் பக்கங்களும்;

தத்தம் தலைவரோடு ஊடி நீராடும் மகளிரை, அலைகளாகிய கையைக் கொண்டு தோழியைப்போல அவ்வூடலைத் தீர்க்கா நின்ற வைகை நதியின் ஒலியும்;

அளவுபடுத்த முடியாத ஊழி முடிவிலும், மெய்ம்மையாற் சூழப்பெற்று என்றும் நிலைபெற்று உயர்ந்து, கேடில்லாத அறத்தை வளர்க்கும் அமையாத மிக்க புகழையுடைய அருள் பொருந்திய மதுரைமா நகரத்தே;

பெண்ணைத் தன்னுடலிற் பாதியாகக் கொண்டவனும், முடியிற் பிறையைத் தரித்தவனும், பொற்றகட்டின் மேற் பரப்பிய நீலமணியி னொழுங்கென்று சொல்லும்படி ஆண்

வண்டுகளும் பெண் வண்டுகளும், மருளைச் செய்கின்ற இசையைப் பாடி; மலர்தலால் வெளிப்படுகின்ற தேனை யுண்டுறங்குகின்ற கொன்றை மாலையை உடையவனுமாகிய சோமசுந்தரக் கடவுளது, திருவடியைப் புகழ்வோரது செல்வத்தைப்போல வளர்ந்து மேலோங்கித் தலை நிமிர்ந்தனவும் அணிகலன்கள் பொருந்தியனவும் அழகையுடையனவுமாகிய முலைகள்;

மலைபோன்ற முலைப் பகையைச் செய்தலால் வருத்தத்தையடையும் இடையானது, அக்கடவுளின் திருவடியைப் பாடுகின்றவரது தேய்தற்குரிய வினை தேய்வது போன்றிருக்கும்.

மணியையுடைய பாம்பின் படத்தைப் போன்ற அல்குலானது, அக்கடவுள் அரையிற் கட்டின பாம்பானது படத்தை விரித்ததை யொக்கும்.

இரண்டு காதையுங் கிழித்துருவுகின்ற செவ்வரி பரந்த களிப்புப் பொருந்திய மலர்க்கண்களானவை, அப்பெருமான் கையின்கண் ணேந்திய கலைமானை யொத்திருக்கும்.

## (42)

[அன்னமோடழிதல்.]

கிளைகளாகிய பவழக் கொடிகள் வடவாமுகாக்கினியைப்போலத் திரட்சியுள்ளனவாய்ப் பக்கங்களிற் பரப்பி, அரையிற் கயிறு பெறக் கட்டி முத்து முதலிய மணிகளைக் குளித்தெடுக்கும் மாந்தர்களது உள்ளத்தை யெரிக்காநின்ற உப்புக் கடல்சூழ்ந்த குளிர்ச்சி பொருந்திய நாவலந் தீவிலுள்ளார் இன்பத்துடனே துயிலவும்;

உலகம் முழுவதையும் விழுங்கிய நடுராத்திரியில் உறங்குதலற்ற சுற்றத்தோடு உயிர்களாகிய இரையைத் தேடுகின்ற நெடியவுடலினையும், பெரிய வாயினையுமுடைய பேய்க் கணங்கள் துயிலவும்;

குஞ்சுகளையும், பெடையையும் சிறகினுள்ளே தழுவித் தஞ்சுற்றத்தோடுஞ் சூழ்ந்து பறவைக்கூட்டங்கள் துயிலவும்;

கீழே அரும்புகளையணைத்த முள்ளினைத் தண்டிலுடைய தாமரைகள், இதழாகிய கதவுகளை யடைத்துக் கொண்டு மலர்களாகிய கண் துயிலவும்;

விரிந்த கிளைகளில் தளர்த்த பசிய இலைகளையொடுக்கிக் கொண்டு, பூவோடும் வண்டுகளோடும் பொழில்களுந் துயிலவும்;

புள்ளின் கால்களையுடைய தும்புரு நாரதராகிய யாழ் வல்லோர் பாடலுக்கு, உறையுளாகக் கொடுத்த பாலைத் தன்னிடத்திலுள்ள களவினது, சிறிய காயுடன் பொருந்திய பச்சிலைக் கொத்துக்கள், மயிரைக் குறைக்கும் கருவியைப்போல இரண்டு காதிலும் அசையவும்;

கட்டப்பட்ட விறகுக் கட்டைத், திங்களும் பாம்பும் கொன்றையும் நீங்கிக் கட்டவிழ்ந்த முடிமேல் வைத்து; வீதிகளினும் சந்துகளினும் அதிக விலைகூறிச், சூரியன் கண்ணுக்குக் காணப்படாமல் மறைந்த தீயையொத்த செவ்வானமானது, பிரிந்தோருள்ளத்தின் கண்ணே பொருந்தப் புகுந்தபின் கரியவுடலை அனைவருக்குங் காட்டிக், கண்ட கண்கள் தன்னிடத்துப் புதையுமாறு இருளென்னும் பெண்ணும் மெல்லப் பார்க்கவும்;

ஒலித்தெழுகின்ற இசை நூலில் முயற்சியுள்ளவனுகி வாது செய்ய இசைந்தவனும், வடக்குத் தேசத்தினின்றும் வந்தவனுமாகிய ஏமநாதனென்னும் பாணன் தங்கியிருந்த வீட்டின் அகன்ற வாயிலில்; தென் மதுரையிலுள்ள பாணபத்திரனது அடிமையென்று சொல்லி விலையாகாத விறகுடன் தலைக்கடையிலிருந்து; நாபியினின்றுந் தோற்ற மாகிய ஓசையானது அங்ஙனம் நின்றெருடுங்கப், பாலை என்னும் பண்ணில் ஆரோகணமாக எழுப்பி, அவரோகண மாக இறங்கித் தூங்கலும் துள்ளலும் மெலிந்து நின்றெழுதலும் ஒழுங்காகக் காட்டிப் பாடிய சாதாரி யென்னும் இசையை உலகத்திலுள்ள உயிர்கள் ஒருமனப்பட்டமையக், கந்தருவ நூன் முறைப்படி பாடியருளிப், பத்திரன் பகைவனுகிய பாணனை ஓடச் செய்த, மதுரைக் கிறைவனுகிய சோமசுந்தரக் கடவுளது திருவடிகளை நினையாதொழிந்தவர்களைப்போல, என் கண்ணுறங்காத தன்மையை நமது அன்னப் பறவையானது முன்னறிந்தும் அந்தத் தலைவர்க்குச் சொல்லாது.

## (43)

### [சொல்லாதேகல்.]

நான் பிரிவேனல்லன் என்று சொல்லின், பிரிவு உள்ளதென்று உள்ளத்தில் நினைத்தும், ஒன்றும் சொல்லாதிருக்கும் விரதத்தை மேற்கொண்டால் செய்கைகளும் குணங்களும் மாறுபட்டு மனந் திரியவும்; பக்கங்களில் நின்று பேசும் குறிப்பறிந்து துன்பப்படுதற்குக் காரணமானதை யூகித்தறிந்தும், எதிரே நின்று முகத்தைப் பார்த்தால் மனங் கலங்கியும், பேசும் சொற்களில் திசையென்று சொன்ன அளவில் மயக்கத்தை யடைந்தும், ஏதாமொரு

திசையை நோக்கினாலும் அந்தத் திசையைப் பார்த்து இருந்தாலும் இது பிரிவின் குறியென்று உள்ளம் வருந்தி யும்;

அருகிலிருந்து ஏவல் வினைபுரிவார், போக்குள்ள தென்று நினைப்பில்லாமற் சொல்லினும் மூலைகளாகிய மலை களின்மேல் வீழ்த்திய கண்ணருவியுடன், குளிர்ந்த முத் துக்களும் சிவப்பாகிய மணிகளும், தீந்து கரியாகப் போமாறு நெருப்பாக பெருமூச்செறிந்தும், நீவிர் செல்லு மென்னும் பிறர் வாய்ச் சொல்லைக் காதாற் கேட்பினும் உள்ளம் புகைந்தும், பிரிவென்னுந் துன்பத்தினைக்கொள் ளாதவர்களது முடிவும், பிரிவென்னுந் துணையினைக்கொண் டோரது சொல்லுதலாகிய முடிவும் இத்தன்மையதென்று வெளிப்படுத்திய மயில்போலும் தலைவிக்கு; இப்பொழுது யான்; முன் காலத்தில் ஒரு வணிகனுனவன் பிள்ளைப் பேறில்லாமையால் மருமகனை மகனெனச் சடங்கு செய்து கொண்டு, தன்னுயிரும் அந்தக் கரணமும் அப்பிள்ளையி னிடத்தில் ஒருங்குவைத்து; கங்கை யமுனை சரசுவதி என்னும் முக்கூடலாகிய சிறந்த தீர்த்தத்தில் மனையா ளோடு நீராடி அவ் வடகாசியில் உடலைவிட்டு அருளாகிய பொருளை அவன் மறுமையில் கைக்கொண்ட பின்னர்; அவன் தாயத்தராகிய பொருள் கவரும் சுற்றத்தார், அவன் காணியை முன்னம் கைக்கொண்டிருந்த வேறு பரம்பரைப் பிள்ளையைச், சுற்றத்தாரைக்கொண்டு அவைகூட்டி நெருங் கிய வழக்கில் செலுத்தித் தாங் காணியைக் கைக் கொள்ளு தலும்; அப்புதல்வனும் மற்றை யுறவினரும், மதியை முடி யின்கண் தரித்த கடவுளே! நின் திருவுளமாகிய ஓர் புக லிடமல்லாமல் வேறுதரவில்லை யென்று வருந்துகின்ற அக் காலையில் ஒரு பக்கத்திலிருந்து அவன் மாமனென்று

சொல்லும்படி அறிவாகிய பூரண ஒளியே ஓர் வடிவந் தரித்துவந்து; அருளோடு வழக்குப் பேசி, அத்தாயத்தாரது வழக்கைக் கெடுத்தருளிய மதுரை நாயகனது திருவடிகளை வணங்காதார் போலச், சொல்லாற் சொல்லி நேர்மையாகப் பிரிந்து செல்லும் வகை எவ்விதமாகக் கூடும்? (இப்பொழுது யான், சொல்லாற் சொல்லிப் பிரிந்து செல்லும்வகை எப்படிக் கூடுமென்று கூட்டுக.)

## (44)

[தலைவியை முதலி லெதிர்ப்பட்ட தலைவன், அவள் தெய்வ மல்லவென்று தெளிதல்.]

என்னுடன் மாறுபட்டு விருப்பத்தை யடைந்து மயங்குகின்ற மனமே! கேட்பாயாக!

கொன்றை மலர் மாலையையும், தும்பை மலர் மாலையையும், இளமதியையும் மறைத்து வளையல் விற்பவரது வடிவத்தைக் கொண்டருளி, இயலிசை நாடகமாகிய முத்தமிழும் நான்மறைகளும் பிறந்தருளிய திருவாக்கால் வீதியின்கண் வளையல் விலை கூறி, முன் விதித்த வரத்தால்; கரிய மேகங்கள் வெளுக்கவும், கருமணல் நீரில் குளிப்பவும், பார்க்கின்றோர் கண்கள் புதைந்திடத்தக்க நெருங்கிய இருட் பிழம்பானது விடியவும்; உடல்கடோறும் பிணிக்கப்பட்ட பாவங்கள் வாடவும் செய்த நீண்ட கூந்தலையுடைய வணிக மாதர்களின் கைகளைக் குவித்துப் பிடித்து, வளையல் என்னும் அணியைப் பொருந்திய ஒப்பற்ற தனி நாயகன்;

நாரைகளும் அன்னப் பறவைகளும் வெள்ளிய சங்கினங்களைத், தாந்தா மீன்ற முட்டைகளும் குஞ்சுகளுமாகுமென்று கருதி, அடை கிடக்கின்ற அலைபொருந்திய

நீரினையுடைய வயல்களாற் சூழப்பெற்ற, பழைய நகரமாகிய கூடலை ஒப்புடையவளாகிய இந்தப் பொன்னாலாய தொடியினையுடைய பெண்ணானவள் ;

நிலைபெற்றறியத்தக்க கல்வியைப் பொருந்திய அறிஞர்களாற் செய்யப் பெற்றதும், அலங்கரித்துப் பாடப் பெற்றதும் ஆகிய, பெரிய கவிகளினிடத்தே; செறிந்துள்ள பொருளைப்போல உயர்ந்து பக்கங்களிற் பரந்து, உள்ளே அமுதமூறிக் காணப்பெறுங் குறிப்புடன் பெருத்துக், கச்சினைக் கிழித்து, எழுத்தெனவும் மணியெனவும் பொன்னெனவும், பூவெனவும், மலையெனவும் அச்செய்யுளைப் போலச் சம்பந்தம் பெற்று அழகினைக் கொண்ட முலைமேல் அணிந்த மாலைகளும் வாடுதலையடைந்தன.

செங்கோலையுடைய அரசனது முறைத் தொழிலைப் போல, அமுதமும் விடமும் வாளும் பெற்ற களிப்புப் பொருத்திய விழிகளாகிய தாமரை மலர்கள் விரிந்து போர் செய்தலுடன் இமையா நின்றன.

முன் செய்து, விட்ட குறையை நிறைவேற்ற வந்தவர்களது பிறவியைப்போலக் கால்களாகிய மலர்கள் மண் மீது பொருந்தி நடவா நின்றன. அமுதத் துணிகளரும்பின. நிறைமதியென்று சொல்லுமாறு பொருந்திய முகத்தின் கண் வியர்வு அரும்பா நின்றன. இவளுள்ளமும் சுழலா நின்றன. ஆகையால் இவள் தெய்வப்பெண்ணுமென்று நீ நினையற்க.

## [45]

[கூதிர்க்காலம் கண்டு வருந்துதல்.]

பசி மயக்கத்தாலே கட்டப்பெற்ற பிள்ளையாகிய வண்டுகள் அரற்றுதலைச் செய்ய ஆசையின் மிக்க சோலை

யாகிய நற்ருய், அரும்புகளாகிய முலைக் கண்களைத் திறந்து உமிழாநின்ற மதுவாகிய பாலைப், பூங்கொத்துக்களாகிய இரு கரங்களால் ஆசையோடு தழுவித்; தெவிட்டவுண் பித்து விரிந்த மலராகிய தொட்டிலில் சோர்வு நீங்கத் துயிலப்பண்ணுஞ் சிறப்பினையுடைய நகராகிய மதுரையில், அருளுடன் நிறைந்தவன். எல்லாவுயிர்களும் தோன்றுதற்குக் காரணமாகிய தலைவன்;

குராவரும்புகள் சூழ்ந்தாலொத்த வெள்ளிய பற்களையும், தீப்போன்ற விழியினையும், பிளவுபட்ட வாயினையும் உடைய காப்பாகிய பாம்பு, மாலைபோல் வளைந்து எல்லை காட்டுதலால், ஆலவாய் என்று பெயர் நிறைந்ததாகச் செய்தருளியவன். திங்களை முடியில் தரித்தவன். இத் தகைய ஒப்பற்ற முதல்வனது செந்தாமரை போன்றலர்ந்த திருவடியைக் கண்ணிஞற் காணுத வஞ்சகரது உள்ளத்தைப்போலக்; கருமையாகிய நெருங்கிய முகில் கூட்டம் முழங்காநின்ற குரலுடனே எம்முயிர்க்கும், இடையிலே தன்னைக் கண்ட ஏனையோருயிர்க்கும், மனததை மிக வருத்துகிற பெரிய துயர் ஒழியாமல் வருத்த; துன்பமுருத மனத்துடனே பகைவர்மேற் போர் செய்யுந் தொழிலிற் சென்ருேரது மனத்தைக் கவராதொழியினும், இக் கார்ப் பருவங் கண்ணிலேனுங் காணப்படுமோ? என்னுள்ளே நிறைந்திருந்த மனமே! சொல்லுவாயாக.

## (46)

[முகிலொடு கூறல்.]

கருங் குழலினையுஞ், செவ்வாயினையும், சிறிய இடையினையுமுடைய தலைவிக்கு, உள்ளத்திற் றுன்பத்தைக் கொடுத்துக் கண்டுயிலலை நீங்கச் செய்த அமையாத துன்

பத்தை வருந்தக் காணும்பொருட்டு; வாய் விரிந்த பொரி யைத் தெளித்து, மணந் தங்கிய மலர்களைப் பரப்பிக் கோயில்களில் உண்டாக்கும் மணப் புகையையுண்டாக்கி, ஆகாயமெங்கும் பரவ எட்டுத் திசையினும் சோற்றுப் கோயில்களில் உண்டாக்கும் மணப் புகையையுண்டாக்கி ஆகாயமெங்கும் பரவ எட்டுத் திசையினும் சோற்றுப் பலியை இறைத்துத், தொங்குகின்ற பூணூலைத் தரித்த பார்ப்பனர் வந்து குறிகளைச் சொல்லியதால்; நீண்ட நக ரத்தினது முன்னிடத்தின்கண் பக்கங்களிற் சூழ்ந்துள்ள கரையைத் தோண்டியெடுத்த மறிக்கப்பட்ட நீரொழுகும் வாய்க்காலும்; வெள்ளிய கார் நெல்லை விதைக்கும் நாளைக் குறித்து உழுகின்றவர்களும், சூல் நிறைந்து வருந்தாநின்ற சுரிந்த முகமுள்ள சங்கக் கூட்டங்களின் ஒலியும், மீனி னத்தையுண்ணும் களிப்பினையுடைய குருகினங்களும்; மலைச் சிறகையரிந்த மருத நிலக் கடவுளாகிய தேவர் தலை வனை வணங்கி, வரிசை வரிசையாய் நின்று வாழ்த்தி முறையே நாற்று முடிகளை நடுகின்றவர்களும் நாற்று முடி களை நிறையப் பெய்த வண்டில்களை இழுத்துச் செல்லுகின் றவர்களும்; தாமரை மலரிலிருந்து பாடாநின்ற வண்டு களின் பண்ணோசையும், ஆகிய இவைகளெல்லாஞ் சேர்ந்து அதிர்த்து ஒலிக்கின்ற பேரொலியானது தேவரையடைந்து அவர் முடித் தலைகளைத் திமிரேற அடிக் கடி செய்கின்ற சேடையுழுத மிகுந்த நீரையுடைய வயல் களாற் சூழப்பெற்ற மதுரைமாநகரின்கண், நீங்காதெழுந் தருளியிருக்கின்ற நிமிர்ந்த சடையையுடைய பெருமான்.

பாம்பினது வாயைக் கிழித்த திருமால்போல, மண் ணைத் தோண்டியெடுத்து மிகுந்து வருகின்ற நீரினையுடைய வையைநதியின் கரையையடைக்குமாறு, மண்ணைச்சுமந்து கொட்டுதற் தொழிற்குரிய ஆளாகி, நரைத்த தலையினை யுடைய மூதாட்டியாகிய வந்தியென்பவள், இடித்தமாவாற்

சுட்ட பிட்டுணவைக் கூலியாகப் பெற்றுக் கொண்டு கரையை யடைப்பதுபோல உடைப்பதைப் பார்த்துப் பாண்டியன் பிரம்பாலடிக்க அவனடியை யேற்று; அந்த அடியை எந்த உயிர்க்கும் எந்த உலகத்திற்கும் எந்த விதக் கருவினுக்கும் முழுதுமாகப் படும்படி தந்த அருள் நிறைந்த தலைவன்; அவனது அழகிய கண்டத்தின் கண்ணுள்ள இருள்போலப் பொருந்திவரும் பெரிய மேகமே! என்னுடைய கண்ணைக் கடந்துபோய் ஒன்ருய்க் கூடி வேகத்தோடும் நீ போவாதொழிவையாக!

## (47)

[தழை விருப்புரைத்தல்.]

அறுகம் புல்லையும் தும்பை மலரையும் அணிந்த சிவப்பாகிய சடையையும், கலைமானையும் மழுவையும் அரைக்குக் கட்டிய பாம்பையும் பிறவற்றையும் தோன்ருமல் மறைத்து ஒரு வேடுவனுகி, அருச்சுனனது அருந்தவத்தை அழித்துப் போராடி, அவன் வில்லாலடித்த தழும்பைத் திருமுடியில் தாங்கி, அழகினையுடைய அம்புக்கூடு வற்ருது விளையுமாறு, பாசுபதமென்னும் கணையை அன்புடன் அருள்புரிந்தவனும்;

தென்கடலின் நடுவிடத்தை மேடாகச் செய்து அதிலுறைந்து, தேவர்களுடைய ஊரையழித்துண்ட சூரபதுமனின் உடலைப், பார்ப்பனர் வளர்க்கும் முத்தீ வளருமாறு இரு கூருக்கிய அழகிய வேலாயுதத்தையுடைய குமாரக் கடவுள், தெய்வயானை யம்மையாரைத் திருமணம் புரிந்து மிகுந்த களிப்புடனுறையும் பெருமையாகிய அருள்நிறைந்த திருப்பரங்குன்றம், மேற்குத் திக்கில் விளங்குதலையுடைய, மிக்க நல்வினைப் பயனைத் தருகின்ற மதுரையிலே சடையிற் பிறையை யணிந்தவனும் ஆகிய பெருமானது திருவடிகளி

னருட் பெருந்தேனைப், பருகுகின்றவர்களைப்போல மணத்தோடு தளிர்த்த வாடாத மலருள்ள தழைகளை ஒப்பற்ற நீ கொடுத்தாய். யான் அவற்றைத் தலை மகட்குக் கொடுத்தேனாக. அம்முறையைச் சொல்லுங்கால் அத்தழைகள் தலைவியின் கண்மலர்களாற் கவரப்பட்டும், கைம்மலர்களால் அஞ்சலிக்கப்பட்டும், பெரு மூச்செறியுமாறு முலைகளிடத்தேஒற்றிக்கொள்ளப்பட்டும், சற்றேஊடப்பட்டும் மீண்டும் தொழப்பெற்றும், மகிழ்ச்சியுடன் முகமனுரைக்கப்பட்டும், காம நோய் பொறுத்தலில்லாத் தோற்றத்தை யுடையளாய் நிறையாற் கைவிடப்பட்ட அத் தலைவிக்கு நீயே ஆயினவாம்.

## (48)

[விரவிக் கூறல்.]

வியர்வாகிய அமுதம் அரும்பிப், போர் செய்ய முயலுதலையுடைய கண் கறுத்துக் குளிர்ச்சியைத் தந்து நிற்றலால் நிறைமதியாகிப்; பொன்னிறமாகிய கன்னிகையுள்ள தாமரைப் பூவைக் கூம்பச் செய்து குறைவில்லாத தண்ணளியைத் தன்னிடத்துப் பாதுகாவாநின்ற புதுமை பயக்கும் முகத்தினையுடைய திருவே! உன்னுடைய விளக்கம் மிக்க கண்களாலே நோக்குவையாயின் இனிய உயிர் வாழ்க்கையை நின்னுடலிடத்தே காப்பாற்றவல்லையல்லை?

ஒப்பற்ற தனியடியானுக்குதவ வேண்டிப் பூமியிலுள்ளோர் காணுமாறு கேடகமும் வாளும் கையிலெடுத்து முதலிற் பொருந்தி நிற்றலும், நெருங்கும் நிலையிலே பார்வை வைத்து வாளொடு கிட்டுதலும், வாளை மார்பிலேற்று எதிர்த்தலும், ஒருவ ரொருவரைப்பறறி நின்று போர் செய்தலும், கைக்குள்ளடக்கி முறித்தலும்

முகத்தோட்டடங்குதலும், அழகுள்ள மயில்போலும் ஞமலிபோலும் முறையே பின்னே பறிந்து முன்னே நடத்தலும், ஒருவர் உடல் ஒருவர் உடலோடு மயங்கி மேலுறவெடுத்தலும், வளைந்து இடம்புறமாக அறைகூவலும், ஒருவர் கையோ டொருவர் கையேறச் சேர இறுக்குதலும், குறிவழி பிழைத்து நிலைக்களத்தே இழுத்தலும், என்று சொல்லப்படும் இவ்வகுப்புக்களாகிய பிற, வாள் வித்தைத் தொழில்களும் காணப்படுகிற வாட் போரில் மிக முயன்று அவ்வடியவனது பகைவனாகிய சித்தனென்னுஞ் சிறு தொழிலாளனை உறுப்புக்களைத் தனித் தனி அறுத்த அருட் பெருங் கடவுள். அக்கடவுளினது மதுரையிடத்தே அழகிய நெய்தலில் ஆணன்னம் தனது பெடையைத் தழுவித் திருமகட்கிடனாகிய தாமரைப் பூவின் மதுவை அந்தத் தாமரை மலரே கிண்ணமாகக் கொண்டு தானின்றுண்பித்தலைப் பார்த்துப் பார்த்து ஓரரசன் மயங்கி நிலை மாறி உயிர் தளர்ந்த மயக்க நிலைக் குறிப்பினை. (கண்களாலே நோக்குவையாயின் காப்பாற்றவல்லை யல்லை என்று கூட்டுக.)

## (49)

### [ஊடல் தணிவித்தல்]

முழங்குகின்ற ஒலியையுடைய அருவியானது எறிய எழுகின்ற துளிகளும், நீர் சொரி கருவியாய துருத்தியின் வாயை அழுத்துவதாற் சிந்தும் குங்குமங்கலந்த நீரும், குறப்பெண்கள் வண்டலாடலிற் கொழிக்கின்ற மூங்கில் முத்தங்களும், நெடிய நிலையினையுடைய கூத்தாடுமிடத்தில் மாலைகளிலறுந்து சிந்துகின்ற முத்தங்களும், காடுகெட வெட்டிய சேகாகிய அகிற் கட்டையின் புகையும், பார்ப்

பனரால் வளர்க்கப்பட்ட சிவந்த வேள்வித் தீயின் புகையும், வேங்கை மலரின் மகரந்தப் பொடிகளை விரும்பிய பெடை வண்டுகளும், விரிந்த பாக்குமரச் சோலையில் தங்கிய மெல்லிய சிறைகளையுடைய ஆண் வண்டுகளும், சந்தனச் சோலையில் தோகை விரித்தாடுகின்ற மயில்களும், உயர்ந்த பனை மரத்தின் மேலே கூட்டில் தங்குகின்ற அன்றிற் பறவைகளும், ஒன்றுடனொன்று சேர்ந்து தம்மில் மயங்குதற்கிடமாகிய முருகக்கடவுளது திருப்பரங்குன்றம் சூழ்ந்த கூடலென்னும் பதியில் நிறைந்துள்ள, மேகத்தையொத்த கூந்தலையுடையகங்கை யென்னும் பெண்ணனைவள் தனக்கிடமாகப் பெற்றுள்ள செஞ்சடைக்கடவுள்.

அரிய தமிழிற் கைவந்த நக்கீரன் பெரிய தமிழாகிய பெருமையுள்ள நூலைப் பொற்றாமரையினின்று பாடக் கேட்டருளிய நீலகண்டனது திருக்கோலத்தைக் கண்ணுற்கண்ட செல்வப் பெருக்கினர் போலத், தாமரையாகிய கோயிலானது இதழ்க்கதவு திறக்க வந்துநன்மை பயக்கும் இல்லறத் தருமமுண்டான அறக்கற்பினையுடைய திருமகளே! வீடு தோறும் இடப்பெறுகிற உணவை நினைத்து, முகங் கொடுக்கும் விருப்பு வெறுப்பென்னும் இருசெய்கைகளையும் மனத்தில் கொள்ளுகிற புன்மையுள்ள பாணன், கீழ்மகளு மில்லாமல் இன்பம் போல்வதாகிய சொற்களுடன் அன்பையுடைய பரத்தையரை நீக்கி முடிததலையையுடைய அரசர்க்குரிய செருக்கையும் தன்னில் நீங்கிப் பொன்மையாகிய ஞாழற் பூவையொத்த வாயாற் பெரிய புலி நகமாகிய அணி, சிறிய கழுத்தில் விளங்காநிற்ப. அமுதஞ் சிந்துகின்ற செங்குமுதம் போலும் வாயைக் குதட்டிப் பழத்தை யுண்ணுகிற கிளி பேசும் சொற்கள் போல்கின்ற மழலைச் சொல்லும், இம்மை மறுமையின்பமும்ஓரிடத்திற் கொடுக்கின்ற பெருங்கதியிற் செலுத்தத்தக்க பிள்ளையைத்

திக்கண்களையும், மடங்கிய பிடரி மயிரினையும், கொலைத் தொழிலையும் உடையசிங்கக்குட்டியைப் பொன் மலை மேற் கண்ட காட்சியை யொப்ப மணிவட மணிந்த மார்பி னிடத்தே அழகு பெறக் கொண்டு விளையாடலால், வண்டு பொருந்துதற் கேதுவாகிய ஆசை தரத்தக்க, அகவிதழ் செறிந்த மலர்மாலை பூண்ட நமது தலைவனிடத்தே யுள்ள, மனக்கோணலை முழுதுமறக் களைந்து ஒற்றுமை கொள் வாயாக.

## (50)

[குலமுறை கூறி மறுத்தல்.]

நீயோ வென்றால்; பெரிய வேதத்தில் நின்றும் தோன் றிய மனுநூல் விதித்தபடியே, செங்கோன் முறையைச் செய்யும் மேம்பாடுள்ள அரசனது அருங்குணமென்று சொல்லும்படி, பிரிவில்லாதவர்களுக்கு அமுதத்தையும், பிரிந்தவர்கட்குத் துன்பமாகிய விடத்தினையும், நேர்ந்தபடி நேர்ந்தபடி புலன் கொள்ளும்படி கொடுக்கும் தமிழுக்கிட மாகிய பொதிய மலையினின்றும் தோன்றிய தென்றற் காற் றானது தடாகங்களிற் படிந்து புறவிதழையுடைய தாமரை களின் புதிய வரும்புகளை மலர்த்தலால், வண்டினம் படிந்து தேனையுண்டு செவ்விய இதழையுடைய குவளை மலர்களில் வரிசையாகத் தங்குதற்கிடமாகிய, நீர்நிலை பொருந்திய மருதநிலமுள்ள நாட்டை யுடையவனுவை.

உன்னால் விரும்பப்பெற்ற இவளோ; மலையருவியை வெறுத்து மழைத்துளிக்கு வாயைத் திறத்தல் செய்யும் சக்கிரவாகப் பறவைக் கூட்டம் சூழ்ந்திருக்கின்ற, மலையை இடமாகவுடைய குறவர்களது தேனடையிலுள்ள தேனை விரும்புகின்ற சிறு குடியிற் பிறந்த பெண்ணுவள்.

நீயோ வென்றால்; மகளிர் கூட்டத்தோடு ஆரவாரிக்கு மருதப் பறையைக் கொட்டி அழியாத நல்லறத்தை வளர்க்கின்ற நாட்டினையுடையாய்.

இவளோ வென்றால்; குறிஞ்சிப்பறை முழங்கத் தன்னால் காத்தல் செய்யப் பெற்ற புன்பயிர்க் கொல்லைகளைச் சுற்றி, யானைக்குலங்களை வருத்துகின்ற சிறிய ஊரினையுடையவள்.

நீயோ வென்றால்; நிலைமைகளான் மேலெழுந்த மாளிகைகளில் இளமுலைப் பெண்கள், ஆடல் செய்ய முத்துவடங்கள் சிந்துதற்கிடமாகிய நகரத்தை யுடையாய்.

இவளோ வென்றால்; மதத்தினை வெளிப்படுத்தும் யானைக் கூட்டங்களைச் சிங்கம் புகுந்து மத்தகத்தைப் பிளத்தலால், தெறித்திடுகின்ற முத்தங்களைச் சேர்க்கின்ற நிலத்தினளாவள்.

நீயோவென்றால்; அணியப்பட்டுள்ள நவமணிகளும், மலர் மாலை என்னும்படி கோத்துள்ள கொடிகளாடுகின்ற அழகிய தேர்மேல் விளங்குவை.

இவளோவென்றால்; அழகிய வாயையுடைய கிளியைத் துணியாது ஓட்டுமாறு நீண்ட பரண்மேல் ஏறுதற்கிடமாகிய இத்தினைப் புனத்தினள். ஆதலின், மிக்க புகழைப் பெறவேண்டினையாயின்; திருமால் பின்னிடவும் தேவர்களெல்லாம் நிலைகெட்டோடவும் வீசுகின்றகாற்றிற் கிடணுகி, ஆகாயத்தில் விளங்குகின்ற உணர்ச்சியைத் தொட்டுக் கரியமேகங்கள் சூழ்ந்து பரந்தாற் போலக், கீழ்மேலாகப் பரவிய கடலிற் பிறந்த விடத்தைத் தடுத்து, அத்தேவர் முதலியோர் உயிருடன் வாழுமாறு கடைக்கணித்து உட்கொண்டருளித், திருக்கழுத்துச் கறுக்கப் பெற்ற பேரருட் கடவுளினது மதுரையை அடைந்தவர் பற்றற்றாற் போல; இழிகுலத்தாளாயவிவளது பசிய

மூங்கிலைப் போலுந் தோளைப் புணரும் ஆசையை நீ நாடா தொழிக.

# (51)

[பிரிவறிவித்தல்]

வருத்துதலில்லாத வடகாற்றை விடுக்கின்ற கைலைமலை யினும், தென்றற் காற்றை வெளிப்படுத்தும் தாமிர பரணி யென்னும் ஆற்றையுடைய பொதிகை மலையினும், கீழ்க் காற்று வந்துலவும் நீலமலையினும், மேல்காற்று வந்து வெப்பஞ் செய்கின்ற கொல்லிமலையினும்;

தன்னிடத்தில் பிறந்தவர்கள் பின்னும் பிறவாத பெருமை பொருந்திய திருவாரூரினும், இறந்தவர்கள் பின்னும் பிறந்திறவாத பழமையான திருக்காசியினும், கண்டவர்கள் பின்னும் பிறந்து காணப் பெறாத அறிவுவடிவாங் காட்சியைச் செய்கின்ற சிதம்பரத்தி னும், மறையினுச்சியினும், விதிக்கப்பட்ட ஆகமங்களினும் கற்றறிந்தவ ருள்ளத்தினும் குறையாது பொருந்தி வெளிப் படத் தோன்றியும்;

பல வெண்ணங்களையுடைய மனத்தினிடத்தும் தெய்வமுண்டென்பதை விட்டுப் பொய்ம்மையை மேற் கொண்ட உள்ளத்தினும், கொலைத் தொழிலினரிடத்தும், இருளாகப் பொருந்தி மறையும் வித்தையிற் கைவந்த நஞ் சத்தை யணிந்த கண்டத்தை யுடையோனது, பெருமை மிக்க மறையிலுள்ள சந்தங்களும், பதங்களும், சருக்கங் களும், அடக்கங்களும் சின்னக் குறளுமாகிய கிளைகள் கார்கால மேகம் போல முழங்குகின்ற அழகிய நகராகிய மதுரைக்கு ஒப்பாகித் தேன் பொருந்திய மலர்கள் மணத்த பின்புறத்தி லுள்ள கரிய கூந்தலையும், வளைகின்ற கொடி போலும் இடையினையும் உடையாய்!

நமதரசனுக்கு; எழுதலுள்ள அலைசூழ்ந்த பரப்பாகிய நாற்றிசைக் கடல்களாற் கோலி எல்லைப்படுத்தி, எல்லா வளமும் நிறைந்த நான்கு வகை நிலத்ததாக மநு நூல் விதியோடு பொருந்துமாறு திருத்திய பூமியாகிய பாரத்தைத்; தோளணியில் குருவிந்த மணிகள் பதிந்திருத்தலானும், வண்டுகளோடு பொருந்தி வாடாது தொடுக்கப்பெற்ற நறுமலர் மாலைகளை மேற்கொண்டிருத்தலானும், மலைகளிவையென நிலைபெறுத்திய சயமகள் வசிக்கின்ற திரண்ட தோளினிடத்தே தாங்கியும், தழுவியும், மன்னுயிர்களைத் தன்னுயிரென நினைத்தும் அரசியல் செய்து வந்ததுமல்லாமல்: அழகிய மனம் பூரித்தும்; பகைக்குட்படா வண்ணம் பாதுகாக்கவும் கருத்துள்ளான் போலும்.

## (52)

[உண்மகிழ்ந் துரைத்தல்.]

அறிவுடையோர் நுனிக்கத்தக்க, அழகு நிறைந்த திருமகளினும் மிக்க அழகினையுடையாய்! உயிரை யோரிடத்தே வைத்து உடலானது தனியே திரிந்தாற் போலப்; பெரிய பொருளைச் சம்பாதிக்கும் பொருட்டு நின்னைவிட்டுப் பிரிந்து போய்;

உயிர்களைக் கொன்றுண்ணுதற்கு அஞ்சாத குணத்தினையுடையார்போலச், செல்லுமிடமாகிய கொடிய பாலை நிலத்திலுண்டான கல்வழியின் வெம்மையானது; தேவருண்ணும் அமுதமும், இனிமையுள்ள தமிழின் மதுரமும் என்னுயிரெல்லாமும் தமக்குள்ளே யடைத்துவைத் திறுமாந்து, சக்கரவாகப் பறவையையும், மலைகளையும் இளநீரையும் கோபித்த நினது பெரிய தனங்களில் மூழ்குதற்கு என் மனத்தே நினைப்பதற்கு முன்னே;

விழுதுகளைச் சுற்றிலு மிறக்கிய பருமையான அடியுள்ள, அழகாகிய கல்லாலமரத்தின் குளிர்ந்த நிழலின்கண் குருமூர்த்தமாக விருந்தருளி, முக்குணச் செய்கைகளும் உடலோடு செல்லுகின்ற நிழலின் தன்மை போலத், தம்மைவிட்டு நீங்காத பிறவிக்கேதுவாகியவினைக்கூட்டம் நிகழ்தற்காதாரமாகிய, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக் கரணம் நான்கும், தம்முடன் அநாதியாயிருந்து, நீங்கற்கரிய உட்பகையாகிய ஆவரணமைந்தும், அறிஞராற் பழிக்கப்பட்ட காமம், குரோதம், லோபம் மதம், மோகம், மாற்சரியம் ஆகிய குற்றங்களாறும், தம்மை நெருங்காமற் றுரத்தித் தன்னை வணங்கப் பெற்ற சநகர், சநந்தனர், சநத்குமாரர் சநத்சுசாதர் என்னும் முனிவர் நால்வர்க்கும், அறம் முதலிய புருடார்த்தங்கள் நான்கையும் அடையுமாறு அருள்செய்த மதுரைநாயகனது அழிவில்லாத தண்ணளிக் கடலில் மூழ்கி, அவனது இரண்டு திருவடிகளையும் உள்ளத்திலிருத்திச், சிவானுபூதியிலிருந்தவர்களுடைய வினையொழிந்தாற்போல நீங்கிப்போன விரைவை ஆராயுமிடத்துப், பொருண்மேற் சென்ற எனக்கே இறும்பூதைத்தரும்.

## (53)

### [புனலாட்டுவித்தமை கூறிப் புலத்தல்]

மறிபட்ட இடத்தே விழிக்கின்ற மான் போலும் பார்வையினையுடையாய்! சுற்றுகின்ற மணம் பொருந்திய பசிய இலைகளையுடைய குவளைமலர்த்திரளைக், கரியவரியினையும் சிவப்பாகிய கண்களையுமுடைய கூட்டமாகிய வரால்கள் கலக்காநிற்பவும்;

தாமரைகளின், எரிபோல மலர்கின்ற பூவின் மிகுதியைத் திசைதோறுஞ் சிந்துமாறு, வெள்ளிய உடலையும் கரிய

கண்ணையுமுடைய சேன்மீன் கூட்டம் பாயா நிற்பவும்;

மரகதமணிபோன்ற இலைகளோடு, ஆம்பற்பூவின் திரள்களைச், சொரிந்தாலொத்த, பற்களையும், பெரிய வாயையுமுடைய வாளை மீன்கள் பாய்ந்து துவைக்கா நிற்பவும் ;

நீரிற் குளித்துச் சேருக்குகின்ற சிவப்பாகிய கண்ணை யுடைய எருமைகளும், மலை சூழ்ந்திருந்தாலொத்த உயர் வாகிய கரையின் பரப்பைத்தான் போர்த்துக் கொண்டு வரும் மலைகளால்உடைக்கின்றகடல்போன்ற நீர்ப்பெருக் கும், நெருங்கி வயல்கள் மாறுபட்டு அவ்வரப்பு மேடுகள் சரிந்துடைபட்டுக் குறுநிலமன்னன் செய்யும் போர் போல முறியுமாறு சென்று, உழவர் கூட்டங்களைச் செய்கரையி னிடத்துக் குடிபோகச் செய்கின்ற பெருமைத் தன்மை யுள்ள நாட்டை யுடைய தலைவர் ;

கொன்றைப் பூங்கொத்தில் செவ்வழி என்னும் பண்ணை இசைத்தும், வெண்மையாகிய எருக்க மலரி னிடத்தே உழையென்னும் பண்ணை மிகப் பாடியும், வில்வ மாலையில் சிறப்புள்ள கிளையென்னும் பண்ணைப் பாடியும், ;வெள்ளிய கூதாள மலரில் விளரியென்னும் பண்ணை ஒழிவறப் பாடியும், வண்டும் தேனும் ஞிமிறும் சுரும்பும் ஆகிய இந் நால்வகை அளிக்குலம், அம்மலர்க ளுமிழ்கின்ற மதுவையுண்டு உறங்குதற்கிடமுகின்ற செஞ் சடையோன்.

தேனுள்ள மலர்களைக் கொய்து, திருவடியின்கண் ணருச்சித்து நிறைத்த பார்ப்பனச் சிறுவனுகிய மார்க் கண் டேயனை வருத்தி, அவனுயிரைக் கவரவந்த இயமனை வெகுண்ட திருவடியுள்ள கடவுளது, மதுரை நகரின் செல் வம் மிக்க அந்நகரினருகணைந்து, பெருகிவந்த நீர் நிறைந்த வையை நதியின் மலை புரண்டாற்போன்ற அலைகள் வீசும்

துறையினிடத்தே, அண்ணுந்துயர்ந்தோங்கிய அரும்பு முகிழ்த்தா லொத்த குவிந்த முலையை யுடையாளாகிய பிறை மதிபோன்ற நெற்றியையும், நிறைமதிபோன்ற பரந்த முகத்தையுமுடைய வொருத்தியை ;

நீராடச் செய்தும், தோளோடணைத்தும், தோழிக ளோடு சேர்த்தும், கொண்டாடியும், தாங்கியும் தூக்கியும் நடத்துவித்தும், இழுத்தும், நீரில் அமிழ்த்தியும் மேலே யெடுத்தும், முலையினிறுமாப்பைப் பார்த்தும், தன்முகமாக அழைக்கும் விளி மொழியைக் காதாற் கேட்டும், அவள் குளிரால் நடுங்கும்போது கட்டியணைத்தும், சந்தனம் முத லிய வாசனைப் பொருள்களைப் பூசியும், மாலையணிந்தும், பூணத்தக்க அணிகலன்களைப் பூட்டியும், சூடத்தக்க மலர் களைச் சூட்டியும், ஊடாவகை நிறுத்தியும், திருப்தி செய் தும், பெருமிதமுற்றும், நெருக்கியும், தொய்யிலெழுதியும், எழுதுங்கால் தப்பியும், பின்னும் திருத்தியும், கச்சைத் தனத்தில் கட்டியும், துகிலையுடுத்தும், கலக்கச் செய்தும், பனிநீர் முதலியவற்றால் மணம் வீசச் செய்தும், மறை வாய்த் தாம் செய்த குற்றங்களெல்லாம் செய்யாதவர் போல ; நெடிய பொற்றகட்டால் விளங்கிய எல்லா வளத் தாலும் நிறைந்த மாளிகையில் நின்றும், மேன்மைக் குணத்தைக் கைவிட்டு ; நெருங்கிவந்தது யாது காரண மென்று நீ கேட்பாயாக.

## (54)

### [தன்னை வியந்துரைத்தல்.]

வற்றுதலில்லாத கருமை நீராகிய ஆழ்கடலை ஆடை யாகவணிந்த, பரப்பாகிய நீர்மையுள்ள வட்ட வடிவாகிய பழமையான இவ்வுலகினிடத்தே, தண்ணிலவானது நஞ்சு

கொப்புளித்து வெளிப்படுத்துகின்ற படமுள்ள பிளவு பட்டவாயிடத்தே, தாழை முட்போல் அரும்பியுள்ள கடிக் கும்பற்களையுடைய பாம்பினத்தை அஞ்சி ஒதுங்கவும் ;

அப்பாம்பினம் அழியாத் தன்மையுள்ள நன்னுதற் பிராட்டியைக் கண்டு மயிலென்று கருதி நெளிந்து மனங் கலங்கவும் ;

சிரிக்கின்ற வெள்ளிய தலையோடானது நெடிய சடைக் காட்டினைத், தன்னைக் கொளுத்திக் கொல்லத்தக்க தீக்கொழுந் தென்றெண்ணி, இனி நமக்கிடமேதென்று அலைந்து தயங்கவும் ;

அணியப்பட்ட தலைமாலைகளைப் பாம்பு பார்த்து, முழு மதிக் குலமென்று நினைத்துப், பக்கங்களிற் பதுங்கித் தம் வாயைத் திறக்கவும் ;

இவ்வாறு ஒன்றின் பொருட்டு மற்றொன்று மிக்க அச்சத்துடனே இருக்க, ஒளி மிகுந்த நெடிய சடையை யுடைய பெருமான்.

இரத, கச, துரக, பதாதி என்னும் நாற் கருவிச் சேனையுடன் போர் நடத்திப், பாண்டியனைத் துரத்தி மதுரையைக் கைக்கொண்ட கருநட நாட்டரசன், சமண ரைச் சார்ந்து, ஆருகத சமயத்திலொழுகிச் சிவனார் திருப் பணியைச் செய்யாமற் றடுத்ததனால் ; அக்கருநட நாட்டரசனை நெடிய துயிலிலே தள்ளிவருத்த, அவ்வரசன் குலத்திலே அரசியற்குரியோரின்மையால் ;

இரத்தக் கறை சந்தனக் கல்லிலே பெருகுமாறு; சிவபிரான் வடிவின்மீது பூசும் சந்தனக் குழம்பாக முழங் கையைத் தேய்த்த பெரிய அன்பு வடிவாகிய, கோவைசிய ராகிய மூர்த்தி நாயனாரை; இவ்வுலகத்தின்கண், சிவபிரா னாகிய தமது அடையாளங்கள் மூன்றும் விளங்குமாறு ;

சடை முடியாகிய அழகிய மகுடமும், உருத்திராக்கமென்னும் ஆபரணங்களும், நிலவை வெளிப்படுத்துகின்ற பால் நிறம் தங்கிய புண்ணியமுடைய திருநீறும், அணியும்படி அருள் செய்து மதுரைக்கரசனுக்கிக், கெட்ட சமயமாகிய ஆருகத சமயத்தை யழித்துப் பல்லாண்டு நின்று காக்குமாறு மன்னுயிர்களைப புறச் சமயங்களில் நின்றும் பாதுகாத்த மணியுமொளியும் போலுமுள்ள கடவுளது; நெடிய மதில் சூழ்ந்த நான்மாடக் கூடலில், நீர் நிறைந்த வையையாற்றில் பெண் யானையை நீராட்டுகின்ற யானைப் பகடுபோல; மயிற் சாயலையும் மதி நுதலையுமுடைய ஒருத்தியை, மார்பினிடத்தும் தோளினிடத்தும் பலமுறை தழுவித் தன்னுடன் நீராடுதலைச் செய்வித்த தலைவன், அன்பால் நுகர்ந்த இன்பத்தினைச்; சுவர்க்க லோகத்தில் போகம் நுகர்ந்தோர் மண்ணுலகத்தின் இன்பத்தை அருவருத்தொதுக்கிய தன்மையைப்போல ஒருங்கே நீக்குவித்து, அத்தலைவனுடன் சேரேனாயின், நான்றானே அத் தலைவனை எமதில்லின்கண் போகவிடுத்துத் தேர்மேற் செல்லுந்தோறும், சோலைகளிற் பாங்கருடன் விளையாடுந் தோறும், இடைவிடாமற் கண்டு பெருமூச்செறிந்து, கண்ணினிடத்தே மிகுந்த நீர் சிந்தி மீண்டுஞ் சேரவெண்ணுகிற, அவ்வொருத்தியாகிய பொதுமகளே யாகக்கடவன்.

## (55)

### [புதல்வன்மேல் வைத்துப் புலவி தீர்தல்.]

அடியவர் உள்ளத்திருளை நீக்குதலால் தீபமும், ஏழு மலையையும் நீறு செய்தலால் தீப்போல் விழுகின்ற இடியேறும், கரிய கடல் நீரைக் குடித்தலால் வடவைத் தீயும்,

மாமர வடிவாகிய சூரனுயிரைக் கொள்ளலால் தீக்கண்ணை யுடைய இயமனும், என்னுள்ளத்தே இருத்தலால் பொருந்திய அறிவாகிய உயிரும், விரும்பியவற்றைக் கொடுத்தலால் பெருமையுள்ள அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்னும் ஐந்தருவும்;

பிறவி வருதற்கேதுவாகிய வழியை அடைத்தலால் நிலைமையுயர்ந்த குருவும் பேருலகத்தைப் பாதுகாத்தலால் சந்திர வமிசத்தரசனும் நிகராகி, மணியுள்ள வேலை ஏந்திச் சேவற் கொடியை உயர்த்திய கடவுள், தெய்வானையும் தேனொழுகுகின்ற மலையிடத்தே வளர்ந்த வள்ளியும், இரு பக்கங்களிலும் தழைத்திருக்கின்ற திரு நிழலின்கண் வீற்றிருத்தற் கிடமாகிய ஒப்பற்ற திருப்பரங்குன்றம் பொருந்திய மதுரையுள்;

பெரிய கங்கையையேற்ற சடைமேல், இளநிலவைத் தரித்தருளிய இறைவனது திருவடியை அடையாதார் போலப், புதல்வனே! பல பொய்களைச் சொல்லியும், உண்மையைக் கைவிட்டு, இன்பத்தை விற்றுத் தின்று வாழ்கின்ற விலைமாதர் சேரியில் இடைவிடா திருக்கின்ற உன் தந்தைபோல், ஊருக்குப் பொதுவாகிய ஊருணியை ஒத்த, யாவர்க்கும் பொதுவாகிய பரத்தையரின் வாய்த் தம்பலத்தை நீயும் மென்றனையாயின், நரம்பு தோன்றி வெளிப்படுகின்ற மிகவினிய முலைப் பாலைக் குறித்து மனத்தாலும் நினையாமல், அமுதம் வெளிப்பட் டொழுகா நின்ற மழலை வாயானது துடிக்கும்படி பெரிய கடைவாயிலில் வருந்தியும்;

மண்ணிற் புதைத்த மணிபோல் மட்புழுதி உடலிற் பொதியவும், பொன்னும் மணியும் விரித்த அரைமணியானது சரிந்தும், நெற்றிச் சுட்டியும் தலைமயிரும் அவிழக் கண்ணீர் சிந்தியும், அடிக்கும் சிறு பறையும் உருட்டப்

படுஞ் சிறு தேரும் பறித்துக் கொள்ளப்பட்டு நொந்தும்; மான்போற் கண்களையுடைய பெதும்பைப் பெண்கள், ஆக்கிய சிறு வீட்டினிடத்தே போய் அழித்திடாமல் மயங்கி நின்று தளர்ச்சியுறுதலை யான் காண்பேன். நீயும் விலைமாதர் தம்பலம் மென்றதனால் அடைவது இந்தப் பலனாகும். இனி நீ இவ்வாறு செய்யாயானால், எனது முலைப் பாலைப் பெறுவது இப்பொழுதே நின்னுடைய பேறும்.

## (56)

### [கலவி கருதிப் புலத்தல்]

நடையையுடைய மலையையொத்த யானையைப் பிடித்துக் கொண்ட, சொரிகின்ற பற்களையுடைய முதலையைச் சக்கரத்தை வலக்கையிலேந்திய திருமால் கொலை புரிந்ததைப்போல; புன்மையாகிய தலையையுடைய எருமையை, நீரினின்று மேலே யெழுமாறு முட்டிய வரியுடலையும், சிவந்த கண்களையு முடைய வரான்மீன் உடனே மயங்கும் படி, உள்ளே பிளப்பாகிய தூண்டிலினுள்ளே விசையுடன் புகுந்து கலக்காநின்ற நிறைந்த நீர் நிலைகளையுடைய ஊரனே!

வளத்தைக் கொடுக்கும் பல முகங்களுடனே விண்ணிற்பரவி, ஏழுலகமும் ஊடுருவி அங்கங்குள்ளவை தடுமாறும்படி பெருகின அப்பெரிய வேகமுடைய ஆகாய நதியானது, ஓரிடத்தில் முழுவதும் அடங்கும்படி, புலப்பகை யைந்தும் தன்னுட் டணியவடக்கிய அருமையான தவத்தையுடைய பகீரதன் என்னும் முனிவன, கேட்டனவாகிய வரங்களால் ஒரு சடையில் வைத்தருளிய மதுரைநாயகனது, மறைச் சிலம்பரற்றும் திருவடிகளைப் போற்றுகின்ற நடுநிலைமை யுடையார்போல; மாறுபாட்டை யடை

யாமல் எம்மையும் பார்த்துச் சிறிது தண்ணருள் புரிந்து மனத்தை வேறுபடுத்துகின்ற, கேட்டாரைப் பிணித்தல் உள்ள பாட்டைப்பாடும் பாணனுடன் உறைதலைவிட்டு; முந்நூலோடசைகின்ற தோல்திரைந்த மார்பினிடத்தே கருமை நீங்கி நெருங்கிய நரைமிகுந்து தாடியை வளர்த்த சுக்கிரன்போல, அரும்பிய ஒற்றைக்கண் பார்ப்பானாகிய ஊன்றுகோலுடனே உண்டாகின்ற சிறுநகையை விட்டு;

பூவிற்குந் தொழிலையுடையவனது பாதுகாத்தலை நீங்கி, எட்டுத்திசையினும் விண்ணுலகத்தினும் பெருகும் படி, நிறைமதியும், கைலைமலையும், கலைமகளும் பாற்கடலும், நாற்கொம்புள்ள ஐராவதமும், புண்ணியமும் இவை முதலானவற்றிற்கு உடல் வெளுத்தலைச் செய்யாநின்ற புகழைக் கவியிற் கட்டிப் பாடுகின்றவரது சேர்க்கையின்பத்தை விட்டு, எல்லாக் கல்விகளையும் பழிக்கின்றகலவித் தொழிலில் வல்ல பரத்தையரது மிகுந்த மகிழ்ச்சிக்குக் காரணமாகிய சேர்க்கையையுந் தொலைத்து, இவ்விடத்தில் மாலையிருளுகின்ற காலமென்னும் பெரிய பெண்ணெதிரீர்ப்ப ஒரோவழியாய் வந்தது யாது காரணம்?

## (57)

### [வழிபாடு கூறல்]

விண்ணினுள்ளார்க்குத் தலைவனும், அவனது இறவாமைக்குக் காரணமாகிய அமிழ்தமும், குபேரனும் அவனது பொருட்குவியலும், திருமாலும் அவனது காத்தற்றொழிலும், வசிட்டமுனிவனும் அவனது காமதேனுவும் யாதொன்றினானுந் தவறாமல் ஒன்றுபட்டுப் பொருந்தியதைப் போல; நீடிநின்று பயனைத் தருகின்ற கற்பைத்

தம்மிடத்தேயுடைய நிலையினரது தவத்தை நோற்றுத், தலைவியைப் பெற்ற மிகுந்த கற்பினையுடைய அன்னையே!

முன்னொரு காலத்தில், மூன்று தொழில்களுள் முதலனவாகிய இரண்டு தொழில்களையுடையவ ரிருவரும், பன்றியும் அன்னப்பறவையும் என்று சொல்லும்படியான வடிவமெடுத்து, மாறுபடாத உள்ளத்தினலே காணத்தக்க திருவடியையும், நூற்கல்வியினுலும் அறிவினுலும் காணத் தக்க திருமுடியையும்; தம்மாற்கூடிய அளவினலே சென் றும் காணுத அளவினை யுடையவராகிப், பூமியினும் ஆகா யத்தினும் பிளந்தும் பறந்தும் காணத்தக்கவ ராகாத வலி மையினலே நெடுங்காலம் வருத்தமுற்றுக், கண்ணினுலுங் காணுது, உள்ளத்தினுலும் அறியாது, நின்ற நிலைகளைக் கண்ட நீண்ட பயன் படைத்த திருவைந்தெழுத்தையும் குறையா துச்சரிக்கப், பெரிய பூமியைக் கடந்து சென்ற ஒப்பற்ற அக்கினித் தூணில் நின்றும், எரிகின்ற மழுவும் மானும் உடுக்கையும் வைத்த நான்கு கைகளும் நெற்றிக் கண்ணும், தீப்புகைகின்ற கரிய கழுத்தும்; உலகங்களை யெல்லாம் பெற்று வளர்த்த ஒப்பற்ற தன்னுடன் பிரிவில் லாத அருட்சத்தியும், சுற்றிக்கட்டிய சடைமுடியும், தேனுடன் மலர்ந்த கொன்றை மலர் மாலையும், ஆயிரம் முகங்களா யொழுகுகின்ற அருள்மிகுந்த கங்கைநதியும், இளம் பிறையும், நண்புள்ள பாம்பும், விளங்குகின்ற எருக் கலர் மாலையும் பொருந்திய திருவடிவத்தை நீங்காமல் வெளிப்படக் காட்டிப் பேரருள் புரிந்தவனும், கூடன்மா நகரை இடமாக வுடையவனுமாகிய கடவுளது இரண்டு திருவடிகளையும், உள்ளத்தேயுடைய போக்குடையவராகிய பகுப்பற்ற அன்புடைய தலைவரும், பசும்பாலும் தேவாமிர் தமும் செந்தேனும் போல வெளிப்படுகின்ற இனிமை பயக்குஞ் சொல்லையுடைய தலைவியும்; நெருங்கிய இதழ்களை

விரித்து, வண்டுகள், விருந்தினர்போல உள்ளத் தேனை யருந்துகின்ற மலரும், அம்மலருடன் நீங்காதிருக்கின்ற மணமும், செந்தமிழ்ச் செய்யுளும் நிறைந்த அதன் பொருளும், பாலும் அதன் சுவையும், பழமும் அதன் சாறும், உடலும் அதனுள் உயிரும், பொருந்தியதைப்போலக், கண்டும் தெளிந்தும், இருவ ரிடத்தும் வேறின்றிக் கலந்த உள்ளுணர்ச்சியால், நண்பினு லும் மனக்குறிப்பினுலும் உண்மையினுலும் தமக்குரிய பலவகைச் சிறப்பினுலும் தத்தம் நிழலைப்போலப் பிரித்த திலர்.

## (58)

[ஆதரங் கூறல்.]

நெடிய மூங்கில் செறிந்த மலைச்சார்பான சோலையில், தினைப்புனம் காக்கும் பொருட்டு வெட்டப்படுகின்ற, வயிரம் பற்றிய அகில் மரங்களைக் கொளுத்துகின்ற மிகுந்த புகையானது, வானத்தில் மூடிக்கொண்டு கற்பக நிழலை யிடமாக வுடைய தேவர்களின் உடல் நடுங்கும்படி; பரவி அலை வீசுகின்ற ஆகாய கங்கை தருகின்ற குளிரை நீக்கும் அழகிய மலையை யுடையாய்! நின்னுள்ளத்தே சம்மதிப்பா யானல்;

இளமைப் பருவம் மிகுந்த மணிபோலு நிறத்தினளா கிய இத்தலைவிக்கு அழலுதல் மிகுந்த திரண்ட பரற்கற் களையுடைய பாறைகள்; வயற்சங்குகள் வெளிப்படுத்திய கூட்டமாகிய முத்தினமேயாகும்.

அக் கல்வழியிற் கிளைத்து மேலெழுந்து படரா நின்ற புகைநிழலானது, தளிர் நிறைந்த காஞ்சியும் மருதுமாகிய மரங்களின் நல்ல நிழலையே யொக்கும்.

தீப்போற்புகையாநின்ற வாயினையுடைய புலிப்பற்கள் அணிந்துள்ள கழுத்தையுடைய பாலை நிலப் பெண்கள், கழுநீராகிய களைகளைப் பறிக்கின்ற கடைசியரே யாவர்.

அப் பாலை நிலத்தின் அயலிடத்தில் முழக்குகின்ற, மறவர்களது மரத்தாற் செய்த துடிப்பறையானது, நெடிய நகரத்தில் முழக்காநின்ற இனிமை பயக்கும் மருதநிலப் பறையே யாகும்.

மயக்கம் மேலிட்ட கீழ்மக்களது ஐம்புலன்போலச் சுழற்சியைத் தருகின்ற சூறைக்காற்றானது, மலர்த்தேனோடு பொருந்தி வீசுகின்ற தென்றற் காற்றேயாகும்.

எழுகின்ற சிறைகள் தீந்திடுகின்ற கழுகுகளும் பருந்துகளும், குவளைக் காட்டிலுள்ள நாரைகளுங் கொக்குகளுமே யாகும்.

வெம்மையால் வலிமை குன்றிய யானைகளும், நீரைச் சொரியும் வாயுள்ள செந்நாய்களும்; பால் தழைத்த மடியையுடைய எருமைகளும் பொருக் குடலையுடைய முதலைகளுமே யாகும்.

காய்ந்துலர்ந்த கள்ளிமரமும், நெற்றையுடைய வாகை மரமும், சுருள்விரிந்த நெற்பயிரும் குலையையுடைய வாழை மரமுமேயாகும்.

இடைக்காடன் பொருட்டுப் போய் எழுந்தருளிய வடமதுரையும், திருநடுவூரும், வெள்ளியம்பலமும், திருநள்ளாறும், இந்திரையும், பஞ்சவனீச்சரமும், அஞ்செழுத்தமைத்த பெருமையுள்ள சோழபுரமும், சேரன் திருத்தளியும், அழிவில்லாத திருச்செங்கோட்டமும், திருமாலது அழகிய சோலையும்;

தேவலோகத்தாரை யழித்துண்ட கண்ணோட்டமில்லாதவனாகிய சூரபத்மன்; மறித்தெறியும் அலையை உடைய

கடலில் தலைகீழாக முளைத்த மாமரமென்ன நிற்க, அவனது களவான உடலைக் கூருக்கிய ஒளிதிகழும் கூரிய வேலேந்தியவனும், பாம்புக்குப் பகையாகிய மயிலை நடத்துபவனுமாகிய முருகக் கடவுள், தனதருள் வடிவமாகிய வள்ளியம்மையாருடனும் தெய்வயானையம்மையாருடனும் முன்னரும் பின்னரும் பழமை கொள்ளும்படி நிறைந்துள்ள அருவிச்சாரலையுடைய ஒப்பற்ற திருப்பரங்குன்றமும், புடைசூழ விருந்த மதுரை நாயகனது இடையற நிறைந்த இரண்டு திருவடிகளையும் புகழ்ந்துரையாதார் போகும் வழி என்று சொல்லப்படுகின்ற பாலை நிலமும் மருத நிலமே யாகும்.

## (59)

[முகங்கண்டு மகிழ்தல்.]

"தேரான் தெளிவுந் தெளிந்தான்கண் ஐயுறவும், தீரா இடும்பை தரும்" என்னுந் திருக்குறளை யாராய்ந்தறிந்தும், அறிவு குறைந்த மனனே! முழுமதி எவ்வாற்ருனும் ஒப்பாகாது. முழுமதி எவ்வாற்ருனும் ஒப்பாகாது.

உப்புக் கடலிற் பிறந்தும், குறைகின்ற வுடலானது கூனியும், கருமையாகிய பிளவுள்ள நெருப்புமிழ்கின்ற நாவையும், பெரிய புள்ளி பரந்த பிளவுபட்ட வாயையும், எரிகின்ற விழியையும் உடைய இராகுவென்னும் பாம்பினுல் இரையாக வுண்ணப்பட்டும், எச்சிலாக உமிழப்பட்டும், தன்னுடலினுள் மறுப்பட்டும், பிரிந்தவரைக் கோபித்தும், புணர்ந்தவரைக் களிப்பித்தும், குமுதமலரை மலரச்செய்தும், தாமரை மலரைக் கூம்பச்செய்தும், கடலாற் சூழப்பட்ட வுலகத்தே மாத மத்தியில் மறைத்தும்;

பெரிய மறைகள் வெளிப்படையாய் முரசறைகின்ற வீதிகளெல்லாம்; முத்தழலாலாகிய வேள்விக்குத் தலைவன், ஞாயிறு திங்கள் தீயாகிய மூன்று கண்களையுடையமேலோ னென்று கண்டிப்புடன் சொல்லிய முறைமை கிடக்க;

ஒருகாலத்தில், தேவர்களுடன் காசிமாநகர்க் கங்கா நதிக்கரையிலே, தனது மயக்க வுணர்வானே வேள்வி செய்யத் தொடங்கிய தீமைக் குணமுடைய தக்கனின் போர்க்களத்தில்; கணுக்குள் தோறும் சிதறிய கரும்பின் முத்தங்களும், சங்கங்க ளீன்ற முத்தங்களும், சுரிந்த முக முள்ள இடம்புரிச் சங்கங்களும், வலம்புரிச் சங்கின் கூட்ட மும், சலஞ்சலச் சங்கத்திரளும், இப்பி யெனும் சங்கக் கூட்டமும்;

வளங் தங்கிய விடத்தே பெருகிக், கூட்டமாகிய உழ வர்களோட்டும் கலப்பைக் கொழுவை இடறப்பண்ணும் மருத நிலஞ் சூழ்ந்த மதுரைநாயகனது, நூபுர மொலிக் கின்ற திருவடியாகிய படையால், பதினாறு கலைகளும் புழுதிபட்டுச் சிந்துமாறு நிலத்தோடு தேய்க்கப்பட்டுச் சுழன்றலறியும், அழிந்திருந்து எழாநின்ற, பழியுள்ள கொடிய திங்களொவ்வாது.

செந்தாமரைப் பூவை வெளுக்கச்செய்தும், வாடாது எப்போதும் மலர்ந்தும், அமுதம் ஒளியாமற் பொருந்தியும், தன் கருத்தை யறிவித்தும், வெம்மையான கதிருடலில் மறையாதிருந்தும், விண்மீன்களோடு கூடிச் சேராமலிருந் தும், காலையில் மறைந்து மாலையில் தோன்றுமலுமுள்ள இவள் முகமாகிய மதிக்கு, முழுமதி எவ்வாற்றானும் ஒப்பா காது.

## (60)

[கற்புப் பயப் புரைத்தல்.]

ஏழு கடலாற் சூழப்பெற்ற பெரும்புறக் கடல் நடுவில் ஆயிரம் யோசனை யளவுள்ள சிற்ப விதிபமைந்த அகலமும், இரண்டாயிரம் யோசனை யளவுள்ள கீழ்நிலையும் மேல்நிலையும் பொருந்திய குற்றமற்ற தோற்றத்தினையுடைய பளிங்கு மலை போலும் உயர்ச்சிகொண்ட மகேந்திர மென்னும் பழைய ஊரிடத்தே மாயம்பொருத்திய வாழ்க்கையுள்ள கொடிய மனத்தையுடையோன், அகன்றுள்ள ஏழு மலையும், கிரௌஞ்சமென்னும் பறவை வடிவான மலையும், மாமரமென்னத் தலைகீழாக் கவிழ்ந்திருந்த அலைகளை மறித்தெறியா நின்ற கடலொன்றும், வேகமாகிய நெருப்புப் பொறிகளாம்படி, நோக்கிய எட்டுக் கண்களையுடைய கூரிய இலைத் தொழில் வாய்ந்த நெடிய வேலை யேந்திய கோழிக் கொடியை உடையவன். அவன் தண்ணளியோ டெழுந்தருளியுள்ள புண்ணியமுடைய திருப்பரங்குன்றமும், பக்கத்தி லழகு பெற்றிருக்கின்ற மதுரையில், பிறையைத் தரித்த சடைமுடியையுடையவன். அவனது பேரருள் பெற்ற அடியவர்கட்கு ஒருகாலத்திலும் தவறிப்போகாத பொருளைப்போலத் தன்னைவிட்டுநீங்காதகற்பென்றுசொல்லப்படுகிற மாட்சிமையுடன் வளர்ந்தவளும்; நெடுமையாகிய கயலைத்தோற்கச் செய்த விழியையுடையவளும், சிறிய வளையல்களை யணிந்தவளும், திருவை யொத்தவளும், ஆகிய தலைவியானவள், ஒரு காலத்திலேனும் தனதுள்ளத்தில் நாயகனைப் பார்க்கிலும் பிற தெய்வமுண்டென்று ஆராயவு மெண்ணாள்.

பலவுயிர்களுந் தழைக்குமாறு ஒரு குடையால் தண்ணளி செய்கின்ற இரண்டு தேசத்தரசர்கட்குள், வேற்றுப்

புலத்தின் பொருட்டு விளைந்த நெடுநாட் பகைமையை, நீரானது பிளவுபட வந்த வடுவைப் போல நீக்கி யொன்று படுத்தும்படி அரசன் சென்றாலும், பதினான்கு முழ அளவையின் உயர்ந்துள்ள தூண்களை நிறுத்திச் செய்த, தனது பழமையான கூடமாகிய ஒரே இடத் தன்றித் தலைவனது மதயானையானது, உடுக்கள் நிறைந்த வானள வும் நெடிய சிகரமானது உயரும்படி இயற்றப்பட்ட வேறோர் கூடத்தில் சேர்த்தினால் நெய்யோடு கலந்த கவளத்தை உண்ணப் பெறாது.

## (61)

### [வாழ்க்கை நலங்கூறல்.]

பெண்ணென்று பெயருள்ள நல்ல மகளிர் கூட்டத் துள்; உணவை, நிலத்தை மெழுகி அதிலுண்டு நோற்ற அம் மாதவமானது, கண்கூடாகக் காணுமாறு ஓர் வடி வெடுத்துவந்த காட்சிபோலக், கருப்பங்கொண்டு பெற் றெடுத்த நங்குடிக்குத் தலைவியாகிய அன்னையே!

அம்மகனது பெறுதற்கரிய கற்பு நினது கற்பினும் மேற்பட்டது. அந்நல்லானது பொறுமை கடலின்மூழ்கித் திருமாலிடத்தே பெறத்தக்க அருளைப்பெற்ற நிலமகள் பொறுமையினும் மேற்பட்டது. அவளது வாய்மை நிலை யானது இருவினை காரணமாக எல்லாவுயிரிடத்து மமைந்த ஊழ்முறைமையினும் மேற்பட்டது.

அவளது மனைச்செல்வமானது கற்பக தருவைப் போலும் இறும்பூது மிகுந்த நினது மனைச்செல்வத்தினும் மேற்பட்டது. அவள் தலைவனது வெற்றியாலாகிய அர சியல், தவறுபடாத வாய்மையுள்ள உன் தலைவ னரசிய லினும் மேற்பட்டது.

அவளை அன்பாகப் பார்த்துள்ள மதிப்புள்ள உறவினர், பிடரிமயிரினை யுடைய ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட தேரோடு தோன்றுகின்ற கதிரோனைப் பார்த்திருந்த, சிறிய இலை நெருங்கிய நெரிஞ்சிச் செடியின் அழகிய பூப் போல, நின் முக நோக்கிய கிளையினர் தம்மையும் அதி கரித்தனர்.

அத்தலைவிக்கு அன்புள்ள பாங்கியானவள், உன்னுடலின் நிழலைப்போல, உனதருள் வயத்தே நிலைபெற்ற என்னினும் உயர்ந்தனள்.

மலர்களுடன் நிறைந்து, ஆகாய வீதியை ஊடுருவிச் செல்லுகின்ற சோலைகளால் நிறைந்த மதுரையினிடத்துப், புலனெடுகூடி மயங்குகின்ற உண்மைப் பொருளறிதலில்லாத உள்ளத்துக் கெட்டாத இளமதியைத் தரித்த வேணியை உள்ள கடவுள்.

கொலைத் தொழில்கண்ட முப்புரத்தையும் பகையற வென்று; மிகுந்த நிலவை வீசிய தந்தங்களுள்ள புள்ளி, யுள்ள முகத்தினிடத்துத் துளையாகிய துதிக்கையையும் மதமழையையு முடைய யானையானது அழியும்படி வென்று; களவாகிய போர்த்தொழில் புரிந்த காமனதுடலானது, அழகிய நெற்றிக் கண்ணினால் நெருப்பிற் பொடியாம்படி வென்று;

ஒன்றுக்கொன் றெவ்வாமல் தருக்கஞ் செய்கின்ற புத்தியானது, பல நூல்பொருளை யாராய்தலின் ஊக்க மிக்க சமயவாதிகளது திறங்களுக் கப்பாற்பட்டதாய், நிலை பெற்ற அருள்நிலையைக் கடவாத உள்ளமுள்ளார்போலப் பகைவராற் செலுத்தப்படுகின்ற திறையின்பொருட்டு அரசன் சென்றாலும், அத்தலைவனது குதிரை பூண்ட தேரானது தன்னிடம் விட்டுத் தங்குதலில்லை.

## (62)

[பள்ளியிடத்தூடல்.]

நீரில் வாழும் தெய்வப் பெண்கள் நெருங்கப்புகுந்து, கண்களும் முகமுங் காட்டுகின்ற காட்சியைப் போலப், பெரிய கரை செறிந்த நிறைவுள்ள நீர்த் தடாகத்தின் மணி நிறமாகிய படாம்போத்தலைதுகில், இடையற மலர்ந்து வண்டுகள் சூழவிருந்த தேன் சொரியும் அகவிதழ்த் தாமரைப் பூவைக் கண்ணாலும் நோக்காமல், உண்ணவும் விருப்பம் பெறுமல் குளிர்ச்சியைத் தன்னிடத்தேகொண்ட நீரிலும் படுத்திராமல் விண்ணுலகத்தை யழித்துக் கவர்ந்த தீத் தொழிலையுடைய சூரபன்மனாலே, சிறையிடப்பட்ட தேவ மங்கையர்களது தடுமாற்றம் போல;

பொருக்காகிய கருங் கொம்புகளால் சேருகும்படி நீரைக் கலக்கி; வெள்ளிய கார் நெற்பயிர்களுள்ள கழனிகளிடத்தே பறவைகள் சிறையடித் தெழுமாறு பாய்ந்து, கொன்றையினது சிறிய காய் போன்ற வாலையுடைய காரெலியின் தம்மிலொத்த பற்களைப்போல நடுவே நடுவே முட்கள் பொருந்திய சிறிய புதராகிய நீர்முள்ளிச் செடியைக் கரும்பை யுண்ணுதல் போலத் தின்று; செங்கணெருமை மேய்கின்ற மருத நாட்டுத் தலைவர்க்கு; எழுதற்கரிய மறை விதியும் உலக வழக்கமும், கருத்திலுள்ள பொருளும் முறைப்படத் திருவுளங்கொண்டு; வடமொழிப் புணர்ச்சியும் வருவன வற்றைச் சேர்த்து, ஐவகைத்திணை முறைமையும் வழுவாது அன்பினைந்திணையென முதலெடுத்த அமுதத்தை, அகத்திய முனிவன் தெளியவும், தலைமை பெற்ற புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும் ஐயந்திரிபின்றிப் பருகவும், ஐம்புல நெறியின்

கண் இயக்கத்தில் கலவாநின்ற உலகவியலினர்க்கும், இளமை தொட்டுத் தவத்தை வளர்க்கா நின்ற ஐந்தவித்த முனிவரர்க்கும் தாந்தாம் நிலை பெற்றுணர அறிவுறுத் தவும், தமிழென்னும் பெயரை நிலைபெறுத்தவும், திருவாக் கெடுத்து விரித்தருளிய தேவ நாயகனது தவத்தான் மெய்ம்மையுள்ள கூடலில்; பொருளைச் சம்பாதிக்கின்ற பரத்தையர்கள், முகத்தினாலும், கண்களாலும், தாமரை யரும்பை யொத்த முலைகளாலும், சொற்களாலும் வயப் படுத்தும் அபிநயம் போல; எம்போலியரிடத்து இல்லை. இவ்விடத்திற்கு உமதுள்ளம் இடமறியாது வந்தவாறு யாதோ அறியேன்.

## (63)

[வழிப்படுத் துரைத்தல்.]

செங்கோலாகிய திருமகளுடனே மநு நூலாராய்ந்து, அரசியல் தருமத்தை விருத்தி செய்த வேற்றுப்புலத் தரசனது பெருஞ் சேனையால் எதிர்க்கப்பட்ட கொடுங் கோலரசனது, அளவிறந்த சேனையனைத்தும் ஒருங்கு மாய்ந்திட்ட நன்மையுள்ள நாளில், அக்கொடுங்கோல் மன்னனது பழிபடு நாட்டி லுள்ள அவனது கொடுமையால் நடுங்கின நல்ல குடிகள்; பிறர் கண்களோடு தமது கண் களால் பேசிக்கொண்டதைப்போல, ஒருவரோடொருவர் சொல்லித் தத்த முள்ளத்திடத்தே வெளிவிடா தடக்கி, வெளிப்படாத சிரிப்புடன் மூக்கின் மேல் விரலிட்டுக் குறித்து, இவ்வூரார் புறங்கூறுகிற அலர் தூற்றலையடக்கிக் கடலிருந்தா லொத்த பெருங் கூட்டமாகிய மகளிர்கூட் டத்தையும், பிற சுற்றத்தாரது கள்ளத்தையு மொழித்து; நந் தாய்மார் நின்னைக் குறித்து மயங்கும் பெருந்

துன்பத்தை ஆறச்செய்து, கிளி முதலிய பறவைக்குஞ்சுகளை நம்மைப்போ லன்புள்ளவர்களிடத்தில் கொடுத்து வளர்க்கச் செய்து, விரைவில் உங்களிடத்தே யானே வந்து சேருவேனாகை.

தளிர்த் தெழுந்த தாளி மலரும், கொன்றை மலரும் தழைத்திருத்தலால் முல்லை நிலமும், பாம்பும் புலியும் கூடியிருத்தலினால் குறிஞ்சி நிலமும்; தீ நாற்றம் வீசுமிடமாய் நெருப்பும் சாம்பரும் உண்டாயிருத்தலால் பாலை நிலமும், ஆமையும் நீரும் பொருந்தியிருத்தலால் மருத நிலமும்; விடமும் சங்கங்களும் விளங்குதலால் நெய்தல் நிலமும் ஆகத் தன்னுடைய பேரருளாகிய திருமேனியில் ஐந்திணை களையுமேற்ற ஒப்பில்லாதவனாகிய முதல்வனது நடத்துந் தொழில் யாவும் வளர்கற் கிடமாகிய பெரிய மத்தியானத்திலே நெருப்பு விரிந்தாற்போல, இதழை யுள்ள பல தாமரை மலர்கள், முகத்திலருள் நிறைந்த திருமகளுடனே தமது முகமலர்ச்சி கூம்பவும், மரகதமணி போன்ற பச்சிலையின் நடுவே நடுவே, நீல மணியும் மாணிக்க மணியும் அழகு பெற விருந்தாற் போல வண்டுடனே செவ்வல்லி மலர்கள் மலரிதழ் விரிக்கவும்;

குருகுகளுஞ் சேவல்களும் தத்தம் குஞ்சுகளுடனே பொழுது போயிற்றென்று பறந்து, பச்சிலைகளாகிய கூடுகளினிடத்தே கண்ணுறங்கவும்;

சகோரப் பறவைகள் தத்தம் பேடுகளுடனே களிப்புடன் பறந்து, வெளிப்படுகின்ற கிரணாமிர்தத்தை உண்ணும்படி ஆகாயத்திற் பறந்திடவும்;

முகஞ் சுரிந்த சங்க நிரையாகிய முத்த வரிசைகளில் நின்றும், சந்திரிகை நிறைந்த நிலாத் தவழும் அலையை எறிகின்ற நிரையையுடைய வயல் சூழ்ந்த மதுரையினிடத்துத் திருவொடுஞ் செழித்து இந்நாளில் சேர்ந்துறைவாயாக.

## (64)

### [கடலிடைவைத்துத் துயரறி வித்தல்.]

நன்மையாகப் பொருந்திய பவழமாகிய வாயும், ஒளி மிகுந்த பசிய உடம்பும், நீண்ட கயலாகிய கண்ணும், பெரிய மலைகளாகிய. முலைகளும் குற்றமறப் பொருந்தி;

மணிகளுடனே நல்ல நிறத்தையுடைய பெரியமுகி லின் நீரமுதூட்டி, வளப்பத்தை உலகத்துக்குக் கொடுக் கின்ற கடலாகிய பெண்ணே!

பெரிய பூமியைப் பொறுத்த வலிமையுள்ள அசைவில் லாத அழகிய முடியையுடைய மந்தரகிரியென்னும் கண வனைக் கூடித்;

திருமகளாகிய பெண்ணையும் அமுதமாகிய பிள்ளை யையும், சந்திரனாகிய குழவியையும் பரந்த உலகறியும்படி, கண்ணில் முத்தங்களுழ உடல் நொந்து, வாய்விட் டலறி; வயிறு நொந்து பெற்றதனால் மனத்திலுண்டாகிய வருத் தத்தை உடையவளா யிருக்கின்றனை யாதலால், மிகுந்த மயக்கத்தைப் பொருந்தாத நிறையை யுடையவளாக விருக்குமாறு, எனது மயில் போன்ற ஒப்பற்ற பெண்ணை யும் நின் மகளாக நினைத்துப், பிறந்திறவாமைக்குக் கார ணமான குற்றமற்ற பெருந்தவமே தனது செல்வமாகச் சேர்த்துள்ள அகத்திய முனிவருக்கு;

அன்புடனே முத்தங்களையும், சந்தனத்தையும், ஒளி பொருந்திய மாணிக்கங்களையும், சிங்கத்தினற் பிளக்கப் பட்ட யானையினது கோணிய கொம்புகளையும், அகிலையும், பொன்னையும், அருவி நீராற்கைக்கொண்டு இழிந்து பொரு நையாகிய அழகிய பெண்ணுக்கு; அழகிய அணி கலன்களைத் தரிக்கின்ற தாமிரவுடலால் மூடப் பெற்ற பொதியமும்;

தெவிட்டாமல் அடங்காத அறி வென்கின்ற பசி தோன்றி நிலைத்து மனமு முருகிச், செவியாலுண்ணத்தக்க பெருமையாகிய **தமிழென்னும் அமுதத்தையும்** பிரிவற்றிருக்கு மாறு தந்தருளிய இதழ் நெருங்கிய சங்கத் தோட்டினையும் கொன்றை மலரையு மணிந்த மதுரை நாயகனது எவ் வகைப்பட்ட வுயிரிடத்துங் கலந்திருந்தும், அவ்வுயிர்கள் அத்தொன்மையை அறியும்படி வெளிப்படா தடங்கிய அணுதித் தன்மைபோல ஆரவாரித்து மேலெழுகின்ற பெருங்குர லடங்கி நின்று தணிந்து, உனது மிகுந்த கொடுங்குணமும் நீங்கி என்னுளம் குளிரத்தக்க இப்பே ருதவியை, இப்பொழுது எனக்கு உதவுவா யெனின் நின் பாதம் பணிவேனுக.

## (65)

[பிரிவுணர்த்தல்.]

எழுகின்ற கதிரின் கிரணங்களை விரிக்கும் மாணிக்கம் பொருந்திய திருந்திய அணிகலன்களை யுடையாய்!

நிலைமையுள்ள பெருஞ் செல்வமானது கிடைத்த காலத்து அதனைக் காலால் தள்ளிக் கனன்று கோபித்தும்;

ஒழியாது நிரம்பிய வளப்பத்தைத் தருகின்ற நாடும்; அதனை யாளுதற்குரிய நன் பொருளும் நேரிடின் அவை களைக் கோபித்தெடுத் தெறிந்தும்;

பதுமை நிதியும், வெள்ளிய சங்க நிதியும் வீடு தேடி வரின், பெரிய கதவை மூடித் தடுத்தும்;

திருமாலும் நான்முகனும் தேவர்களும் மந்தரமென் னும் மலையை நட்டு, வாசுகியென்னும் வடத்தைப்பூட்டிப், பெரிய கடலினது வயிறுனது பள்ளம் படுமாறு கடைந்த தனுல் உண்டான அமுதமானது உள்ளங்கையில் கிடைக்

குங்கால் அதனைத் தரையிற் கவிழ்த்தும்; விடுதல் செய்கின்றவர் மெய்ம்மையுள்ள விண்ணுலகம் மண்ணுலகம் ஆகிய இரண்டுலகத்தினும் உளராயிருப்பராயின்;

உள்ளும் புறம்புமாக யாண்டும் நிறைந்துள்ள சிவமெனும் பொருளை மனத்தின்கண்ணே நிலைபெற வைத்து; முன்னுள்ள சமணர்க்குரிய வேடத்தைக் கைவிடாத முறைமையையுடைய சாக்கிய நாயனார்; அருளாகிய கரையைக் காணப்பெற்று, அன்பாகிய பெருங் கடலானது பல நாளாகப் பெருக்கெடுத்து; ஒருநாளுடைபட்டுக் கரையானது நிலைபெறாமல் செயலற்றுச் செல்லுதலும்; எடுத்துச் சேர்த்துவைத்த கல்லாகிய மலர்களை, அடுக்காகச் சாத்தப்பெற்ற ஒப்பில்லாத பேரொளியாகிய மதுரையிலுள்ள மாணிக்கம்; மேன்மையாகிய மலைமகனென்று சொல்லப்பட்ட தனது தண்ணளியானது பிரியாதிருக்கின்ற மறையால் விதிக்கப்பட்ட பெருமை தவறாத ஒரு பாகமுடைய தன்மையும், பறவைகள் செல்லாமல் நெடிய ஆகாய முகட்டைக் கடந்தப்பாற் சென்ற திருமுடியில் இறங்கித் தங்கிய கங்கா தீரமும், அநேக ஊழிக் காலங்களை நினைப்புடனே கடந்தாலும், அருமையாகிய கரை காணக்கூடாத ஆகம சமுத்திரமும்;

இளவரசராகிய படைப்பு அளிப்பு என்னுந் தொழிலுடைய இருவரும், அன்னமாகவும் பன்றியாகவும் வடிவமெடுத்து விரைந்து விண்ணிற் பறந்தும் மண்ணைப் பிளந்தும்; அளவு இதுவாமென்று அறியப்படாமல் மேலுங் கீழும் ஊடுருவித் திருவடியும் திருமுடியும் உடையவனது பொன்னடியை அருச்சித்து அருட்பேறு திரிந்து சேராதாருள்ளம் போல, நின்னைப் பிரிதலுக்கு நினையா நின்ற எண்ண முடையேனுவேனாக.

## (66)

[ஊடல் நீட வாடி யுரைத்தல்.]

வரிசையான சங்கினமும், முத்தக்குவையும், அன்னக் கூட்டங்களும், அழகிய கொக்குக் கூட்டங்களும்;

கரிய கிளைகளையுடைய புன்னையினது அரும்பு உதிர்கின்ற இடமும், முடக்காகிய வெண் தாழையானது உதிர்ந்த முள் பொருந்திய மலர்களும்;

நண்டினது பிளவாகிய கால் போன்ற வெள்ளைப் பல கறையும் மணல் மேட்டில் விரித்து, வலையை வலிதாக இழுத்துக் கட்டின நெய்தல் நில மாக்களுக்கு: இன்ன தென்றறியப்படாமல் தலைமயங்கி வெளியிட மாகிய அழகையுடைய கழிக் கரையின்கண்ணுள்ள சேரியின் ஒரு பக்கத்தில்;

புள்ளுகளோடு ஊடும் பறவைகள் கவர்ந்து செல்லாது, வெள்ளிய இருல் மீன் உணங்கலுக்குக் காவலாயுள்ளார்போல ; உலகத்திலுள்ள உயிர்களைக் கவராநின்ற கொடுந் தன்மையையுடைய யமனே! பெண்ணென்று வேடம் பூண்டு நிற்கிற நிலையை முன்னரே யறிவேனாயின்;

விண்ணுலகத்தைக் குறித்து மேலெழுந்து தேவர்களை யிடித்து நான்முகனைத் தாங்குகிற தேனுடைய தாமரையினது கொட்டையும் பொகுட்டும் சிதறும்படி அழித்துத்; தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன் செலுத்துகின்ற காரினைப் பிடித்துப்: பஞ்செழும்படி பிழிந்து அதிலுள்ள தண்ணீரைப் பருகி, ஐந்தாகப் பெயரினையுடைய கற்பக மரங்களை ஒடித்துக், கண்களுக்கும் உள்ளத்துக்கும் பொருந்தாத இகழத்தக்க வுணவையுண்டு, தாரகைக் கூட்டங்களை நெற் பொரிபோல உடலிற் குத்திக், கொல்லுந்

திறலாகிய இவைபோன்ற தீத்தொழிலைப் பெருகச் செய்து அழியாத மேன்மையினையுடைய பெரியகுருகாகிய அசுரனை மடித்து, அதனது வெள்ளிய சிறகினைத் தரித்த சிவந்த சடையையுடைய பெருமானாகிய மதுரை நாயகனது குறியும் வடிவமு மில்லாத இரண்டு திருவடிகளையும் உள்ளத்தின்கண் வைத்தவர்போலக் கூடுதலை நீங்காநின்ற மதியினையுடையனாவேன்.

## (67)

[பங்கயத்தோடு பரிவுற்றுரைத்தல்.]

வில்லை யொத்த நெற்றியையும், அம்பையொத்த விழியையுமுடைய மாதர்களது மனம்போல ஆழமுடைத்தாய்ப் பரவிக் ; கறுத்த நீர் நிறைந்த வாவியில், நெருப்பு விரிந்தாற்போன்ற பல விதழ்களையுடைய தாமரை மலரே! மிகுந்த மயலால் மூடப்பட்ட உடலுள்ள ஒருத்தியாகிய எனக்கு;

மாணிக்க மணிகளைக் கொழிக்கின்ற அருவி நீரையுடைய மலை முடியின்கண், நின் தலைவனாகிய கதிரோன் ஒளித்த நெடிய இரவில், கொக்கும், மற்றைப் பறவைகளும் அணிமையில் வரிசையாகச் சூழாநிற்பப், பெண் வண்டும் ஆண் வணடும் திருமகளுங் கூடிப் பெரிய துயிலாகிய இன்பத்தைப் பொருந்தி, நள்ளிரவிற் காணாநின்ற நின் கனவினுள் ; வேறுபட்ட மனத்தினையுடையாரைக், கொய்யப்பட்ட பிடரி மயிரையுடைய குதிரைகளைப் பூட்டிய தேருடனே, பூவுதிருங் கானற்புறத்தில் யான் கண்டேன் என்று சிறியதோருண்மையைச் சொல்வாயெனின்; முடியாற் கிழிக்கப்பட்ட நிறைந்த மதியினதுடலம் கலைந்து கலைகள் சிதறிய தோற்றம் போலவும்; சிங்கத்தினது

நகத்தாற் கிழிக்கப்பட்ட யானையினது பல மருப்புக்களைத் தூக்கித் தள்ளி மணிக் குலங்களை வீசி; உறவினரால் விரும்பப்படாத பொருளையுடையவர்களைப் போலவும்; சகோரப் பறவைகள் வெறுக்குமாறு ஒழுகிப் பெயர்ந்தொலித்துத் திரண்ட பளிக்குப் பாறைகளை உடைத்துச் சிதறுகின்றதைப்போலவும்; வழிக்கெதிரே கிடந்த கற்றூணோடு மோதி வேங்கை மலரும் பொன்னும் ஓரிடத்திற் சேர்த்து மலையில் வாழுந் தெய்வப் பெண்களுக்கு அணியப்பட்ட அணிகலமாகக் கொடுத்துப், பனைபோன்ற துதிக்கையை உள்ள மதயானையின் பிடரியிலுள்ள புழுதியை; அதன் மதத்தையுண்ணும் வண்டுகளெழுந் தாரவாரஞ் செய்ய மணிகளையெடுத்து வீசிக் கழுவி, மயில்கள் சிறையை விரித்து ஆடவும், குரங்குகள் குளிரால் நடுங்கவும், எதிருள்ள சுனையில் குவளை மலர்களைப் புறத்திற் பறித்து வீசி மலையிடமெங்கும் நிரம்பும்படி மாலை சூட்டியதைப் போலவும்;

நெடிய முகட்டின்கண் அருவியானது அகிற் கட்டைகளையும் பிறவற்றையும் அலைகளாற் கொழித்தற்கிடமாகிய, கைலை மலையில் வீற்றிருக்கின்ற நெற்றிக் கண்ணையுடைய வஞ்கிய மேலோனும்: கூத்தினையாடுகின்ற பெருமானும் ஆகிய மதுரைப் பெருமானது தாமரை மலரைத் தோற்பித்த, அழகிய திருவடிகளை உள்ளத்திலே நிறையும்படி தரித்த அன்பர்போலமனக் குறை நீங்கி இன்பமயமாவேன்.

## (68)

### [பதி பரிசுரைத்தல்.]

முத்துப் போன்ற அழகாகிய பற்களுள்ள கொடி போல்வாய்! நெருப்பாலுஞ் சுடற்கரிய பாலை நிலத்தில் பரற்பொடிகளைப் பொறுத்துக்கொண்டு நடந்தனை.

முகில்களைத் தலையின்கண் தாங்கிய வண்டுகள், எழுந் தொலிக்காநின்ற சோலையினிடத்தே கீழே வீழ்ந்த மலரில் நின்கால்களை வைத்திடுக.

கரிய காட்டினிடத்து எதிர்த்த கொடுமையான புலிக் குப் பயந்தனை, வரியுடலும் செங்கண்ணும் உள்ள வரால் மீனின் கூட்டங்கள் துள்ளியெழுதலால், கூட்டமாகிய உழவர்கள் உடைந்தோடுவதைப் பார்ப்பாயாக.

மறவர் ஏறிவந்த கொடியையுடைய தேர்களைக்கண்டு வருந்தினை. மறையோர் செல்வம் வளருமாறு மகங்களை முறையாக முடித்து, அவ்விரதத்தின் பொருட்டு நீராடல் செய்து, அழகிய உருளையையுடைய தேர்மேல் போகின் றதை நோக்குக.

வழிபறிப்போராகிய வேடர்களது பேரொலிக்கு வருந்தினை. அடிபருத்து மேல்வளர்ந்த நெற்பயிர்களை நெருங்கிப் புகுந்து செங்கழுநீர்க்களையைப் பறிப்பவரது ஓசையைக் காண்க.

நெருப்பானது தம்மிடத்தே பழுத்துள்ள பருக்கைக் கன்மேட்டை நெருங்கிவந்தனை. சுரிந்த முகத்தினையுடைய சங்கினம் நிலவு வெளிப்படவீன்ற, குளிர்ந்த வெண்முத்தக் குவியல்கள் இவற்றைக் காண்க.

நெடிய பேய்த்தேரை நீரென்று காட்டினை. முதலை களும் நெடிய கயல்களும் முன்போக்கிய வினையகத்தை யுடைய ஒன்றோடொன்று, மோதுகின்ற தொழிலைத் தன் னிடத்துள்ள அகழ் என்று பெயர்பெற்ற பெருங்கடலைக் காண்க.

ஊது கொம்பினோசையும், போர்த்தொழிற் குரிய பம்பை யொலியும் செவியேற்றனை. குடுமிவைத்த தலை யினராகிய பார்ப்பார், கரியமுகி லோசையும் நாணுமாறு

வேதப் பள்ளியில், முறைமையாக மறையோதும் மறை யொலியையும் நீ கேட்பாயாக.

தேவர்களும் முனிவர் கூட்டமும் முன் தவறு செய்து உடனே, உமாதேவி கண்களைமூட உமையும் பொன் மலைச் சிகரத்தைத் தொடர்ந்த ஒரு இளமையாகிய ஒரு மூங்கிலானது அசைவதுபோல, உலகத்திலுள்ள உயிர் களுக்கு உயிராகிய சிவபெருமான் திருமேனியைச் சேர்ந்து வளையணிந்த கைகளால் கண்களைமூட; அப்பொழுதே உலகத்திற் பரந்த இருளை விலக்கி யருளிய சூரியனும் சந் திரனும் நான்முகன் முதலாகிய விளங்காநின்ற வுயிர்க ளனைத்தும், தத்தமக்குக் காணப்படுகிற கட்புலவொளி யானது மழுங்குதலும் அவர்களது மயக்கத்தை யறிந்து, அவர்கள் மீளவுங் கண்ணொளி பெறுமாறு அழகிய நெற் றியினிடத்தே திறந்த ஒப்பற்ற விழியுள்ள கடவுளாகிய சொக்கநாதப் பெருமானாலே, பாதுகாக்கப்பட்ட மதுரை மாநகரம் இது. இவ்விடத்தைப் பார்ப்பாயாக.

## (69)

[தேருது புலம்பல்.]

மான் கூட்டத்தினுட் பெண் மான்போல மருண்டு விழிக்கின்ற கண்களையுடையாய்!

கிரௌஞ்ச மென்னும் மலையும், எழுவகையாகிய மலையும், கடலின் இடத்துக் கவிழ்ந்த முகமும், பொரியரை யாகிய வுடலுமுடைய மாமர வடிவமான சூரனைப் பரவிய நெடிய கடலும் கொல்லுந் தொழிலையுடைய அரக்கர்களும் என்னுள்ளத்தின் கண்ணுள்ள இருளுமாகிய இவற்றை நடுவிற் புகுந்து அழித்த மந்திரம் பொருந்திய திருவேலை

யும்; மயிலையுமுடைய முருகக் கடவுள்; தெய்வயானை அம்மையாரோடும் இளையவள் ளிநாச்சியாரோடும், குறித்துக் கூறப்படாத கற்பங்தோறும் நிலைபெற்றிருந்த புண்ணியமே திரண்டு வடிவங்கொண்ட, திருப்பரங்குன்ற மென்னும் மலையை ஒருபாலுடைய மதுரையம்பதியில்;

நிறைந்து வாசமாயிருக்கின்ற நஞ்சக்கறை பொருந்திய கழுத்தினையுடைய அறமே வடிவமாகிய பெருமான். அவனது பேரருளளித்த பெரிய தவத்தினரைப்போல முன்னொரு காலத்தில், எனது உடலுக்கு நீ உயிரென்று தமதுள்ளத்தைச் சான்றாக வைத்து உறுதி சொல்லிய நம் தலைவர், தமது சொல் மாறுபட்டுக் குற்றம் உண்டாகுமானால்; அஃது அவர் குற்றமன்று. நான்முகத்தொருவனாலே படைக்கப்பெற்ற காலத்தியல்போ? அல்லாமலும் முற்பிறப்பில் மயங்கி, உடலானது தேடிய கரிய கொடிய வினையால்வந்த காலக்குறியை மனந்தடுமாறிப் பொருந்திப் பின் குறித்த நமது பெரிய புத்தியினது தன்மையோ? நனவிலே சொல்ல அதைக் கனவின்கண் கண்ட உள்ளத்தில் தோன்றுங் கலக்கத்தோடு யாம் மயங்கினேமாதலால் துன்பமாக நினைந்த இதுபோழ்து உயிருடனிருத்த லொன்றுமே பொறுத்தலரிது.

## (70)

### [பொழுதுகண்டு மயங்கல்.]

ஆயிரமென்னும் எண்ணிக்கையை யுடைய படக்காட்டைத் தன்னிடத்துக்கொண்ட ஆதிசேடனென்னும் பாம்பை வாயிற் கவ்வி கரியமேகம் போலும் நிறமுள்ள கண்ணன் போற் சிறப்புற்று, நிலையான தன்னுடல் முழுவதும் அழகிய கண்களை நிறைத்துத் தேவர்கள் நின்று

துதிக்கும் இந்திரன்போலப் பெருமையுற்று, நிறம் மிகு கின்ற மரகத மணிபோலும் இறகுகளைத் தழைவாக விரித்து, முத்து முதலிய மணிகளை அலைகளொதுக்கா நின்ற கடலைப்போல அழகுற்று; முட்போன்ற பற்களை யுடைய பாம்புகளை முறித்து அவற்றினுயிரை யுண்டுவேக மாக மேகத்தின் இடி முழக்கம்போல் முழங்கிப் பஞ்ச பூதங்களு மழியும் யுக முடிவிலும் உடல் தழைந்து நிலை பெற்ற மயிலை வாகனமாக வுடையவன்.

தேவர் தலைவன் மகளாகிய தெய்வயானை யம்மையும், வனசரர்தம் மகளாகிய வள்ளிநாயகியம்மையும் இரு புடையினும் இலங்க, உலகிலுள்ளோர் வேண்டும் வரங் களைப்பெற நிறைந்தெழுந்தருளிய அருவி நீரினையுடைய திருப்பரங்குன்றத்தை அழகாகப் பக்கத்தே யுடைய மதுரை யென்னும் பதிக்கு இறைவன். பிறையை அணிந் தவன். நஞ்சக்கறை பொருந்திய கழுத்தை யுடையவன். அவனது மலர்போன்ற திருவடியை வணங்குகின்ற நமது காதலர்;

பகைவரது படை வீட்டிலுள்ளார் எதிர்த்தலை நோக்கி வேலினது முனையை உறையினின்றெடுத்த சமயத்தில்,நல்ல மத்தியான நேரத்தில் தானே சோலையினின்றும் வெளிப் பட்ட வளைந்த கண்களையும் கூரிய நகங்களையும் கூவுகின்ற குரலினையுமுடைய கோட்டானைக், கரிய கண்களையுடைய காக்கைக் கூட்டங்கள், கண்ணோட்ட மில்லாமல் வளைந்து புகை போன்ற நிறத்தினையுடைய அதனுடலைக் குத்திய கொடிய செய்கைபோல, மனத்தாலுங் கடக்கவொண்ணு மதிலைச் சூழ்ந்து எவ்விடங்களினும் கரிய நெருப்பை யெடுத்துக் காட்டிய கொடுமையைத் தராநின்ற மாலைக் காலமே! நின் வருகைக்கு யாவர் நின்னைத் தந்தவர்? நின்

வரவைக் கண்டு உடல் வருந்தினவற்றை யான் காட்டு வேன் நீ காண்பாயாக. பூமியானது நின் வரவாலுடல் பசப் படைந்து பின் கறுத்தது. ஆகாயமும் நின் வரவைப் பொருது புழுங்கிக் காற்றினல் முகம் வேறுபட்டு, உடு (நட்சத்திரம்) என்று சொல்லப்பெறுகிற கொப்புளங்களை உடல் நிறையப் பெற்றது.

இவ்விரண்டுலகினும் அடங்கியிருக்கின்ற உயர் திணை அஃறிணையாகிய உயிர்களும் தமதுடல் சில மயங்கின. சில இளைத்தன. சில உறங்கின. சில வாய்திறவாதடங்கின. சில இறந்தன. சில சோர்வடைந்தன. சில படுத்தன. என்று சொல்லப் பெறுவாயானல்; ஓ மாலைக் காலமே! என்னுயிரை வருத்துவதும் அவரது பக்கமாக நீ நிற்பதும், ஒரு புறமாக விருக்க உள்ளது சொல்லுவாயாக!

நீ தானே விண்ணிடத் திருந்து வந்தனை யென்று சொல்லுவாயானல், வருதற்கோ ரடையாள மறிந்தே னில்லை. மண்ணிடத்திருந்து வந்தன னென்று சொல்லுவா யானல் அதுவு மப்படியே. இரண்டிடத்துங் கூடி நின்றனன் என்பாயானல் உண்மைக் குறி தவறுதலில்லை. ஆதலால் ஒரு தேயத்திலிருந்து வந்தனன் என்று சொல் வாயானல், இருந்து வந்ததிக்கை யாவராலேனுங் குறிக்கப் படவேண்டும். ஆதலால் நின் வரவை எனக்கு அறிவு பெறச் சுட்டிச் சொல்ல வேண்டும்.

## (71)

[வாய்மை கூறி வருத்தந் தணித்தல்.]

தாமரைப் பூவில் வீற்றிருந்த நான்முகனைப் போல நான்கு முகங்கொண்டு, அறியத்தக்கவற்றை யறிந்த நல்ல

வுள்ளத்தில் வசித்து, வேருகிய அருளுக்குரிய பிறவியைப் பிறப்பித்துக் காட்டி, மண்ணும் விண்ணும் ஆகிய இரண் டனையும் திருவடிகளா லளந்த நெடிய திருமாலைப் போல, அரக்கர் குலத்தைத் தொலைத்து, நெய்யை யுண்டு யானைத் தோலைப் போர்த்த சிவன் போல ;

மேருவில்லைத் தாங்கிப் பகைவரது முப்புரங்களையு மெரித்து, இத்தன்மையதாக எவ்வுலகமும் தொழுதெழு தற்குக் காரணமான அழகுள்ள வேலாயுதத்தையுடைய சரவணப் பொய்கையில் தோன்றிய ஆறுமுகப் பிள்ளை யாரது திருப்பரங் குன்றஞ் சூழ்ந்துள்ள பயன் பொருந்திய மதுரைமா நகரில் ;

நிறையுள்ள இளம்பிறையை யணிந்த தலையை யுடை யவன், மாலும் நான்முகனுந் தேடி மறைகளறிந்து மறி யாத தனது வடிவி னோர் பாகத்தில் அருளாகிய பரா சக்தியை வைத்த முதல் தலைவன். அவனுடைய தாமரை மலர் போன்ற இரு திருவடிகளையும் சேராதார் சுற்றம் போலவும் ;

பொருக்கினையுடைய வளைவாகிய தாழையினிடத்தே விரிந்த மலரைக் கொக்கென்று நினைத்து, நீண்ட கழியி லுள்ள சிறிய கயல் மீன்கள் நெய்தல் மலர்க்குள்ளே மறைந்தும் ;

புன்னை மரச் சோலையில் குளிர்கின்ற முகத்தினை யுடைய தளிரினிடத்துப், பெரிய அலைகள் எடுத்தெறியா நின்ற வெள்ளிய முத்துக்களைப் புன்னை யரும்பென்று நினைத்து, அவை மலரும்படி வண்டினம் நின்று இசை பாடியும் ;

கப்பல் சுமந்து வந்து கரையி லிறக்குகின்ற யானைக் கூட்டங்களை மலை யென்று கருதிக், கடல் நீரை யுண்ட கார்க் கூட்ட மதன்மேற் படிந்து கண்ணுறங்கியும் ;

விளங்குகின்ற பவழங்களின் கிளைக் கொடிகளை வடவாக்கினியின் சுடரென்று கருதிச், சுரிமுகங் குளித்தெடுப்பவர்கள் கப்பல் மேலேறியும் ;

வெள்ளிய விருன் மீனைத் தின்ன விரும்பிப் பாய்கின்ற கொக்குக் கூட்டங்கள், கரிய கழியின் கண் மலர்ந்துள்ள நெய்தற் பூவைக் காவல் செய்கின்றவர்கள் கண்களென்று கருதி, அரவினது பற்கள் போன்ற நெருங்கிய முள்ளினை யுடைய தாழைப் புதரில் ஒளித்தும் ;

ஆகாயத்தைத் தொடும்படி யெழுந்து மறிகின்ற அலைக் கூட்டத்தைத், தேவர் தலைவன் மலைகளைச்சிறகரிந்த கொடுந் தொழிற்காகக் கடலுள் ஒளித்திருந்த மலைகளின் வரவென்று கருதிக், குளிர்ந்த மணற் கயத்தில் மாதர்கள் போய் மறைந்தும் ;

இவ்வாறு நெய்தற்றுறையி லுள்ளவை ஓரிடத்தே வளர்ந்திருந்தும் ஒன்றோ டொன்று தழுவிய உள்ளம் மாறி மயங்கிய வகை போலவும், நமது மனம் வேறுபட்டு நமது தலைவன் நம்மை விட்டு நீங்குதற் கோர் காரணம் இன்னதென்று நாமறிந்தோ மில்லை.

## (72)

[அலரறி வுரைத்தவ ளழுக்க மெய்தல்.]

பொன் மலையினது ஒப்பற்ற உடலைப்பற்றி ஒலிக்கா நின்ற அலைகடலும், எரிந்தெழாநின்ற வடவாக்கினியும், அடியிலும் நடுவிலும் பொருந்தி யிருந்தனபோலப், பசிய

தோகையினையுடைய மயிலும் சிவப்பாகிய சிறகு தழைத்த சேவலும் முறையே தாங்கியும், மலர்க் கரத்திற் றங்கியும் நிலைபெற்றுள்ள பெரிய ஒளியையுடைய உடலையுடைய வன். உலகின்கண் உள்ள உயிர்கட்கு ஒருயி ரானவன். மாமர வடிவத்தை யொத்த சூரபதுமனுக்கு இயமன். நான்முகனைத் தண்டித்தவன். அகத்திய முனிவர் பெற்ற பெரிய மந்திரப்பொருள். என்றுமுள்ள மறைகளறிதற் கரிய முதல்வன். தெய்வயானை யம்மையாரையும் வள்ளி யம்மையாரையும் இருபுறத்திலு மிருக்க வைத்தவன். இங் ஙனமாகிய எந்தை தோன்றி யருளிய திருப்பரங்குன்ற மானது தன்னுடனிருக்கப்பெற்ற, பெரிய தவத்தினர் பொருந்திய மதுரையில் மதியைத் தலையிற் சூடிய மூல காரணனாகிய கடவுளது இரண்டு திருவடிகளையும் தெளி யாத இருண்ட உள்ளமா மென்று சொல்லும்படி ;

இவளுள்ளமானது சுழலவும், அயலாராகிய பரத்தைய ருள்ளம் களிக்கவும், அரிய பொருளையுடைய திருமகட்கு மானிடப் பெண்கள் எதிர்நின்று, புல்லிதழுள்ள தாமரைப் பூவாகிய இருக்கையை அளித்தாற் போலவும் ;

மண்ணையும் விண்ணையும் நடுங்கச்செய்கின்றஒப்பற்ற வீரலட்சுமிக்குத் தேவமகளிர் போரிடத்திற்குவந்து வீரத் தைக்கொடுத்த பின்னர் இறப்பதுபோலவும்,இருள்போன்ற உடலையுடைய அரக்கியர் கலைமகளைக் கண்டு, தென் சொல்லாகிய தமிழிலும் வடசொல்லாகிய ஆரியத்திலும் இன்றியமையாத சிலவற்றைக் கொடுத்தாற் போலவும் ;

நீரில் வாழுந் தெய்வப் பெண்கள், நாகலோகத்து நங்கையர்க்குத், தீப்போ லொளிவிடும் மாணிக்கக்கூட்டங் களைத் தந்தாற் போலவும் ;

புதுமலர்க் கூந்தலையுடைய இத் தோழியானவள் போ யறிவிக்க அப்பரத்தை யறிந்ததும், அறியாது அங்கிருந்த தலைவனை அப்பரத்தைதர, இத்தலைவி பெற்ற வருத்தமான பேற்றினுக்குத் தக்கதாகிய உவமானம் இல்லை. ஆயினும் அஃது ஈங்கு உள்ளதெனின்; அப்பரத்தை தருதலால் நெடிய கற்பே ஆதாரமாக இவள் சென்று பெற்ருளென் பதுஒருவாறு தக்கதாக விருக்கும்.

## (73)

[பிரிந்தமை கூறல்.]

நான்முகனுனவன் படைத்தற்கஞ்சுகின்ற வடிவமும் அருந்ததியானவள் கற்பில் குறைந்த கற்பையும் நினைத்து மனம் நடுங்கவும், இலக்குமியானவள் மலரில் ஒளித்துக் கொள்ளவும் தோன்றிய ஒப்பற்ற பெண்ணே; இந்நாளில் இரண்டு கடல்கள் ஓரிடத்திற் சேர்ந்தது போல, நெருங் கிய போர் செய்வதற்குரிய படையையுடைய அரசர்களது போரைக் கருதிச் சென்ற நமது தலைவரது கூர்மை பொருந்திய ஆயுதமானது, கோபித்துப் போர் செய்கின்ற நெருப்பால் வளைவுள்ள கலப்பையிற் பொருந்திய, இரும் பாற்செய்த கொழுவினது நுனியாற்கிழிக்கப்பட்ட படைச் சாலினது வழியாகச் சென்று, வேகமுள்ள கயல்கள் துரத்துகின்ற மங்கையர்களது பொற்குழை யணிந்த காது போன்ற வள்ளைச் செடியில் தடைபட்டு;

அம்மங்கையரது கரிய கண்ணைப் போலக் குவளை தழைத்து மலர்ந்த இருள் பொருந்திய சோலையில், இராப் போதென்று கருதித் தங்கிய அச்சோலையுள் கட்டிய கூட்டினுள் வசிக்கின்ற, சிவந்த காலினையும் வெள்ளிய

உடலினையுமுடைய அன்னமானது, தன் பேடென்று நினைத்துச் சிறையாற் பொருந்தத் தழுவப்பெற்று அவ்வன்னங்களின் ஒலிக்குப் பொருதுநீங்கி, அச்சோலையில் தேன் பெருக்கமானது வழியுண்டுபண்ணிய வாய்க்கால் வழியே சென்று, பாசி மலர்ந்த குழைச் சேற்றிற் புகுந்து மிக்க நீர்த்துளியைச் சிந்துகின்ற வானத்தெழுகின்ற அழகிய திங்களைக் காட்டி ;

நிரம்பிய கருப்ப முதிர்ந்த வயிறு வருந்தி, முதலையும் ஆமையும் இளவெயில் காய்கின்ற மலையின் முதுகையொத்த செய்கரை மேலேறி, நிறைமதியானது உடுக்கணங்களைத் தன்னுள்ளே விழுங்கி மீண்டு முமிழ்கின்றன போலச், சுரிமுகமுள்ள அச்சூற்கொண்ட சங்கங்கள் முத்தங்களைச் சொரியும் வயல் மிகுந்த மதுரையினிடத்தே ; குவளைமலர் தங்கி விரிந்தாலொத்த மறை பிறத்தற்கிடமாகிய கண்டத்தையுடையவன். தேவர்கள் வேண்டுதலால் சிறிது நகையரும்ப, ஓரிடத்திற் கூடியிராமல் விண்ணுலகங்கள் தோறுஞ் சென்று, தேவரூர்களை யழித்துக் கெடுத்த கொடிய கொலைத்தொழிலையுடைய அரக்கர்களின் பெருமையை உடைய முப்புரங்கள் பட்ட பாடாமல்லவோ ? அந் நெருப்புக் கெதிரே பகைவர்களா லடைக்கப்பட்ட வலிமை மிக்க அரசன்.

## (74)

### [கலக்கங் கண்டுரைத்தல்.]

இத்தலைவிக்கு, மிக்க துன்பத்தை நீக்கி அறத்தை மனத்திற் குடியாக விருத்தி, அறிவின்றிச் சுருங்கிய வுள்ளத்தை விரிக்கின்ற நலஞ்சிறந்த ஒரு கல்வியானது உண்டாயிருக்கிறதென்று, நமது தலைவன் ஒரு வார்த்தை சொல்

லுதலும், பெரிய வாயையும் கொய்தா லொத்த பிடரிமயி ரினையுமுடைய சிங்கத்திஞலே சுமந்து தாங்கப்பட்ட பலவித மணிகள் பதித்துச் செய்யப்பட்ட இருக்கையில் வீற்றிருந்து; செவ்வானம் போலும் நெடிய சடையையும், சிறிய பிறையையும் மறைத்து, ஐந்தென்னு மெண்ணுற் பெருக்கப்பட்ட மூவாயிரத்தாலாகிய பதினையாயிரமென் னும் எண்பெற்ற வேறு வேருன வரிசையடுத்த, பலவகை மணிகளோடு விளங்குகின்ற திருமுடியைப் பலரும் வணங் கும்படி முடியில் சூடி;

பல தலைகளையுடைய ஆதிசேடன் என்னும் பாம்புக் குச் சுமையாகிய பெரிய பூமியைத் தனதழகிய தோளில் தாங்கி, உலகத்தைக் காக்கின்ற செல்வம் மல்கிய நாளில், தடாதகைப் பிராட்டியாரது திருவயிற்றில், நெடுநாள் தங்கியிருந்த பாண்டிய குலத்திற்கு முதலாகிய உக்கிரகுமார பாண்டியனைப் பெற்றருளிய சோமசுந்தரக் கடவுள்; அந்த உக்கிரகுமார பாண்டியனுல் வடவாக்கினியின் கொழுந்தானது சுட்டதனுல், சங்கினங்கள் ஆற்ருது தம துடலும் விளங்குகின்ற முத்தங்களும் வெறுத்து வருந்தி ஒலித்தற்கிடமாகிய பெரிய கடலானது, ஒருங்கே வெந்து பொரியுமாறு வேற்படையை விடுத்த அக்காரியத்திற்குத் தண்ணருள் செய்த யாவர்க்கும் முதல்வனுகிய பெரிய கடவுள்;

வெப்பத்தையும், தட்பத்தையும், இருவினை காரண மாகவந்த உடற்ரெருரு கைகளுக்குச் செய்யாநின்ற ஞாயிறு திங்கள்களாகிய இருசுடரையும், மற்ரெருரு சுடராகிய தீயை யும், புதுமையான கண்களாகக் கொண்டு, முன் எவற்றை யும் விதிக்கின்றவனுகிய நான்முகனுலே கொடுக்கப்படாத உடலொடு நிலைபெற்ற இயலிசை நாடகமென்னும் முத்

தமிழும் விளங்குகின்ற மதுரைப் பெருமானது, பொன்னடியைச் சொப்பனத்திலுங் காணப்பெறாத பேதையருடைய துன்பமும் ;

உள்ளதைப் பிறர்க்கும் பகுத்துக் கொடுத்துண்டு அறஞ்செய்வோரது வீட்டின் முன்சென்று, இல்லையென்னுங் கொடிய சொல்லைச் சொல்லிய இரவலரது துன்பமும், உயிரனைத்தையும் பாதுகாக்கின்ற புண்ணியரிடத்துக் கொல்லுதலென்று சொல்லியதாலாகிய குற்றமும், நன்மையை அறிதற்குக் கருவியாகிய கல்வியாளர் சொல்லிய சொல்லானது அக் கல்வி யரணைக் கைவிட்டார் இடத்துச், சென்று, அரிய நஞ்சுபோலாய வருத்தமும் ஒரு கூட்டமாகக் கூடி ஒருமிக்கப் புகுந்தாற் போலும் இருக்கின்றன.

## (75)

[முன்பனிக்கு நொந்துரைத்தல்.]

கடலாகிய பெண் வடவாக்கினியைத் தன்னிடத்து வைத்திருந்து தனதுடல் காயவும், மலைமகள் நெருப்பு வடிவாகிய உடல் ஒன்றனை அணைத்துக் கொண்டிருக்கவும், குற்றமற்ற திருமகள் தாமரை மலரிற் புகுந்து, ஆயிரமாகிய புறவிதழ் என்னும் கதவைச் சாத்தி அத்தன்மையாலுண்டாகும் வெப்பத்தைப் பொருந்தவும் ;

விசயமகள் உள்ளத்தின்கண் சீற்றத்தழலை வைத்துப் பலத்தோடு செல்லுதற்குரிய வெற்றியுள்ள போராகிய வெம்மையைப் பொருந்தவும் ;

அழகிய தண்ணளியையுடையோர் பயிலுகின்ற விதிமுறை வேள்வியைச் செய்யவும், தேவர் யாவரும் அந்த வேள்வித் தீயின் பொருட்டு வந்து சேரவும் ;

இடைக்காடனுனவன் முன் சென்றபோது அவன் பின்னே சென்று, தவஞ் செய்கின்ற விரதியர்கள் அமுதம் உண்ணுமாறு அவர்க ளுள்ளத்தி லிருந்ததுபோல, நெஞ் சிடத்தே நிறைந்து நினைப்பினிடத்தே தெரியாமல் நின்று, குற்றமற்ற அன்பினையுடையார் அறிவு (ஞானம்) பெறு மாறு குருவடிவமாக வெளிப்பட்டுத்; தேவர்களது நீண்ட முடிகளிலுள்ள மாணிக்கத்திரள்களைச் சேர்த்து, மேடாக்கு கின்ற பொன்னம்பலமாகிய பெரிய திருப்பதியினிடத்தும்;

பிறவாமைக்குக் காரணமாகிய பெரிய ஊராகிய பழமையான காசியினிடத்தும்; இன்பக் கூத்தினைக் காரைக்காலம்மையார் பெற்ற திருவாலங்காட்டினிடத்தும்;

அருமறை முடியினிடத்தும், அடியாராயுள்ளாருள் ளத்திடத்தும் ஆடியருளிய முதல்வன். நான்மறைப் பொருளை யுரைத்த தலைவன். அவனது அருந்தமிழ்க் கூடலாகிய மதுரையினிடத்திலே பெரிய பதஞ்சலி வியாக் கிரபாதர் தரிசிக்கும்படி; வெள்ளியம்பலத்தில் நடித் தருளிய நாளில் தீயோடு சுழலவும் விருப்பங்கொண்டு அந்த அக்கினியைக் கையிலேந்தவும், யானைத்தோலைப் போர்த்துக்கொள்ளவும் இவ்வகைப் பாடுபடுத்திய பனி யாகிய நோயின் இக்கூறுபாடுகள் நிற்க; அவர்களெல்லாம் அவ்வாறு துன்பத்தை யடையாநிற்ப என்னை யீன்ற தாயானவள், புகலாக விரும்பத்தக்க அன்பு தனக்கில்லா மல், பிள்ளையைப் பெறுதற்குரிய வரத்தை விரும்பினாள்.

## 76))

[மறவாமை கூறல்.]

திருமாலது நாபிக் கமலத்திற் பிறந்து, பூமி முதலிய வற்றைப் படைத்த நான்முகனது நடுத்தலையை நகத்தாற்

கிள்ளிச், சுத்தமான கலமென்று உலகத்தார் வணங்கக் கைக்கொண்டு;

வட்ட வடிவமாகவும், முக்கோண வடிவமாகவும், சதுர வடிவமாகவும், வில் வடிவமாகவும், நவகோணமாகவும், தாமரை வடிவமாகவும், வளைந்த வாயினையுடைய பருந்து வடிவமாகவும் செய்தனவாகிய வேள்விக்குழி தோறும் மறையொலியுடனே போய், அவியாகிய உணவைக் கேட்டருளிய பெரியவர் பெருமான்.

கூவுகின்ற குரலொலியானது உலகமெல்லாம் பரக்கக், கொலை செய்ய வந்த மானையும், யாவரும் நடுங்கும்படி ஒளி வீசலால், அழற் கடவுளும் வெம்மையிற் குறைவு படுகிற மழுவையும், வலக்கரத்திலும் இடக்கரத்திலும் ஏந்திய நெற்றிவிழியானது மதுரைக்கு ஒப்பானவளே !

கூட்டமான விண் மீனைத் தொடுகின்ற மதில் சூழ்ந்த அரணுள் துயர்பட்டிருந்த, பகைவருயிர்கள் தனித்தனி யாக ஒளித்து ஓடிப்போதலு மரிதென்று நினைக்குமாறு, தப்பிப் போகாதபடி மதிலைச் சூழ்ந்து முற்றுகை செய்த இருட்காலத்திலும், காவல்காத்த விடத்தும் தேவரைக் காட்டுகின்ற பாசறையிடத்தும் ;

வாசனை மிகுந்த கண்களாகிய குவளையலர்ந்து, பற்களாகிய முத்தங்கள் தோன்றிக், கைகளாகிய பசிய தாளையுடைய காந்தட்பூ மிகவும் மறித்து, வேகமாக வீசாநின்ற பனிக்காற்றுகிய நெருப்போடிருந்து;

மணிகளைப் புறத்தி லுமிழ்ந்த கழுத்தாகிய வரை பொருந்திய சங்கம் விம்மி, நான்முகன் படைத்தற்கமையாத ஓவியப்பாவை நிலைபெற்றிருந்தாற் போல, என்னுள்ளத்தையும் கண்ணையும் விட்டு நீங்காமல் தழுவியிருந்தனள்.

## (77)

### [அணைந்தவழி ஊடல்.]

சந்திரனை உடல் நிறத்தில் குறைவுபடுத்திய வெண்மையாகிய கொக்கினங்கள், மெல்லிய காலால் தடவி இளங் கயல்களைத் துரத்தியுண்டு, ஈட்டி முனையை யொத்த தமது கூரிய வாயிலுள்ள பழிக்கப்படுகிற புலால் நாற்றத்தை, நிறைமதியின் அழகை வெளிப்படுத்திய முறுக் குடைந்த வெள்ளிதழ்த் தாமரையின், மலர்ந்த மலரிலே துடைத்துக் கொள்ளுகின்ற வயல் நெருங்கிய ஊரனே !

அண்டகோளகையாகிய வீட்டிற் செல்லும் போது, தலை குனிந்து விலகி வெளியண்டத்தில் தடையற்ற மிகவும் பரந்த வெளியிடத்து; முடங்கிய உடலை நிமிர்த்த தொழிலைப் பெற்ற வாழ்க்கையினையுடைய பிளவான நுனியினைக் கொண்ட பிறை போன்ற பற்களையும், இருள் நிறத்தையுங் கொண்ட இராவணன், அமுதத்தை யுண்ணலால் கண்ணிமையாத தேவரும், தேவமகளிரும், குறவர்களும், குறத்தியருமாகிப் பூமியில் வந்து கண்களிமைத்து நெடிய மலைப்பாறையில் தேன் ஈக்கள், பூக்கள் தோறுங் கவர்ந்து சேர்த்த தேனடையின் கண்ணுள்ள தேனை உண்டு, அக் குறிஞ்சி நிலத்தாரைப் போல இடைவிடாமல் வணங்குகின்ற வெள்ளி மலையிடத்து உள்ளே நுழைந்து; அதன் முடியில் சிவனென்னும் ஒரு தெய்வமும் இருக்கின்றுது மெனத் தோளைக் கையால் தட்டிச் சிரித்து அம் மலையைத் தூக்கி ஆரவாரிக்கக், குகை திறந்தாலொத்த பத்தாகிய பெரிய வாயும், மலையை வரிசையாக வைத்தாலொத்த இருபதாகிய கைகளும், விண்ணுடையு மாறு முறையே அழவும், திக்குகள் நடுங்க முரியவும், தாமரை

மலரின் சிவப்பாகிய அகவிதழை வாடச் செய்த திருவடி யின் பெருவிரலினது நகத்தின் நுனியால், சிறிதே அம் மலையை அழுத்திய மதிமுடிக் கடவுளது பொன்னுலணியப் பட்ட மாடங்கள் பொலிவு பெற்ற மதுரைமா நகரில் கடை வீதியை ஒப்பான பரத்தையர் அறிவாராயின், ஊருணியை ஒத்த நின்மார்பைச் சேர்ந்த எனது இரண்டு முலைகளும் நன்மை யிழந்தது போல, அவர்களது இரண்டு பட்ட மனமானது வருந்தி நின்னைக்கோபிப்பார்கள். ஆத லால் என்னுடைய இந்தக் காலைத் தொடா தொழிவாயாக.

## (78)

[பொறையுவந் துரைத்தல்.]

உலர்ந்த கொம்பினையுடைய ஓமை யென்னும் மரத் தின் பொரிந்த கிளையிலுள்ள கோட்டானும், அம்மரத்தி னதுநீண்ட கோட்டிலுள்ள ஆந்தையும்தத்தஞ்சேவலோடு பறந்து சுழலாநிற்பச், சுருங்கிய விழியினையுடைய பருந்து கள், வளைந்த நகமாகிய படையால் தங் குஞ்சுகட்கு இரை தேடுமாறு பயனைக் கொண்டிருக்கின்ற பாலை நிலத்தில்; வினைப்போக மில்லாத உடலின் பொருட்டுச் செய்யத்தகுங் கடன்களைச் செய்து முடித்து, அக்கினி தத்தஞ் செய்ய அந் நெருப்பில் வேகும்போது, கையில் விளக்கை யேந்தி அப்பொழுது தனதினங்களை யழைத்துப், பிணத்தை மூடு பிரித்துப் புசிக்கின்ற பிசாசங்கள் கொடுக்கச், சூலையுடைய பேய்கள் கையேந்தி வாங்க இடாகினிகள் அதனை மறைத் துக்கொள்ள, இதனைக்கண்டு உள்ளங்களிக்கும்கருணையை யுடைய அழகிய காளியாகிய, பிறை போன்ற நெற்றியிற் கண்ணினையுடையாள். நஞ்சந் தங்கிய கண்டத்தையுடை யாள்; தேனடையில் நின்றுந் தேனுனது அருவியாக வோடுகின்ற திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள

சூர்ப் பகையினனுகிய முருகக் கடவுளைப் பெற்ற திரு வயிற்றினளாகிய உமாதேவி ஒரு பாகத்தில் விளங்கிய நகரங்களுள் உயர்வாகிய மதுரையின் கண், கொன்றை மலர்மாலை யணிந்த சடைமுடிப்பெருமானது, திருவடித் தாமரைமலர்க ளுள்ளத்தி லில்லாதார் போலப் பொய்யில் கைவந்த தலைவன், செல்லத் தகாத பரத்தைய ரில்லிற் செல்லுதலால் என்னுள்ள மானது கொழுந்து விட்டெரி கின்ற நெருப்பிற்பட்ட தேன் பொழிகின்ற தாமரை மலர் போலக் கருகியதானுல்;

அத்தலைவனது தோளில் துவண்டும், அணிந்த மாலையுள் மறைந்தும், கையால் வருடுதலைப் பெற்றும், அவனைக்கண்ட கனவிலும் போகேலென மறித்தும், அலை கடலாகிய தெய்வத்தின் முன்பு ஐயமில்லாத ஆணை வாங் கியும், பொருள் நிமித்தங் காட்டு வழிபோகாமல் தடுத்தும், பாசறைக்குச் சென்ற போது வருத்தத்தைப் பொறுத் திருந்தும், யாவருக்குஞ் செல்லுதற்கரிய வெய்ய சுரத்தில் செல்லத் துணிந்தால் அதற்கு முன்னமே மூர்ச்சித்தும், நகரங் காத்தற்குச் சென்றபோது கவலைப் பட்டும், கல்வி யின் மேற்சென்ற போது எண்ண மிட்டும், அரசனுற்றூது விடுக்கப்பட்ட போது வருந்தியும், மேல் நடக்கும் செய் திக்கு உருகியும் நின்ற இவளுக்கு நொந்த வுடலுள்ளே இருக்கின்ற சிறிய வுயிர் யாதாய் முடியுமோ? யானறி கின்றே னில்லை.

## (79)

[வாயிலவர் வாழ்த்தல்.]

அசைவற்ற ஓடையி லெழாநின்ற குமிழியைப் போன்ற விளைவாகத் தோன்றி, ஆகாயத்தி லியங்குகின்ற

உடலிற் களங்கமுள்ள மதிபோலக் குறைந்து; கீழ்மக்கள் வாயிலுண்டான சபதம் போலப் பொருளோடு கெடுகின்ற சிறிய வுணவாகிய இன்பத்தையுடைய திருத்த மில்லாத இல்லற வாழ்வைக், கக்கிய சோற்றைப் போல வறிந்து அருவருப்படைந்து, ஐம்புல வாசனையை முற்றுந்துடைத்த நன்மை யமைந்த கேள்வியை யுடையவரும்;

கிடைத்தற்கரிய பேரின்பமாகிய பெரிய வமுதத்தை யுண்டு, துறவறமென்னுஞ் செல்வியுடன் உறவு செய்து வாழ்பவரது, வாயாற் சொல்லுந் துதியினும், கண்ணின் காட்சியினும், மனத்திற் சிந்தித்தலினும் நீங்காத பேரொளி மயமாகிய தலைவன். கரிய ஒளி பொருந்திய கண்டத்தை யுடையவன்.

பூமிச் செல்வத்தை விரும்பிப் பாண்டியனோடு போர் செய்த சோழனும், அவன் சுற்றமும் விளங்கிய அவனது நால்வகைப் படையும், வலிமையும், இறுமாப்பும், வெற்றி கொள்வே மென்னும் தெளிவும் கெட்டு, விடாக்கினி பொருந்திய வாயையுடைய நாகரது இருண்ட நாட்டில் வீழுமாறு, கொலையை மேற்கொண்டு ஆழமாகிய மடுவில் முற்பட்டு வீழ்ந்த பாண்டியனுடன் குறிகொண்டு தானும் வீழ்ந்தபோது, அதிற் புதைந்திடும்படி செய்தருளிய ஞான வலிமை பொருந்திய பெருமான்.

கடலில் மாமரத்தை வெட்டிய முருகக் கடவுளது திருப்பரங்குன்றமும், கல்வியுஞ் செல்வமும், ஆயுளும், கொடிகளும், மாடங்களும் நீடித்துள்ள அழகிய நகராகிய கூடலென்னும் திருவாலவாயின்கண், அங்கயற்கண் ணம்மையுடன் நிறைந்துள்ள பவளம் போன்ற சடையை யுடையவனது, திருவடிகளைத் தலைமேற் கொண்ட நல்ல அழகையுடைய தலைவனே!

உனதற்பமாகிய வுள்ளத்தை யுடைய பரத்தையரது ஓவிய மெழுதிய இல்லம், அவ்வாறில்லாத எமதில்லமாக வும் கேட்கத்தகாத கீழ்மைச் சொற்களைப் பேசுகின்ற கலக, மியற்றுந் தோழிகள் இவ்விடத்துள்ள தோழிகளாக வும், மல்லிகை மலர் மலர்ந்து மணத்தைச் செய்கின்ற பந்த ரமைந்த முன்னிடமும் அவ்வாறில்லாத எங்களுடைய முன்னிடமாகவும், மலர் நிறைவாகிய அவர் படுக்கையைப் போலத், தேமலர் இல்லாமையால் நுமது மனம் விருப் பங் கொள்ளாத இந்த எனது படுக்கையாகவும், நின்னுள் ளத்தை யறிந்து தனக்கு நிகழ்கின்ற உணவைக் கருதி நாணுமல், புதுமையான பொய்களை விரும்பி உள்ளே கற் பித்து, உபசாரஞ் சொல்லுகின்ற யாழோடு கூடிய பாண னும் நீயும், திருவின் வளம்பெற்ற அயலாரறிய, வரும்படி பெற்ற நல்ல தவத்தை யாம் பெரிதும் உடையேம் ஆக.

## (80)

### [வறும்புனங் கண்டு வருந்தல்.]

உள் நின்று மேலெழுந்து, பக்கங்களில் நின்று சுடர் விடுகின்ற அளவிடப்படாத அழகிய மாணிக்கத்தைப் பாதுகாத்தலானும், கொலைத் தொழில் முதிர்ந்த மதம் பொருந்திய யானைகள் மிகுந்த இடங்கடோறுஞ் சஞ் சரித்துத், தழைத்த கிளைகள் நெருங்கிச் குளிர்ச்சியோடு தளிர்த்த நெடிய தருக்களையுடைய பசிய சோலைகள் நிலை பெற்றிருத்தலானும் ;

மேலிடத்திற் பெரிய சுனையின்கண், பசிய இலைக ளோடு விரிந்த பெரிய இதழ்களையுடைய தாமரை மலர்கள் பெருகுதலானும்; பெரிய ஆகாயத்தை யளாவிய பெரிய

மதியைப் பொறுத்து அழியாத அமுதமானது நீங்காதிருத்தலானும்; நரை திரை யின்மையும், மாலையும், மகிழ்ச்சியும் ஒரு காலத்தினுங் கெடாத தேவர்கள் பொருந்தி யிருத்தலானும், நூறென்னும் எண்ணையுடைய வேள்வி காரணமாகத், தேவர் தலைமைப் பேற்றைக் கொண்டிருந்த இந்திரன்போலு மிருக்கின்ற, பொன்மதில் சூழ்ந்த மயேந்திரபுரியை யழித்த, அழகிய வேலாயுதத்தையுடைய குமாரக் கடவுளது வளமைபெற்ற திருப்பரங்குன்றத்தைப் பெரிய அரணாகக்கொண்ட பெரிய பெருமை பொருந்திய மதுரையில்; திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள பெரிய குணமலை. அரிய தவமாகிய கண்ணுடனே ஆரணியத்திலிருந்த பெரிய காசியப முனிவரிடத்தில்; பெரிய இருளையொத்த மாயையென்னும் பெண்ணானவள் பிள்ளைவேண்டுமென்று இரக்க; உவர்ப்பு முதலாயுள்ள எழுவகைச் சுவையையு மமைத்துக் கொடுத்த மெய்ப் பிண்டத்தின் அடையாளங்களுடன் தோன்றிய ஏழு நிறத்தினையுடைய சகரர்களும் ஏழணியாக நின்று, பாதலத்தி லொளிக்கப்பட்ட அசுவமேதக் குதிரையைக் கண்டுபிடித்துக் கட்ட; பல முகங்களையுடைய விளக்குப்போலச் சக்கிராயுதத்தினாலே தோண்டிய ஆழமாகிய பரந்த கடலின் வயிற்றை வருத்தித் தோன்றிய ,மிகுந்த கரிய நிறத்தையுடையவிடம்காணப்படும்கண்டத்தையுடையவனதுஒலி தொழுகுகின்ற அருவிநீரும், சுடர்விடுகின்ற மணிக்கூட்டமும், நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் உண்ணத்தக்க அமுதஞ் சுரக்காநின்ற அழகிய இயலிசை நாடகமென்னும் மூத்தமிழும் மலர்தற் கிடமாகிய தெற்கின்கண்ணுள்ள பொதிகையில்; சந்தனச் சோலைகள் நெருங்கிய குளிர்ந்த சாரலின்கண் வண்டுகளுடனே பூங்கொத்துகள் மலர்ந்த கொடியே!

விண்ணிற் கிரணங்களைப் பரப்பிச் சுருக்கா நின்ற ஞாயிறாகிய நல்லகுடைக்கு, அமைந்திருக்குங்காம்புபோல மேலோங்கி யெழுந்த மூங்கிலே! மரகதமணி கிளைத்தாற் போலும் சிறையையுடைய மயிலினமே! நீலோற்பல மலரும் பெண்களது கண்ணும்போல விழித்த உடலிற் புள்ளியுள்ள மானினமே! தினையறுத்த புனங்களிலுள்ள மணியே! பசிய இழையாகிய பட்டு நூலைக் கழியிற் பரப்பி யதுபோல மூங்கிலின் கண்ணிருக்கின்ற வளைந்த வாயினை யுடைய கிள்ளையே! ஆடவர் கண்கள் சென்று மாத ரிடத்தே தடைப்பட்டாற் போலும் மதுப்பொழிகின்ற நாண்மலரிடத்துப் போதலையுடைய வண்டே! மண முதிர்ந்த பழம் பூவைத் தளிர் முகத்தில் நின்றும் சோரியா நின்ற, சந்தன மரங்களால் கிளைகள் தழைந்துள்ள சோலையே! புனத்தையழிக்கும் அழகிய கிளிகளையும், பிற பறவைகளையுமோட்டுமாறு, இரண்டு நுனிகளையுடைய கவணில் கல் வைத்து வீசுதற்குச் சிவந்த பரன்மணிகளைச் சுமந்த, நெடிய காலையுஞ் சிறிய இடத்தையுமுடைய பந்த லால் நிழல் செய்யும் பரணே! நேற்றுக் கண்ட எனக்குத் தந்த இன்பத்தை இன்று தராம லொளித்து வஞ்சித்து மன தென்னே?

இவ்விடத்தே யான் மயங்கி நிற்கும்படி விட்ட தகாத கொடுமை, முன்னே யொருவற்குப் பகிர்ந்துண்டவர், பின்பு கொடாம லொளித்த தன்மைபோல இருக்கின்றது, இவை இம்மட்டிருக்க.

எனது நிழல் போல, இப் பெரிய புனத்தின்கண் விளங்கியிருந்த அருமையுள்ள தேனை யொப்பாள் ஈங்கில் லாதபடியால், இஃது நின்புனம் அன்றென்று எனதறிவிற் குப் புலப்படுமாறு நீவிருஞ் சொல்ல வேண்டும்.

அப்புனத்திலுள்ளோர் நீவிரா யிருப்பீராயின், முன்ன மிங்குவரக் கண்டவன் யான் அல்லன் என்றுன்னுமல், தேனையொப்பாள் சென்றவழி சொல்லுதல் பெரியராஞேர் கடமையாகும்.

## (81)

[நெஞ்சொடு வருந்தல்.]

ஆரிய பாடையில் விதிக்கப்பட்ட இசை நூன்முறைப் படி பொருந்தியனவாகிய முப்பத்திரண்டு விரலளவினும், எண்பத்துநான்கு விரலளவினும் முறையே, குறுக்கமும் நீட்சியும் கொள்ளுதலைப்பெற்று அழகினதாய், ஆயிரந் தந்திகள் நிறைவாகச் சமனுறக்கட்டிய மூன்று மூலையாகச் செய்து மணிக ளிழைத்துப் பெரிய பூமியிற் கிடத்தி மன முங் கையும் விடாதுபற்றப் பிறப்பின் வேறுபாட்டின் தோற்றம்போல, ஆயிரத்தெட்டு வகையாகத் தோன்று வனவாகிய நாதங்க ளமைந்த ஆரிய பதத்தைக் கொண் டிருக்கின்ற நாரதமென்னும் பெயரினையுடைய யாழ் நன்மையைக் கொண்டிருக்கின்ற அன்புடனே மிகுதியும் வாயாற் பாடவும், பன்னிரண்டு விரலளவாகிய உடற்சுற்று முழுமையுமாகிய குறுக்கமும், தொண்ணூற்று நான்கு விரலளவாகிய நெடுமையுமாகச் செய்து, உள்ளடைத்து ஒன்பது தந்திகளைப் பொருத்தி நிலைகளை நீக்கஞ்செய்து, வரையறுத்த நிலையில் இவ்விரண்டாகச் சேர்த்து, எல்லை கட்டித் தோளிலுங் காலிலுந் தங்கவைத்து, நாதந் தோன்றுகின்ற தொழிலுண்டாம்படி தும்புருவென்னும் வீணையும், பொருந்தி நின்று பாடவும் வயிரமான வுடல் பெற்று, எண்பது விரலளவு நீட்சியுடனே நூறு தந்திரி

களா லொலிக்காநின்ற முகத்தினையுடைய சீசகமென்னும் பேரினையுடைய யாழ் பண்ணோடு பாடவும்;

முழுமதி போலும் வட்ட வடிவமாக முயலின் தோலி னால் கட்டி, நடுவில் ஒரு நரம்பாகிய மார்ச்சனை யமைத்து, அந்த நரம்பு இருபத்தாறு விரலளவு பெறும்படி இடக் கரத்தாற் கட்டி, இடப்பாலில் அமைத்து மூன்று விரலின் புறத்திலும் விரல் நுனியினிடத்தும் அறுபத்திரண்டு வகை யாகிய இசையினை, எல்லா வுயிரும் வணங்காநின்ற மருத் துவம் என்னும் பெயர் பெற்ற தேவயாழ், தூங்கலோசை யுந் துள்ளலோசையும் தழுவி நின்று பாடவும்;

நான்முகன் முதலாகிய முத்தேவருந் துதிக்க, முனி வர்க ளஞ்சலியோடு உபசரிக்கத், தேவர்கள் யாவரும் திசைகள் தோறும் வணங்கவும்; இன்பத்தைத் தரும் பசிய கொடி போல்வாளாகிய உமாதேவியானவள், இடப் பாலிருக்க, வெள்ளி மலையில் அறிவுவிளக்கந் தோன்று மாறு வீற்றிருந்தருளும், முதல்வனாகிய சொக்கநாதப் பெருமானது மதுரைமா நகரை முறைப்படி வணங்கா தாரைப்போலப்; பாம்பின் பசிய தலைபோலும் அரும்பு விரிந்த திரண்ட தாளையுடைய, அல்லியினது பச்சிலைக ளாகிய பெரிய காட்டில், மறைகின்ற மாதர் கண்ணென்று குறிக்கப்பட்ட பெரிய சேல்மீன் கூட்டத்தை, வெள்ளிய வுடலையும், கூரிய வாயையும், சிவந்த காலையுமுடைய நாரைக் கூட்டங்கள், பாம்பின் பல்லைப் போலும் பொருந் திய முண்மடல் நெருங்கிய வளைவாகிய தாழைகளிடத்து வாசனையை வீசி யலர்ந்த மலர்களோடு ஒன்றா யொளித் திருந்து, கொத்தியுண்ணுகின்ற பெரிய கழி சூழ்ந்த கடற் கரையில் உண்மையாகச் சொல்லிய பெரிய சத்தியத்தை, மின்னலைப் போல விரைவில் மறந்தவரது பிடரி மயிரினை

யும், விரைவினையும், புள்ளின் தன்மையையுமுடையகனைக் கின்ற குதிரை பூண்டதும்; பார்க்கின்ற கண்களை மறைத் தலுடையதும் ஆகிய உருளை பூட்டிய பெரிய தேரின் பின்னுற் சென்று மிகுந்த துயருறுகின்ற என் மனம்;

அத் தேர் சென்ற விடங்களெல்லாம் செல்லுதலு முண்டோ? அவர் சென்ற வினைமுற்று மளவும் அரிய தவத்தைச் செய்யுமோ? நடுவழியில் அவரைவிட்டு எனக் கெதிராக வருமோ? அல்லது நெடுநாள் அவருடனிருந்து அவர் வருங்காற் கூடவருமோ? எதுவென்று மனமே! விரைய நினைக்கவல்லேன் அல்லன் பேதமைப் படாது நிற் பாயாக.

# (82)

[காப்புச் சிறைமிக்க கையறு கிளவி.]

நஞ்சை யொத்த மாயையாகியமுளையைத் தோற்று வித்து, உள்ளத்தின்கண்ணமுக்காருகியகிளைகளையெட்டுத் திக்கிலும் பரப்பி, இருண்ட மனமாகிய தளிர்களைத் தளிர்த்து, மரத்தடியின் சுற்றளவானது ஆயிரங்காததூரம் திரட்சியாகப்பெற்று, அந்த மரமானது இருபதினுயிரங் காவததூரம் உயர்ந்து அழகிய வுடலானது சென்று, சுற்றி லும் ஐயாயிரங் காததூரம் அகன்று பரவி;

மிகுந்த வஞ்ச மாகிய பூங்கொத்துகளைத் தந்து கொடிய கொலையாகிய பிஞ்சுகளை அரும்பி, அக்கிளை முதலியவைகள் கீழே பொருந்தியதாகி மிகுந்த பழியாகிய வேர்மேலே யலைந்ததாகிய விடத்தை யொத்த மாமரத்தை வெட்டிய நெடிய வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள்;

குன்றினிடத் தமர்ந்திருந்த வள்ளியம்மையாரென்னுங்கொடியுடனே கட்டுப்பட்டுப் பன்னிரு கண்களாலும் நோக்கி, என்னிரு வினையையும் தொலைக்கின்ற அருளுக்கிடமாகிய திருப்பரங்குன்றத்தால் சுற்றி யலங்கரிக்கப்பட்ட மதுரையில்; சிறிய பிறையைத் தரித்த நெடிய சடையை உடைய ஒப்பற்றவனைத், தெய்வமென்று மதியாதார் மனம்போல, இருண்ட பெரிய இராக்காலத்தில் நிறைந்த மழையாகப் பொழிந்து மண்ணையும் விண்ணையும் தனக்குளடக்கிய தண்ணீரைக் கடந்து, தெய்வத்தினது அருளை அறியாதவர்களது மனத்தைப் போல மாறுபட்ட, கவர் வழியையும் காற்குறியாற்கண்டு, சோலைகளில் நடமாடுகின்ற கண்ணிமைத்த லில்லாத தெய்வங்களையும் பலவாகக் கண்டு, அடங்காத குறிஞ்சிப் பறையினோசையால் உறங்காத கண்ணை யுடையவர்களது காவலையும் விரைவில் நீங்கி, ஒளிர்கின்ற மணிக் கூட்டங்கள் இருளை நீக்கும் வாசலின் முன்பு, இரு முகங்களையுடைய பறைகளை அடிக்குங் கருவியாகிய குறுந்தடிபோலு முடைய வாலை, வயிற்றின் கண்ணடக்கி வளைந்து படுத்திருப்பதும், குரைத்துத் தமரென்றும் அயலாரென்றும் உண்மை யறிகின்றதும், கொலை முகத்தையுடையதுமாகிய நாய்குரைக்கின்ற வொலியை யடக்கி, வீட்டின் பின்புறத்தே வந்த நமதழகிய நீராற் சூழப்பட்ட ஊரையுடைய தலைவனை, உறங்காத நெடிய கண்ணையுடைய நந் தாயினாலே போய்விடச் செய்த நீக்கற்கரிய பெரிய இடையூறுனது எதுபோன்றிருந்த தெனின்: தரித்த மாலைகளும், இருகண்களும், உடலும், உள்ளமும் வேறுபடாத தேவர்களது அமிர்தத்தை வாயாலுண்ணுதற்கு முகத்தைச் சாய்த்த சமயத்தில், அறந்தம்மைவிட்டுக் குடிபோன வஞ்சனையில் வல்ல அரக்கர்கள் தட்டிக்காய்ந்து பூமியின்கண் சிந்தும்படி செய்த முறையை ஒத்திருந்தது.

## (68)

[மணமுரசு கேட்டு மகிழ்ந்துரைத்தல்.]

நான்கு திசைக் கடலுந் தம்முளடக்கிய நானிலத் துயிர்களையும், தேவர் தலைவனையும் அவனது நிலத்திலுள்ள தேவரையும் நடந்துபோ யழித்தும், பறந்து போயுண்டும், முத்தொழிலையுடைய தேவர்களும் உள்ளம் நடுங்கச் செய் யும் வலிய தலையையுடைய கொடிய சூரனது, கள்ளத் தன்மையாகிய வுயிரையுண்ட அழலுகின்ற வேலையுடைய குமரக் கடவுள் எழுந்தருளியுள்ள திருப்பரங்குன்றத்தை, மாணிக்கங்களோடும் பொன்னேடும் மார்பணிப் பதக்க மாகத் தரித்த, பெரிய வளப்பமுள்ள கூடலில் அரிய தவத்தினையுடையவர்களது பெருமான்; அவனது இரண்டு திருவடிகளையும் விட்டு நீங்காத, ஒருமைப்பாட்டினை யுடையவர்களது உள்ளத்தைப் போலவும், கரிய மழை பெய்தலி னொலியாலே களிக்கின்ற மயிலைப் போலவும்; மேலான வினையின்கட் சென்ற தலைவரது, உடலு முயிருந் தழைத்தற்குக் காரணமான தண்ணளியுள்ளவரவை மிகுதி யாகத் தளர்கின்ற தலைவிக்கு, எதிராக வந்து அறிவிக்க அழகாகப் படர்கின்ற முல்லைக் கொடிகளைப் போக்கிப் பிடவத்தினது மிகுதியாகச் சொரிகின்ற மலர்களை விலக் கிப், பூங்கொத்துக்களையுடைய கொன்றையானது இருக்கு மிடத்தை நீங்கிக், களாவினதலரை உதிர்த்துக், காயாவி னது புதிய மலரைப் போக்கி அரக்கி லொட்டிச் சாணை தீர்ந்த அழகிய மாணிக்கம், கால்பெற்று வந்தாற் போல அற்புதமான இந்திர கோபத்தின் நல்ல வரவானது; அவ் வருள் வரவிற்கு மிகவும் நன்மையான தூது காட்டா நிற்கும். ஆதலால் மாணிக்க விளக்க மேந்துவீர்களாக. மலர்மாலைகளை நாற்றுவீர்களாக. மலரும் பொரியுந் தூவு

வீர்களாக. தரைமெழுகிக் கோலமிடுவீர்களாக. வாசனைச் சுண்ணமும் மலர்த்தாதுகளுமாகிய இருவகைப் பொடிகளை யும் இறைப்பீர்களாக.

## (84)

[வாய்மொழி கூறித் தலைமகள் வருந்தல்.]

குற்றமற்ற ஊழானது கூட்டுவித்ததால் முன்னுளில் எழுமையுந் தொடர்ந்த அன்போடு நம்மிருவருக்கு முயி ரொன்றென்றும்; அருமையான சூளுரைத்தும்; கையா லணிகல னணிந்தும் வண்டற் சோற்றினை ஆயத்தோடிருந் தருந்தியும், வண்டற்பாவையாகிய இளமகவைப் பாராட்டி அதற்குச் சில வார்த்தை பழக்கி வைத்தும்; கையுறை தந்தும், மணத்தையுடைய தழையை யேந்தியும், உயி ரோடு தளரும்படி வருந்தியும்; வாடியும், பனைமடலாற் குதிரையும் ஓவியப்படமும் படைப்பேனென்றும்; தினை காவலில் வீசும் பொருட்டுக் கவண் கட்டிக் கொடுத்தும், தினைப்புனத்தின் மேலும் எம்முயிரின்மேலும் வந்த யானை யைக் கொன்றும்; அழுந்திய தண்ணீரில் நின்றும் மேலெடுத்தும், குளிர்மையை நீக்குமாறு அகிற் புகை கொடுத்தும்;

மணிகள் விளங்காநின்ற ஊசல் கயிறுனது அறுந்த போது கயிறிட்டு ஆட்டியும், இரவில் எம்மிடத்துத் தங்க எளிமையாக இரந்தும், அறுவடை செய்த தினைப் புனத் தின்கண் என்னைக் காணுமையாற் பெருமூச்சு விட்டும்;

மலர்களை யாராய்ந்து பறித்துக் கொடுத்தும், தங்கும் பொழிலுக்கு அடையாளங் கேட்டும், தன்னுடலோடு மணந்த கையையுடைய தாயினது துகில் சோதித்து

நீக்கிக், குழம்பாகச் செறிந்த இருளாகிய நடு இரவில் வந்து பளிக்குப் பாறையாலாகிய இல்லி லிருந்தும், குறித்த அப் பொழிலினிடத்தே நான் வந்து சேருமளவும் ஓயாம லச்சத்தால் வருந்தியும், பல நாளாக இவ்வாறு பலவகைப் பட வருந்தின தலைவர் இப்பொழுது ;

ஐந்து முகத்தையுடைய முழவமென்னும் வாச்சியம் ஒலிக்க, ஒரு காலைத் தூக்கிக் கூத்தினைத் தோற்றுவித்து, மூன்றுடல் பொருந்திய மூன்று முகத்துள் ஒவ்வோர் முகத்தில் எட்டுக் கடிப்பால் விசித்த கல்லல் என்னும் வாச்சியம் முழங்கக், கருமையாகிய பூதங்கள் கீழே நாட்டி எமக்கருளால் மகிழ்ச்சி யுண்டாக்கி, உருட்சியாகிய முகத்தையுடைய வலம்புரிச் சங்கத்தைத் தேவருலகமள வும் போய்ப் பொருந்துமாறு ஒலிக்கக் கையையுங் காலையுங் காட்டித் தலைய மென்னுங் கூத்தைத் தோற்றுவித்து, இதழ் விரிந்த தாமரை மலரையொத்த தகுணித்தமென் னும் வாச்சியம் ஒலிக்க :

நிலைபெற் றமைந்த கையால் கிளைக்கின்ற வொலிகளை எழுப்பி, யானைக்காலை யொத்த மொந்தை யென்னும் வாச்சியம் மிகுந்தொலிக்கச், சிறு பம்பை என்னும் வாச்சி யம் எழுந்தொலிக்க, நுட்பமான ஒலிகளை யெழுப்பி, மரக் கால் கட்டிய செவ்விய கரடிகை யென்னும் வாச்சியத்தி னொலி யதிகரிப்ப, மழுவேந்திக் கொடிய பாம்பணியை மேலே பூண்டு,

நெருப்புத் தளிர்த்தா லொத்த சடையில், இளம்பிறை யின் அமுதத்துடனே நிரம்பி யிருந்தாற்போல ; மதுவாற் குளிர்ந்த மத்தம் பூவையும் தரித்து, வேறொரு பிறையை மார்பினிடத்தும் வைத்தாற்போல வளைந்த முதுகை

யுடைய பன்றிக் கொம்பும், வெள்ளிய திருநீற்றுப் பொடி யும் திருவுடலில் ஒளி செய்யப் ;

பொன்மயமாக விளங்காநின்ற மன்றமாகிய சபையி னிடத்துத் திருவுளங்கொண்டு, ஒப்பற்ற உமாதேவியான வள் காண, எவ்விடத்தினு முள்ள உயிர்கள் பெருகக் கூத் தாடிய கடவுள் வீற்றிருந்து எங்கும் நிறைந்திருக்கின்ற மதுரைப்பதியைச், சொப்பனத்திலுங் கேட்டறியாத வரைப்பார்க்கினும், அன்பு சிறிது மின்றி நீங்கிச் சத்தியத் தையும் இனிய வாய்மொழியையும் சொல்லி வெளிக்குக் காட்டிப், பெரும்பாலும் வஞ்சித்தலுக்கு அவர் உள்ள மொன்றே சான்ருகு மல்லவோ ?

## (85)

[தோழி யியற் பழித்தல்.]

பசிய இலையால் மூடுதலுள்ள பெருங்கடலானது பரந் துள்ள, மணன் மிகுந்த நெய்தல் நிலமும்; ஏழு மலையையுந் தூளாக்கிய வேலனுக்குப் பொருந்துதலை விரும்பிக் ; குறிஞ்சியிலுள்ள எல்லா மலைகளும் வருகின்ற தன்மை போல, அலைகளை வரிசையாகத் திரைத்துக் கரையைக் கரைத் தழிக்கின்ற வையைப் பெருக்கத்தின் போது செய்யப்படுகின்ற விழாவிற்குப் போய் வந்தோ மென்னும் படி, பொய்யுள்ள அவ் ஒருத்தி போலல்லாமல் நீயும் மெய்ம்மையுள்ளாய். பொன்னணிகள் கலந்து கிடக்கின்ற அலங்கார முடையவனுயினை ; இனிமையைத் தருகின்ற தண்ணளி யொழிந்து கொடுங்கோலரசன் போலச் சிவந்த கண்களையுடையவனுயினை. இனிய சொல் நீங்கி ஒரு தன்மையாக நில்லாத சொல்லையுடையவனுயினை,

மலர்ச்சிக்கிட மில்லாது பக்குவ மில்லாத நாளில் தோன்றிய தாமரைப்பூப் போல, மலர்ந்து கீழே நோக்கிய முகத்தையுடையாய்! யாண்டோ மனம் போய்ப் பதியுமாறு உண்டான நகையை யுடையவனுயினை அல்லவா? இவ்விடத்தில் எனது கண்ணுல் உனது தன்மையைக் கண்ட எனது உள்ளமானது, நிலைபெற்று நின்று அடங்காமல் கொழுந்துவிட் டெரிகின்ற வடவாக்கினியானது, கருங் கடலைச் சூழ்ந்து அதனைச் சுவற்றும்படி கொதித் தெழுந்த கொடுமையினையும் கடந்து கொதிப்பதென்ருல்; போர் புரிந்து தேவருலகங்களை யழித்துப் பெரிய மலையினுள்ளே ஒளித்த கொடிய சூரனைக் கொன்ற கூரிய நெடிய வேலை யேந்தியவனும், மலை வேடர் தந்த மகளுக்கினியவனும், பறவைகளொலி தவருத இமயமலைச் சாரற் சுனையானது தன்னிடத்தே அழகாக வீன்ற குழந்தையுமாகிய தலைவன்; அவன் வாழுகின்ற பரங்கிரி யென்கின்ற மாணிக்கப் பூடணத்தைத் தன்னிடத்திற் கொண்ட நான்மறை போற்றும் மதுரைக் கிறைவன்.

விண் முதலிய அனைத்தையும் தந்தருளிய மலைமகள் தன்னேடும் அனைத்து முணர்கின்ற பேரறிவும், அனைத்தும் தன் வயத்தே யுடைமையும், பேரருளுடைமையும், முடிவில்லாத ஆற்றலும், தோற்றமில்லாத தன்மையும், பாசமின்மையும், குற்ற மற்ற நிட்களமும், விகாரமில்லாத சகளமும் இவைகளாகிய தனக்குரிய எண் குணங்களையும் தானுள்ளவாறு தரித்து;

காமம் முதலிய அறுவகைக் குற்றத்தினின்றும் நீங்கி அருச்சனையும் வணக்கமும், பெரிய சீவகாருண்ய வுள்ளமும், பெரிய அருளுக்குக் காரணமாகிய ஞான நூல் உணர்ச்சியும், எவற்றினும் பெரிய துறவும், எங்கும் நிறைந்துள்ள பொருளோடு ஒன்ருய் பொருந்துதலும், அருளை

யடைந்த அடியார் கூட்டச் சேர்க்கையும், இருளாகிய பிறவி நடுங்குதற் கேதுவாகிய ஆத்மஞானமும் ஆகிய எண் வகைக் குணங்களையும் அடியாராகிய தமக்கு மளித் தருள, அவ்வாறு பெற்ற முறைமைப்பாடுடைய அடியவர் களது; நிலையான அருட் கற்பைப் போல, நீங்காத கற்பை யுடைய தலைமகளுக்கு எதிரில் இவ்வண்ணம் சென்றனை யாயின் அவளுள்ளமானது அப்போதே நன்மையையுட் கொண்டு தணிவு பெறவுங் கூடுங்கொல்?

## (86)

### [புனலாட்டு வித்தமை கூறிப் புலத்தல்.]

சிரிப்பு மிகுதியுஞ் சேர்த்து இருவேருகிய சொல்லில், வஞ்சகமும் இன்பமும், மயக்கமும், தெளிவும் கண்ணி னிடத்தே அமிர்தமும் நஞ்சமும் வைத்துத் தமது தொழிலைச் செய்கின்ற, இருவகைப்பட்ட மனத்தையும், பொய்ம்மைப் பட்ட உள்ளத்தையுமுடைய விலைமகளை;

கண்ணன் போல ஆடையைக் கவர்ந்தும், விளங்கும் படி நான் முகனைப் பார்க்கிலும் பற்பல விதத்தைச் செய் கின்ற அவள் முகத்தைப் பெற்று அளவிடப்படாத சோதி யினாலே கூரிய கண்கள் பதியுமாறு நோக்கியும்;

தாமரை மொட்டைப் போன்ற முலையில் பூசிய சந்த னத்தை யழித்தும், மூங்கில் போன்ற தோளில் தொய்யில் வரைந்த மாரன் கரும்பு வில்லின் வடிவத்தை எழுதியும், நாரால் நீளக்கட்டிய மாலைகளையறுத்தும், மணியணிகளைக் கழற்றி, மூங்கில் போன்ற தோள் நெகிழவும், பூரித்த உடல் குழையவும், அலைக்கெதிரே தள்ளியும், பூந் துகி

லாலே கண்களை மூடியும், நல்ல நிறமுள்ள வேங்கை மலர்களின் மகரந்தத்தையும் பொற் பொடியையும் சுண்ணத்தோடு கலந்து அவளுடலிற் பூசியும் இறைத்தும் வண்டுகள் மொய்க்கச் செழித்து மலர்ந்த, மலரிதழால் தொடுத்த மாலை தரித்தும், தேனடையிற் கட்டிய புதிய தேனை உண்பித்து அவளுடன் கூடி வையை நதியில் மீளவும் சிறப்பித்த விழாவில், அவ் விலைமகளுடன் சென்ற நீயே பிளவாகிய நாவையுடைய பாம்பானது, வாய் திறந்திரையாகவுண்ட பசிய உடலையும் பெரிய வாயையுமுடைய இறப்புத் துன்பத்திற்கு உட்பட்ட தவளையும், பிளப்பாகிய வாயையும், நெருப் பெரிகின்ற கண்களையுமுடைய புலியடித்தலாலிறந்த மண்ணிற் படரும் வாலையுடைய நல்ல பிறவியுள்ள சிவந்த பசுவும்;

அவை பட்ட விடத்தே அரை மாத்திரைப் பொழுதில் உயிர்பெற் றெழுந்த சமயத்தில் விளக்கமான நெற்றிக் கண்ணும் மலைமகள் பாகமும், எரிகின்ற மழுவும் மானும் கொண்ட அருளே திருவடிவாகத் தோற்றி, விரைந்து மேற்கூறிய விடத்தாற் கொலையைத் தன்னிடத்துள்ள பாம்பையும், தீப் புகை கிளம்பும் வாயையுமுடைய புலியையும், திருந்திய தவத்தினையுடைய இருடிகள் நகைக்குமாறு, தூக்கி யாபரணமாக வணிந்து கொள்ளவும், தோலையுரித்துடையாக வுடுப்பவும், அதனைக் கண்ட முனிவரும் தேவரும் மலர்போன்ற கைகளைக் கூப்பவும், செய்கையது வல்லாமல், நான்முகனது படைப்பும் அவ்வாறே திருமாலின் பெருமையுடைய அளிப்பும், ஒருங்கு சேரத் துடைக்கின்ற பேரருளைச் செய்கின்ற ஊழியினும், மூவகைத் தொழிலுள்ளும், தன் தொழிலைத் தலைமைத் தாக்கி, ஒரு தாளின்மேல் கூர்மை கொண்ட மூன்று சுடர்போலும் பிள

வுள்ள சூலத்தின் தலைக்கட்டடங்கி, 'அரிய கதியனைத்தும் குறைவின்றி யளிக்கின்ற நகரங்களுட் சிறப்புடைத்தாகிய காசி யென்னும் திருப்பதியில் எந்த நாளினும் வெளிப்படத் தோன்றுகின்ற நீலமணி போலுங் கழுத்தினை யுடையவன்.

பெரிய கிரௌஞ்ச மலையைப் பிளந்த நெடிய வேலை யுடைய இளம் பருவத்தினன் தனது; திருப்பரங்குன்றத் தைத் தன்னினமாகப் பெற்றுள்ள மதுரைப் பெருமானது, திருவடிகளை அன்பு நிறைந்த மனத்துடன் வணங்குகின்ற பெரிய நீரையுடைய ஊரனே! எமது வீடானது புண்ணிய நதியாகிய அந்த வையைப் போலும் புதுமையாகிய தன் மையை உடையதன்று.

## (87)

[வருத்தந் தணித்தல்.]

முள்ளிலவின் சிறிய சூலானது முதிர்ந்த காயிலுள்ள பஞ்சினங்கள், பெரிய வெளியிடத்தில் தென்றல் காற்றி லகப்பட்டாற் போல, நிறையு நாணமுமாகிய காப்பானது நீங்கா நிற்பத் தனியாய் ஒரு நிலையில் நில்லாமல் சுழலு கின்ற எனதரிய துணையாகிய நெஞ்சமானது, உன்பால் பொருந்தத்தக்க பயனை நீ கேட்பாயாக. மண்ணுலகத்தார் பணிகின்ற தனது பெருமையும், குற்றமற்ற அறிவுடைமை யும், உண்மைப் பொருளை அடையத்தக்க கல்வி வளமும் தேவர் பெற்றுண்ணும் அமுதத்தின் சுவையை யுடைத்தாய் இளஞ் சொல்லாகிய குழறிய மென்மையாகிய மழலைச் சொல்லால், உள்ளத்தில் வேட்கையை உண்டாக்குகின்ற தளர் நடையை யுடைய மகனும்;

புகழ்ந்து பேசி நினதின்பத்தை யனுபவித்த மெய்ம்மையும் மாண்பும் முற்றத் துறந்த நமதிரண்டுபட்ட மனத்தையுடைய தலைவன்; பூரிப்பால் விளங்குகின்ற தனங்களைத் தழுவுவனே என்று, நீதானே அடிக்கடி வருந்தாதொழிக. இரக்கப்படுதல் (நெஞ்சில் துன்பங் கொள்ளுதல்) சிறிதுமில்லாமல் விடுவாயாக.

நெடிய முகமுள்ள கரிய காலையும், தோல் முலையையுமுடைய பெரிய பேய்கள் போர் கிடைத்துப் பகைவரறியுமாறு செல்லவும்; பெரிய வாயுள்ள ஏவற் பெண்பேய் கால்களை வணங்கித் துதித்து, அடைக்கலமாகக் கொடுத்த வெள்ளிய தசை பற்றிய வாயையுடைய குழந்தை, ஈமமானது பெரிய தீபத்தை யெடுக்க, அவ்வீமத்தின் பிணஞ்சுடும் சாம்பற் பொடியால் உடல் வருந்தவும், சுரிந்த குரலையுடைய ஆந்தையுங் கோட்டானும் அருகில் நாவால் ஒலி செய்யவும், பெரிய நரிகள் ஊளையிடவும், பருந்துங் காக்கையும் சிவந்த காதையும் பிளவாகிய வாயையுமுடைய சேவலுடன் பெண் கழுகுகளும் இட்ட செவ்விய பந்தருக்கு நடுவே நடுவே, நட்ட கால்களை யொப்பப், பட்டுப்போயுலர்ந்த கள்ளியினிடத்துத் துயில்கொள்ளும் இலையுலர்ந்த சுள்ளி பொருந்திய பாலையுள், தேவர் வணங்கித் துதிக்கப் பசிய துளப மாலையையும், பச்சை நிறக் கிளியையும், மயிலிறகுகளையும் சூலத்தையும், முறையே தோளினிடத்தும் முன் கையிலும் இடையிலும் கையிலும் நீங்காமல் வைத்துப்; போர் செய்தலில் வலிமை மிக்க அரக்கர்கள் எதிர்த்த போது போர் புரிந்து அழித்த மூன்று கண்களும் பிறை போற் பல்லும் எட்டுத் தோள்களுமுள்ள காளி கண்டு கூத்தின் வேறுபாட்டைப் பார்த்து உள்ளத்தில் மகிழ்ச்சி மிக;

மறைச் சிலம்பொலிக்கின்ற திருவடிவாகிய ஒரு தாமரைப்பூ, ஆகாயத்திலுள்ள கங்கையினிடத்தே பொருந்தி மலரவும், ஒரு திருவடியானது ஏழு பாதலத்திற்கும் அப்பாற் கடந்து செல்லவும், திண்ணிய புயங்களும் பத்துத் திசையையும் தாமே கடந்து ஊடுருவா நிற்பவும், ஒப்பில்லாத கூத்தை யாடியருளிய திருவடிகளையுடைய பெரியோனது கூடலாகிய மதுரையினிடத்தே சொக்கலிங்கத்தைப் பரவி ஒழியாமல் நிலைபெற்று நினையாதவரது உள்ளத்தைப் போல. (வருந்துதலை விடுவாயாக என்று கூட்டுக.)

## (88)

[பாணனொடு வெகுளுதல்.]

குவளை மலரையொத்த கூர்மையான கண்களையும், வெள்ளிய ஒளி பொருந்திய பற்களையும், சிறிய வளையலையும், மடப்பத்தையுமுள்ள எனது தோழியே! ஊரார் சிரித்துப் பயப்பட ; ஏவப்பட்ட ஒரு விருந்தைக் கேட்பாயாக.

முருக்க மரம் அலர்ந்தா லொத்த ஒளி பொருந்திய மிகுந்த செம்மையுள்ள சூட்டையுடைய, இளமை நீங்காத வரி பொருந்திய சிறு முள்ளோடு கூடிய காலாகிய கூரிய அரிவாளினையும், தோகையையுமுடைய அழகிய கோழிக் கொடியை உயர்த்தோனது திருப்பரங்குன்றஞ் சூழ்ந்திருக்கின்ற மதுரையின்கண் ; மழுப்படையை அழகிய கையினிடத்தேந்திய அருளையுடைய பெரிய உலக காரணன், உலகிலுள்ள அனைத்துயிருமாகிய மக்களையுடைய உமாதேவிக்கு ; ஒரு பாகந் தந்து உயிராகிய மக்கட்கு இன்பத்தை வகுத்தருளிய மெய்த் துறவையுடையானது

தாமரை மலரை நீரிற் போக்கிய அன்பர் பெறும் பதமாகிய இரண்டு திருவடி மலரையும் அழகிய முடிமேற் கொண்ட நமது வயலான் வளப்ப மல்கிய ஊரருடனே; அவரான் வளர்க்கப்பட்ட ஆட்டுக் கடாவைப்போலத் திரிகின்ற பாணனென்று குறிப்பாய் நாமே யறியோம்.

நம்முடைய மணியால் விளங்கும் முற்றத்தில், ஒருகா ரொழியாமல் நின்று, அவ்வூரரது புன்மையும், அவரது குடிப் பிறப்பிற்குத் தகுதியில்லாத சொல்லும், இல்லாத வசையுமாகிய தனது புன்சொற்களை, முன்னம் எந் தங்கைய ராகிய பரத்தைய ருடலில் சொல்லியவைபோல நம்மிடத் தில் மிகுதியாகச் சொல்லியும்; ஒன்று பத்து ஆயிரமாக நாம் நம்பும்படி சிறப்பித்தும், அவனுற் புனையப்பட்ட பொய்யின் விரிவு முழுவதும் உனக்குச் சொல்லப் புகுந் தால், அடங்கா வலிமை பெற்ற சகரர்கள் ஏழென்னும்படி தோண்டிய பெரிய அலை வீசுகின்ற ஞாயிறு உதித்தற்கிட மாகிய கடலின் உள்ளிருக்கின்ற பொருள்களை, இவ்வுலகம் காணும்படி பேர்த்தெடுத்துக் காட்டவல்ல பழமையுண் டெனில் அதனை ஒக்கும்.

## (89)

### [பாணனைப் புடைத்தமை பாங்கிக்குரைத்தல்.]

இலவ மலரைப் பழித்து, அனிச்சப் பூவை வாடச் செய்து, தாமரைப் பூவைக் குவியச் செய்த அழகிய கால் களையுடைய பாங்கியே! ஒரு பரிகாசம் நடந்ததைப் புதுமையாகக் கேட்பாயாக.

பிரபஞ்சமெல்லாம் தன் முன்னிலையில் தோன்றுமாறு தானசைவற வீற்றிருந்த காட்சியும், தன்னிடத்திலுண்டா

கித் தானதிற்றேயாத தனியான வியாபகனுகி எங்கும் நிறைந்துள்ள ஒப்பில்லாத ஒரு வடிவத்தில், சிவன் சக்தி என்று இரு வடிவாகிப் பழமையான மறைப் பொருளா யுள்ளவன்;

நான்மறையையு முணர்ந்த இருடிகளது, மூன்றழலா லோங்கிய வேள்வியில் புகுந்து, அரக்கர்கள் அவியை யுண்டழிக்காநின்ற அத்தன்மையே போலப், பச்சிலைகளை மறைத்து மிகுதியாகப் பூத்தெழுந்த தாமரை மலர் நிறைந்த பொய்கையுள், எருமைப் பகட்டினங்கள் வீழ்ந்து கலக்கா நின்ற மதுரை நாயகன். இயமனை வெகுண்டவன். அந்தக் கடவுளது திருக் கூத்தைச் சிந்திக்காநின்ற நமது அலை வீசும் புனலூரனுக்கு, எமக்குத் தங்கையாய வந்த பரத்தையைப் பாண்பாடுந் தொழிலையுடைய கீழ்மகன், சேர்த்து வைத்தது கருதி, எம்பாலுள்ள தோழிமார் கூடி; இப்பாணனைக் கோலினலும் கைகளாலும் வாரினலும் அடித்ததால்; முள்ளுள்ள மூங்கில்களா லடர்ந்த வேலி சூழ்ந்த தோட்டத்தின்கண் படர்ந்த கொடிக் காய்களைக் கவர்வதற்கு வந்த சிறிய வாலுள்ள சிறிய நரியைத், தோட்டத்திற்குரியவர் புடைத்தபோது வெளிவருகின்ற மூச்சை யடக்கி, உயிர் பிரிந்த தன்மையாகக் காண்பித்து, அவ்வுரி யவர் நீங்கக் கண்டு ஓடிப் போயினவாறு ஒக்கும். இவ் வூரார் தடுக்க அவர்களை விலக்கியோடிப் போயினது.

## (90)

[பாணன் வரவுரைத்தல்.]

அலைமறிகின்ற அருவியானது ஒளியுள்ள மணிகளைக் கொழிக்கின்ற திருமுருகப் பிள்ளையாரது திருப்பரங்குன்

றத்தைத், தன்பாற் கொண்டுள்ள தெய்வத்தன்மை பொருந்திய மதுரையின்கண்; கொழுமையுள்ள நெருப்பானது கிளைவிட்டாற்போன்ற நீண்ட சிவந்த சடையையுடைய பெருமானது, பவள நிறமுள்ள திருவடித் தாமரை மலர்களைத் தலைமேற் கொண்ட நமது தலைவனை, யாவர்க்கும் பொதுவாக அமைக்கப்பட்ட, விலக்கப்பட்ட குடிவாழ்க்கையையுடைய அப்பொது மகளிரது இல்லத்திற் சேர்த்துக் கார்த்திகை நட்சத்திரம் நிறைமதி யிடத்துள்ளதோ வென்றுரைக்கப்பட்ட சுரைக்குடுவையைத் தலையிலே தாங்கப் பெற்ற இசை நரம்புகளைத் தடவுகின்ற யாழைக் கையிலெடுத்து, வாயாற்பாடும் வன்மை கொண்டதால், வயிற்றில் மூளுகின்றபசியாகிய தழலையவித்தற்குத் தாங்கமாட்டாமல் துன்புற்றுக் காற்றைப்போலெங்குஞ் சுற்றிப் பூவில் வண்டு பாடுகின்றது போலப் பாடுகின்ற தொண்டை நீர் வற்றிய மலைப்பறவைபோலத், தன்மையைஉடையகுரலைத்திறந்து உள்ளத்தி லுணவுபெறக் கருதி, ஒள்ளிய பாட்டைப்பாட முள்ளுள்ள காம்பை நீக்கிய தாமரை மலரைத் தலையில் தரித்து, ஒரு புறத்தில் வந்து நிற்கின்ற இந்த உயர்ந்த புத்தியுள்ள பாணனுக்கு, விடமெனக் கறுத்த கண்ணையுடையாய்! நீ அடுத்தாயாகி இப்போழ்தே அந்தக் கல்லைக் கொடுத்தல் வேண்டும். (கல்லை; அடிப்பதற்குக் கல்லை எனவும், உண்பித்தலுக்கு இலையினாற் செய்யப்பட்ட இலைக் கலத்தை எனவும் இருபொருள் தொனித்து நிற்கின்றது.)

## (91)

### [அன்னமோ டாய்தல்]

வெறியாடற்குரிய ஆட்டின் துளையுள்ள கழுத்தினிடத்துத் தோல் காய்த்திருப்பதைப் போல, இருக்கினும்

இறந்தாலும் உயிர்க் குறுதி உதவமாட்டாத ஏனைய தேவர் களது பொய்ந்நெறியாகிய கதியினை மெய்யென்று சொல் லாத சிவஞானமாகிய கண்பெற்ற அடியார் கூடி வணங்கும் போது, அவர் முடிகளாற் றேய்ப்புண்டு மகிழ்வுற்றுச் சிவப் பேறிய தண்டையணிந்த தாளிணையை யுடைய, முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருப்பரங்குன்றத்தை அணிகலனாகப் பூண்டு, முத்தமிழ் நூல்களாகிய மணிமாலை தரித்த, நிலைபெற்ற புகழாகிய ஆடையைக் கட்டிப், புண் ணியமென்னுங் கணவனுலாகிய பலவகைப்பட்ட வளப்பங் களைத் தனதுள்ளே ஆபரணங்களாகப் பூண்டிருக்கின்ற, தொன்மைப் பதியாகிய மதுரையில் துடிபோலும் இடை யுள்ள உமைபாகனை; அன்பினால் உள்ளத்தி லிருத்திப் பேரின்பத்தினை யனுபவியாதாரைப் போலச், சேவலுடன் கூடி முட்டையினை அடை காக்கின்ற தாழைப் புதரினில் நின்றும் வெள்ளிய நாரை அஞ்சி மேலெழும்படி நெருங்கிய அலைகள் வீசுகின்றதும் ஒலிக்கின்றதுமாகிய கடற்றுறை யை யுடைய தலைவன், கொடுத்த சோர்வைத் தணிக்கும் பொருட்டு, நீலோற்பல மலரும், கரியஅடம்பின் கொடியும், சங்கும் முறையே கண்களுக்கும் இடைக்கும் கழுத்தினுக் கும் தோல்வியடைந்து, விரிந்தும் வாடியுலர்ந்தும் முத் துக்களை யீன்றுடைந்தும் கெடுதலால்; மழுக்கமுடைய மயக்கத்தை நீக்கி அன்பாக ஒரு முறை போய்ச்சொல்ல வும் பெறுவனவோ? அவை யவ்வாறிருக்க, இவளது நடையைப் பெற்றும், இவளோடு பழகியும் ஒலித்தும், ஒரேயிடத்தில் வளர்ந்த நீர்மையை யுடைய இந்த அன் னம், அவ்வாறிவளுடன் பயின்றதன்றென்னும்படி தடைப்படாத நட்பில் குறைந்து நீங்கிய, அச்சூளினரைப் பார்க்கினும் மிகவுங் கொடியதாக விருக்கின்றது.

---

## (92)

[வழியருமை கூறி மறுத்தல்.]

பேரறிவுடைந்த பெண்கள் வரங் கேட்கவும்; தம் வழி முதலாகிய குல தெய்வத்தை வரித்து, அத் தெய் வத்தின் பொருட்டு முதலில் அடர்வாகிய காடு டலி கொடுத்துப் பரவுதல் செய்யவும்; அப் பரவுதற்குரிய அடலிலுள்ளார், நாச்குழறி யேத்தவும், பக்கம் சூழ்வாராக.

ஒரு பாஞனதுரிலத்திர்டடக் சருக் கொண்டு ஈன்ற அருமையான வள்ளிநாயகி யம்மையை நிகர்த்த தலை மகளது இரண்டு கண்கள் போலும் விளங்கா நின்ற அந்தப் பெரு நகரிடத்தி னின்றும்; விருந்தினருடன் உண்டு வாழா தவர்களது கள்ளமனம் போன்ற இருளையுடைய மேகங்களான் மிகவும் மூடப்பட்ட மழையிரவில் வழி கண்டு நீவிர் வரா தொழிவீராக.

சிங்கம் போற் சினந்த துரியோதனன் முதலிய நூற்றுவரால் நன்கு மதிக்கப்பட்ட, புறம்போய மனமுள்ள சகுனி யென்பவனுல் புள்ளி பொருந்திய சூதாடல் காரண மாக ஐவேறு தொழில்சட்கு அமைந்தவராகிய பாண்டவ ரைவருந் தோற்று;

அன்னப் பறவைகள் செந்தாமரைத் தவிசின் கண்ணி ருந்து ஒலிக்க, அவ்விடத்திற் பாய்ந்து சிச்சிலிப் பறவை, சிறிய இற வென்னும் மீனைக் குத்தி யருந்துகின்ற வயல்கள் சூழ்ந்த குருநாடாகிய தம்மா லளிக்கப்பட்ட பதியை இழந்து, முன் செய்த வினை காரணமாகப் பன்னிரண்டு வருடம் வரை; சிங்கமும் யானையும் ஒருமையாய்ப் பெருகு கின்றதும்; தருக்களின் நிழலால் தன்மையை யுடையதும்

ஆகிய காட்டில் தங்கியிருந்து அகன்ற பின்பு; இடையில் நூற்றுவரால்நடந்தவஞ்சனைமுழுமையும்கெடுத்து, விராடனுடைய பசுக்களைப் போரின் மீட்டு, ஐவருந் தம்முடைய கேடில்லாத பதியைக் கைக் கொள்ளப் பகைத்து மறு முறைப்ப. எமக்குரித்தான பூமியைப் பெறக் கருதித் தேவரீர் செல்வீரென்று வேண்டலின் அக்காரியத்தை முடிக்கச் சென்ற தூதராகிய திருமாலுக்கு, ஒரு திருவடி தந்தருளிய கருமையாகிய அழகியகண்டத்தையுடையவன். அவன் வீற்றிருக்கின்ற பெருமை நிறைந்த தெய்வத் தன்மையுள்ள கூடற்பதியை அடையாதாரது குணத்தைக் குறித்தாற் போல. (உள்ள கரிய இரவில் நீவிர் வரா தொழிக வென வினை முடிவு செய்க.)

## (93)

### [பருவங் காட்டி வற்புறுத்தல்.]

கொய்த தளிரை யொத்த வடிவினிடத்து அழகு மிக்க அணிகள் பூத்துள்ள மெல்லிய பூங்கொடியே! வண்டுகள் இசை பாடத் தொடங்கவும், புறுக்கள் குரலோசை யடங்கவும், செங்காந்தளும், அழகிய சரக்கொன்றையும் முறையே நெருப்புப் போலவும் பொன் போலவும் பூப்பவும்;

வெண் காந்தள் அரும்பிக் கலப்பைக் கொழுமுனை போல் மேலே கூம்பி நிற்கவும், பிடவஞ் செடியுங் களாவும் நிறைந்து மலரவும்;

விண்ணிடத்துத் தோன்றிய உடுக்களாகிய மலர்கள் மறையவும், இந்திர கோபங்கள் தவழவும் மணித்திரள்கள் அசை வின்றிக் கிடக்கவும், தென்ற லடங்கவும், வாடை

தலையெடுக்கவும், கண்ணில் நெருப்புப் பொறி சிதறு கின்ற பாம்புகள், புற்றின் வளையி லொடுங்கவும், உடலில் வரியுள்ள ஈயற்பறவைகள் திக்கெங்கும் எதிர்ப்படவும்;

இடியோசை யுடனே எருத்தினங்கள் எதிர் முழங் கவும், புள்ளி யரும்பிய இளமான்கள் சுழியுள்ள தலை கவிழவும், நாற்றம் பொருந்திய உடலையுடைய இடையர் கள் படலால் மூடுங்குடிலிற் புகவும்;

இடைச்சியர் தமதினத்துடன் தயிரோடு குளிரடை யவும், காயா மலர்கள் கண் போன்று மலரவும், முல்லைச் செடிகள் மாதரது பற்கள் போல் அரும்பவும், ஆண் முசுக் கள் தத்தம் பெண் முசுக்களுடன் மலைக்குகையாகிய இருப் பிடத்தில் அடங்கவும்,

மயில் கூட்டங்கள் நடனஞ் செய்யவும், காளி யாடல் ஒழியவும், வானம்பாடிப் பறவைகள் பாடுங் குரலை யெடுத் துப் பாடவும், மாமரத்திலுள்ள குயில்கள் மயங்கிக் கூவுங் குரலோசையை அடக்கவும், சந்திர கிரணத்தை யுண்ணச் சகோரங்கள் பசித்திருக்கவும், உடைந்த தேனைக் குடித்து மலையாடுகள் வெறுப்புக் கொள்ளவும்;

அகின் மரங்களைச் சுட்ட விசாலமான புனங்கள் உழுவதற்குப் பருவத்தைக் காட்டவும், வெறித்த கண்களை யுடைய வேடர் மிருகங்களின் அடிச்சுவடுகளை ஒற்றவும், மணம் புரிந்து தலைமகளுடன் சுரத்திற் செல்பவர்க்குப் போம் வழியில் அவரைத் தடுக்கப் புலி நகம் தரித்த கண்டத்தையுடைய வேடப் பெண்கள் அவ்விடத்திற் சஞ்சரியா திற்பவும், காலைக் கதிரவன் கிரணத்தைப் பெறு தற்குத் தாமரை மலர்கள் வாடவும், ஆம்பல்கள் தம்மினத்

துடனே எதிருமிடந்தோறும் மலரா நிற்பவும், சிறுமியரது ஆசைத் தீயும், கிணற்று நீரும் சுடவும், பூமி தேவியின் உடலும், திங்களும் குளிரவும், ஒலிக்கின்ற கடலினிடத்து இப்பிகள் முத்துக் கருப்பங் கொள்ளா நிற்கவும், இவை முதலிய குறிகள் தோன்றும்படி; வந்த கார் காலத்தை நீ கண்டாய். வற்றிய நீரிலுள்ள மலர்கள் வாடுதல்போல உள்ளம் வாடுதலை ஒழிவாயாக.

மறைகள் திருவடிப்பூசை செய்த திருமறைக் காட்டில், முன்னொரு காலத்து அழகிய விளக்கின் நெய்யை உண்ணு மெண்ண முற்ற காரெலிக்கு, மேலுங் கீழுமாகப் பதினுன் கென்னப்பட்ட, பெரிய வுலக முழுவதும் தந்தருளின கடவுளது மதுரைத் திருப்பதியை வாழ்த் தினவர்போலப்; பகைவரை வென்று ஒப்பில்லாத் தேர் மேல் வருந் தலைவருக்கு, இரு பக்கத்தினும் போற்றல் செய்யச் சேனைகள் நெருங்கிச் சூழ முன்னர்ப் பாசறைக்குப் போன நாள்களைத் தரை குழிய எண்ணி எண்ணி விரல்கள் தேய்ப்புண்ட செங்கையைக் குவித்து வணங்குக.

## (94)

### [பள்ளியிடத் தூடல்.]

பெரிய நிலத் தேவர்களாகிய அந்தணர் வேத வொழுக் கத்திற்குரிய நீரிறைக்கவும், அவ் வந்தணரது வேள்விக் களத்தில் மிகுந்த அவியை உண்ணவும்; சிவ பூசனைக்கு உரிமையினுலே முதல்வனுகி, அச்சிவபிரானுடனே ஏழு நாழிகையளவும் பொருந்தவும்;

இதல்லாமலும் இமைத்த லில்லாத தான், சிவனது கண்களு ளொன்ரு யிருத்தலை யாவர்க்கும் வெளிப்படுத்த வும், ஆயிரம் படத்தையுடைய ஆதிசேடன் நஞ்சைக்

கவரவும், தேவர்க ளுண்ணுகின்ற அமுதத்தை, நெடுங் காலந் தேகத்துட னிருக்கும்படி யுதவவும், உடலை விரும்பாத வீரர்கள் தன்னுடலாகிய மண்டில நெறியே செல்லவும்; திருமால் முதலிய தேவரது திகிரிப்படையைக் காட்டவும், குளிர்ச்சியாகிய சந்திரனது கலைகள் முழுவதுந் தன்னிடத்தி லொடுங்கவும்; சினந் தெழுகின்ற அரக்கர் முதலிய தீயோர் மாளவும் நான்முகனது வேள்விக் குழி விதிப்படி நடக்கவும்;

அந் நான்முகனுற் படைக்கப்பட்ட உலகங்களில் அருமையான தொழில்கள் ஓங்கவும், பசிய உடலும் பிடரி மயிருமுள்ள ஏழு பரிகளழகு பெறப்பூட்டப்பட்ட ஒற்றை யுருளைத் தேரில் ஒளிகள் எங்கும் பரவ இருளைக் கிழித் துதித்த; சூரியன் மலர்த்தின செவ்விய திருமகட்கிட மாகிய தாமரைப் பூவினிடத்து மிகுந்த தேனையுண்டு, எவ் வகைப்பட்ட இசைகள் பலவற்றினும் முதற்பட்ட இசை யாகிய செவ்வழிப் பண்ணை முறையாகப் பாடி; அத்தாம ரைப்பூந் தாதுக்களைத் தமதுடலிற்றிமிர்ந்த தளிர் போன்ற மென்மையாகிய சிறையுள்ள வண்டின் கூட்டம், பச்சைத் தண்டினையும் சில இதழ்களையுமுடைய செவ்வல்லிப் பூவி லும் கரிய தாளுள்ள நீலோற்பலப் பூவிலும் சிறிது தேனை யும் வளர்மதிப் பருவத்தில் குறைவாக உண்டு, அவற்றின் பச்சிலைப் பரப்பால் உலகத்திலுள்ளோர் செல்லமாட்டாத வழியை மயக்கத்துடனே குறித்தற்கிடமாகிய நீரால் வளப்பம் மிக்க ஊரனே! அரக்கரால் வருந்தித் தேவர்கள் வேண்ட; ஓடுகின்ற தேரினுல் பத்துத் திசைகளையும் வென்ற தசரதனுக்கு மைந்தனெனப் பிறந்து;

வீசுவாமித்திர முனிவனது வேள்வி சிறப்படைய நிறைவேற்றிக், கௌதமனுற் சபிக்கப்பட்ட பழைய கல்

லானது பெண்ணுருவாகி வரச், சனகனென்னும் மன்ன னது மிதிலை நகரில் வில்லை ஒடித்து அம்மன்னவன் மகளை மணம் புரிந்து; எரிகின்ற பரசினையுடைய இராமனது வில்லினை வளைத்துக் கைகேசி வஞ்சத்தை உள்ளே வைத்து ஏவுதலால் இல்லாளும் இளவலும் பின் தொடரக் காட்டிற் சென்று, பெரிய வேடனாகிய குகன் கங்கையைக் கடத்தி விடக் கடந்து காட்டை யடைந்து, கரன் முதலியோர் மாரீசன் கவந்தன் என்பவர்களது உயிரை வாங்கி, இரு சிறையையுடைய கழுகினத்திற்றோன்றிய சடாயுவுக்கு உத் தரக்கிரியையினை முடித்து, வீசுகின்ற காற்றின் மகனை நட் புக் கொண்டு ஏழு மராமரத்திற்கும் வாலிக்கும் பெரிய தென் கடலுக்கும், தனித்தனியே ஒவ்வோ ரம்புகளை விட்டு, அக்கடலில் அணைகட்டி இராவணனைக் கொன்று, இலங்கையை இராவணனுடன் பிறந்தவனாகிய விபீடண னுக்குக் கொடுத்து, மீண்டு தமது அயோத்திக்கு வந்து, முடி தரித் தரசியல் நடத்திய திருமாலுக்கும் நான்முகனுக் கும் இரண்டு பாகத்தையுங் கொடுத்தருளிய ஒப்பற்ற நெற்றிக் கண்ணை யுடையவன். அவன் வீற்றிருக்கின்ற மதுரையின்கண், அச்ச வடிவாகிய வேல்போன்ற கண் ணும், சிறிய வளையலையணிந்த கையுங் கொண்ட பரத்தை யர், எம்பால் வந்து நீரிங்ஙனம் புரிவது கண்டால் நும் மிடத்திலவர்க்குள்ள தண்ணளியும் நீங்கி இன்பமும் இப் போதே ஒழிக்கப்படும். ஆதலால் எமது காலைத் தீண்டுதல் செய்யற்க.

## (95)

[நெறி விலக்கிக் கூறல்.]

மின்போல விட்டுவிட்டு ஒளி விளங்குகின்ற வேலை யுடையோய்! அழகுள்ள அனிச்ச மலரானது புகையால்

மூடப்பட்டதுபோல இப்பெண் அப் பாலை வழியிற்கண்ட கானலுக்கு அஞ்சினள்.

இயமனுடைய எருமைக்கடா ஓங்கினாற் போன்ற, யானையின் மத்தகத்தில் கூரிய நகநுதியால் அறைந்து மூளையையுண்ணுகின்ற பெரிய வாயையும், படைபோற் கூரிய பல்லையுமுடைய சிங்கங்கள் வழிகள்தோறும் நெருங்குவன, அவைகளினுங் கொடியவர்களாக இயமனது வேகமாகிய நடையையும் வெற்றியையுமுடைய கொல்லுகிற தூதர் போல, அவ்வழிச் செல்வோரது தனிமையை நோக்கி அங்குச் சஞ்சரிக்கின்ற மறவர்களும் பலர்.

ஒருருளைத் தேரில் ஏழு குதிரைகளைப் பூட்டிப் பெரிய விண்ணிற் செல்லுகின்ற, எரிசுடர்க் கடவுள்; பெரிய முனிவர்களைப் போலக் குடதிசை மலையிலொளித்தனன். ஆகையால், அன்பராகிய திருவாதவூரர் பொருட்டு அருளுதற் கிடமாகிய மதுரைப் பதியிலெழுந்தருளியவனும் வெற்றியுள்ள மறையாகிய குதிரையையுடையவனும் திருவிளையாட லறுபத்துநான்குஞ் செயதருளியவனும், சுற்றப்பட்ட சடையையுடையவனும் ஆகிய கடவுளது இரண்டு திருவடிகளையும், அடைக்கலமாக வடைந்த தூயோர்போல அருளுடனே தனியாய் இறைவனே! வாடினே.

உதிருகின்ற அத்தி விதையை ஒத்த செவ்விய தினையாலாகிய சிறிய சோறும், சுவையுள்ள தேனும், விளம்பழமும், முயலிறைச்சியும், குளிர்ச்சியாகிய நீரினை வாயாலுமிழ்கின்ற சிவந்த நிறமுள்ள மேகத்தின் வடிவத்தையும், வெறித்த கண்களையும், பிளவாகிய குளம்பினையும், விரைவாகிய நடையையுமுடைய காட்டெருமைகள் தமக்கினிய கன்றுகளைக் காணாமையால், பாறைக் குழிகளிற் சொரிந்த உலர்ந்த

பாற்கட்டியும் ஆகிய இவைகள் எம்மில்லில் உள்ளன. அவற்றைப் புசித்து; மேகத்தைத் தன்னுடலின் வண்ணத் தாற் கெடுத்த பசிய கண்ணையுடைய யானை, தலையைத் தொங்கவிட்டு நின்ற தன்மையைக் காட்டுகின்ற, பெரிய மானினுடைய தோல்களால் மேற்கூரை வேய்ந்துள்ள, நெருக்கமான இடமுள்ள குடிலினிடத்து, அந்த மான் தோலாகிய பாயலில் நீவிரிருவீரு மிருந்து, இற்றையிரவில் துயில்கொண்டு, ஞாயிற்றால் இருள் அகலுமுன்னே நுமது எண்ணமுற்ற நுமக்குரிய பதியின்கண் செல்லுதல் முறைமையாகும்.

## (96)

[ஆறுபார்த் துற்ற வச்சக் கிளவி.]

வாசமுடைய குறுமையாகிய கூந்தலையும், வெள்ளிய பற்களையுமுடைய வேடப் பெண்கள் செவ்விய மணிகளை வைத்துச் சுழற்றித், தேன் கூடாகிய இலக்கில் கவண் எறிதலால், பெருகி இழியாநின்ற தேன் வெள்ளமானது காட்டாற்றில் மடுத்துப் பெருக்கெடுக்கின்ற நாட்டையுடையாய்!

சொற் சோர்விற் களிக்காநின்ற பித்தர்களுடைய அறிவானது, சிறிதுபோது தெளிவதும் இடையிட்டு மயங்குவதும் ஆகிய தன்மைபோலத், தோற்றுநின்ற நெருங்கிய இருளின் மின்னல்போலப், பகைவரது தசை நாற்றமுற்ற புகர் முகமுள்ள வேற்படையொன்றுமே பொருந்திய துணையாகக்கொண்டு, காமாதியாறு குணங்களுள் அறிவை மாறுபடுத்துகின்ற கோபத்தையுடையவர்களது, மெய்ம்மை நீங்கிய உள்ளத்தில் மேலெழுகின்ற அடர்ந்த நெருப்பையொத்த கொள்ளிவாய்ப் பேய்கள்

இடந்தோறும் எழுந்த மின்மினிகள் சுடர்தற்கிடமாகிய மலர் நிரம்பிய கள்ளி மரங்களை, அன்னையென்று அடைகின்ற நள்ளிரவாகிய பெரும்பொழுதில், வெவ்விய கிரணங்களையுடைய சூரியன் நடத்தாநின்ற ஒளி பொருந்திய இரதத்தைத், தீமைக்கெல்லாம் மூலமாகிய அரக்கர் விண்ணுலகத்தைக் கெடுத்து, இரு கைகளாலும் பிடித்தாற் போலத் தோற்றுகின்ற சோலை சூழ்ந்துள்ள, மதுரைப் பதியிலெழுந்தருளிய மங்கல குணங்களாற் பெரிய மலையை யொத்த கடவுளது, தாமரை மலரைப் பழித்த திருவடி யிரண்டனையுமடையாத தவறுடையார் சொல்போலப்; பல குறிகளை நினைத்து ஐம்பாலாகிய கூந்தலையுடையாளது மூங்கிலையொத்த தோளைத் தழுவுதலைக் காதலித்துத், தேவர் தலைவனேயென்னும்படி நிற்கின்றாயாகிய நின துயிர்க்குத் துன்பம் நேரிட்டால் தலைமகளது உயிர்க்கும் துன்பம் நேரிடல் தவறாதாகும். அந்தோ! நும்முயிரிரண்டும் நீக்கமாமென்றஞ்சும்படி அவ்வாறுளதாகாவண்ணம் என் கண் காண; இந்தக் கொடுமையாகிய வழியில் இவ்வாறு துணிந்து வருதலை, எப்போதும் நினையாதொழிவது பகைவரையழித்த வேலையுடையாய் பெரிய புகழாகும்.

| | | |
|---|---|---|
| கடவுள் வணக்கச் செய்யுட்கள் | ... | 2 |
| நூல் | ... | 96 |
| | | 98 |

இறுதி மூன்று செய்யுட்களின் உரைநடை மறுபதிப்பிற் சேர்க்கப்பெறும்.

கல்லா டத்தைக் கருத்துறக் கற்பின்
சொல்லா டத்திறம் தோன்றும் பெரிதே.

—:o:—

# ஒற்றுமை நிலைய வெளியீடுகள்

—0—

எம். இ. வீரபாகு பிள்ளை பி.ஏ., எல்.டி.

| | | R. | N. |
|---|---|---|---|
| 1 | திருவாசகம் எளியவுரை | 6 | 00 |
| 2 | திருக்குறள் எளியவுரை | 1 | 50 |
| 3 | ,, அரும்பதவுரை | 1 | 25 |
| 4 | பரமசிவன் பள்ளி வாழ்க்கை | | |
| 5 | நமசிவாயம் | | |
| 6 | அகத்தியர் தேவாரத் திரட்டு எளியவு | | |
| 7 | புத்தர் வரலாறு | | |
| 8 | அழியாப் புகழ்கொண்ட அறு பெரும் வணிகர்கள் | | |
| 9 | விறலிவிடு தூது வசனம் | | |
| 10 | பொது அறிவு அல்லது உனக்குத் தெரி (7 பகுதிகள்) | | |
| 11 | தமிழ்-இங்கிலீஷ் ஹிந்தி மொழிபெயர்ப் அப்பியாசங்கள் தமிழ் இங்கிலீஷ் பகு | | |
| 12 | ஊரும் பேரும் (தமிழ்) | | |
| 13 | ஆங்கிலக் கல்வி சாதித்ததென்ன ? | | |
| 14 | ராஜாராம் மோகன் ராய் | | |
| 15 | மகா வீரர் | | |
| 16 | கோபாலகிருஷ்ண கோக்ஹேல் | | |
| 17 | இந்தியத் தலைவர்கள் | | |
| 18 | மானிட நூல் (Anthropology) | | |
| 19 | தமிழும் தமிழரும் (எம்.இ. வீரபாகு பிள் & ராமசாமிப் புலவர்) | | |
| 20 | நீதிநெறிக் கதைகள் | | |
| 21 | சிறிப்புக் கதைகள் Part I | | |
| 22 | ஷ Part II | | |
| 23 | குதிரையின் கதை | | |
| 24 | எறும்பின் கதை | | |
| 25 | காக்கையின் கதை | | |
| 26 | குட்டிக் கதைகள் | 0 | 62 |

ஒற்றுமை ஆபீஸ், 8, வியாசராவ் தெரு, சென்னை-17.

